# தமிழ்ச் சுவடிகள் விவர அட்டவணை

தொகுதி 28



பதிப்பாசிரியர் :

முனைவர். ம. இராசேந்திரன், எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.

பொதுப்பதிப்பாசிரியர் :

நடன. காசிநாதன், எம்.ஏ.

அ.கீ.சு.நூலக வெளியீடு : எண் 405
தமிழ்நூல் வெளியீடு : 109

# தமிழ்ச்சுவடிகள் விவர அட்டவணை




தொகுதி - 28
(ஆர். 8513 - 8780)

பதிப்பாசிரியர்
முனைவர். ம. இராசேந்திரன், எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,
தமிழ்ப்புலவர்
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்,
சென்னை - 5.

பொதுப்பதிப்பாசிரியர்
நடன. காசிநாதன், எம்.ஏ.,
இயக்குநர். தொல்பொருள் ஆய்வுத்துறை. சென்னை - 113.

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்,
சென்னை - 5
தமிழ்நாடு அரசு
1997

விலை ரூ.: 146/-

G.O.M.L. Publication No : 405
Tamil Publication No. : 109

# DESCRIPTIVE CATALOGUE OF TAMIL MANUSCRIPTS IN THE GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY,

Chennai - 5




## VOLUME 28

(R.No. 8513 - 8780)

*Editor .*
Dr. M. RAJENDRAN, M.A., M.Phil., Ph.D.,
Tamil Pandit
Government Oriental Manuscripts Library, Chennai - 5.

*General Editor :*
Thiru. NATANA. KASINATHAN, M.A.,
Director, Archaeological Department, Chennai - 113.

Price Rs. : 146/-

# முன்னுரை :

சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வரும் தமிழ்ச்சுவடிகள் 16450க்கும் மேற்பட்டு உள்ளன.

இவற்றில் இலக்கியம், இலக்கணம், வரலாறு, மருத்துவம், கலை முதலிய பல பொருட்கள் நிறுவப்பட்டுள்ளன.

உலகிலேயே மிக அதிகமான தமிழ்ச்சுவடிகளைக் கொண்ட நிறுவனம் அ.கீ.சு. நூலகமே. இதனால் தமிழக அரசு நம் இனத்திற்கே பெருமை தேடித்தந்துக் கொண்டிருக்கிறது!

இத்தகைய அறிய செல்வமான தமிழ்ச்சுவடிகளைப் பலரும் எளிதில் அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக இதுவரை 27 தொகுதிகளில் தமிழ்ச்சுவடி அட்டவணைகள் வெளியிடப்பட்டுள்ளன. தற்போது வெளிவருவது 28-ஆவது தொகுதியாகும்.

பாரதம், பாகவதம், கந்தபுராணம், திருப்புகழ் முதலிய சுவடிகள் இத்தொகுதியில் விவரிக்கப்பட்டுள்ளன. இவை முன்பே அச்சில் வெளிவந்திருப்பினும் மேலாய்வுக்காக சுவடி வடிவிலுள்ள இந்நூற்கள் பாதுகாக்கத் தக்கனவே.

இரணகளவீரம் என்றொரு சுவடி இங்கு விவரிக்கப்பட்டுள்ளது. இது புதுவகை இலக்கியம் எனலாம். இரணகளம், போர்க்களம், போரின் வெற்றியைப்பபாடும் நூல் பரணி. ஆனால் போரின் வீரத்தை பாடும் நூல் தமிழகத்தே அந்நாளில் இருந்துள்ளது என்பதற்கு இரணகளவீரம் என்ற இந்தச் சுவடியே சான்று.

ஆகவே பல்லாற்றானும் பயனுடைய இத்தொகுதி வெளிவருவதற்கு ஆவன செய்த தொல்பொருள் துறை இயக்குநர் திரு. நடன. காசிநாதன் எம்.ஏ., அவர்களுக்கு என் நன்றி.

இத்தொகுப்பில் உள்ள பெரும்பான்மையான சுவடிகளுக்கு விவரம் எழுதியவர் முனைவர் ம. இராசேந்திரன் ஆவார். சில சுவடிகளுக்கு விளக்கம் எழுதியவர் முனைவர் பூ. சுப்ரமணியம் ஆவார். எல்லாச்சுவடிகளுக்கும் சிறு ஆங்கிலக் குறிப்புகளை வரைந்தது யானாகும்.

அன்புடன்

**முனைவர் சு. சௌந்தரபாண்டியன்**

எம்.ஏ., எம்.ஏ., பி.எட்., டிப். வ.மொ., பிஎச்.டி.,

காப்பாட்சியர்

# THE THREAD THROUGH THE LEAVES



Govt. Oriental Manuscripts Library, a unique institution of its kind, preserves more than 16450 Tamil manuscripts. Tamilnadu government can boast of it.

Tamil manuscripts at G.O.M.L are undoubtedly, a testimony the ancient Tamils, calibre of litracture as well as science.

Often scientific achievements of our ancestors have been winked at even by us.

Only source available to prove our anciant Tamlis Skill in science is extant palmleaf manuscripts.

Hence the importance of this volume.

DR. S. SOUNDARAPANDIAN,
M.A., B.Ed., Dip Skt., Ph.D.,
Curator, G.O.M.L,
Chennai - 5.



# முல்லைக்கலியில் யாப்புகள்

**-முனைவர் சு. சௌந்தரபாண்டியன்**
எம்.ஏ., (தமிழ்) எம்.ஏ., (ஆங்கிலம்)
பி.எட்., டிப்.வ.மொ. பி.எச்.டி
காப்பாட்சியர். அ.கீ.சு. நூலகம்
சென்னை - 5.

**சோழன் உருத்திரன்** எழுதிய முல்லைக்கலியில் மொத்தம் 17 கலிப்பாக்கள் உள்ளன.

ஒவ்வொரு கலிப்பாவிலும் பல உறுப்புகள் பயிலுகின்றன. கலிப்பாக்களில் ஊடாடும் எல்லா வகை உறுப்புகளும் முல்லைக்கலியில் வந்துள்ளவையாகக் கூற இயலாது; சான்றாக அராகம் எனும் கலியுறுப்பு முல்லைக்கலியில் இல்லை.

ஈண்டு, முல்லைக்கலியுள் பயின்றுவரும் யாப்பியல் கட்டமைப்பைக் (Prosodical Structure) காண்குவம்.

**1. தரவு :**

கலிப்பாவின் தொடக்கத்தில் வருவது; தொடக்கத்தில் மட்டும் தான் வரும். பாடலின் இடையே ஈற்றுப்பகுதிகளில் தரவு வரவே வராது தரவின் உள்ளே தனிச்சொல், சிற்றெண் போன்ற எவ்வுறுப்பும் கலக்கக் கூடாது தரவு, இருபதுக்கும் மேற்பட்ட அடிகள் கொண்டும் நடக்கலாம். தரவுக்குரிய ஓசை தெளிவான துள்ளலோசை. தரவுக்குப் பின்னே தொடர்வது தனிச்சொல். 'குட்டம்பட்ட தரவு' எனில், அத்தரவின் ஈற்றடி மூன்று சீர்களில் அமையும். குட்டம் - குறைவு. (விரல்களை குறைக்கும் நோயாதலால், அது குட்ட நோய் எனப்பட்டது. குட்டம், குஷ்டம் என்ற வடசொல்லிலிருந்து வந்தது அல்ல. குட்டம் என்ற தமிழ்ச் சொல்லைத்தான் 'குஷ்டம்' என்று எழுதிக்கொண்டு அவ்வடச்சொல்தான் மூலச்சொல் என்று வடமொழியாளர்கள் சாதிக்கின்றனர்.)

பிற ஓசைகளைக் கலவாது நல்ல துள்ளலோசை முதற்கண் தருவது தரவின் தலையாய பணியாகும்.

**2. இருசீர்ச் சின்னம் :**

ஓர் அடிக்கு இரண்டு சீர்கள் மட்டும் கொண்டு இரு அடிகளுக்கு மேற்பட்டு வரும் உறுப்பு இது. முல்லைக்கலியில் நான்கு அடிகளில் (ஒரே இடத்தில்) வந்துள்ளது இவ்வுறுப்பு குறளடியான் வந்த அம்போதரங்கமே இது.

கருத்துகள் அடிமிகுந்து வளைந்து வளைந்து வந்துக்கொண்டிருக்கும்போது, ஓசை வேறுப்பாட்டிற்காகவும், சிறு கருத்துக்களை ஆரவாரமின்றி ஓதுவதற்காகவும் இந்த யாப்பமைதி பயன்படுத்தப்பட்டது.

'ஆறுவது சினம் 'இயல்வது கரவேல்' போன்ற நீதி மொழிகளை யாக்க ஔவையார் போன்ற புலவர்களுக்கு முன்னோடியாக இருந்தது இந்த யாப்பாகும்.

### 3. முடுகியல் :

அசையானது வெகுவிரைவாக ஓடிவரின் அவ்வரி முடுகியல் பெற்ற அடி எனப்படும்.

முடுகியலில் செப்பலோசையும் வரலாம் கலியோசையும் வரலாம்.

மலர்மலி புகலெழ அலர்மலர் மணியுறை - முடுகியலடி.

கவிதைக்கு ஓசையெழில் கூட்டுவது முடுகியல் ஆகும். கருத்துச் சிறப்புக்காகவும் ஓசைச்சிறப்புக்காகவும் அசை மாற்றத்திற்காகவும் சங்கப்புலவர்கள் இதனைக் கையாண்டனர்.

ஒரே இடத்தில் செய்திகளைத் தருவதற்கு இவ்வுறுப்பு பயன்படாது.

### 4. வெண்பாட்டு :

வெண்டளை கொண்டு செப்பலோசை பெற்று நடக்கும் உறுப்பு இது. குறுவெண்பாட்டு என்பது இரண்டு அல்லது மூன்றடிகளாய் அமையும். நெடுவெண்பாட்டு நான்கடிகளில் அல்லது அதனினும் மிக்கு வரும். கலிப்பாவில் வரும் வெண்பாட்டுக்களில் சிலவிடங்களில் வெண்டளை தப்பியும் வரலாம். ஆனால் ஈற்றுச்சீர் வெண்பாச்சீராகவே வரவேண்டும்.

முச்சீரடியானொன்றும் நெடுவெண்பாட்டு என்றால் அந்நெடுவெண்பாட்டின் முன்பு, மூன்று சீர்கள் கொண்ட ஓரடி

வந்திருக்கும். இருசீரடியானொன்றும் நெடுவெண்பாட்டு என்றால் அந்நெடுவெண்பாட்டின் முன்பு இரு சீர்கள் கொண்ட ஓரடி வந்திருக்கும்.

அதுவரை துள்ளலோசையில் வந்த கலிப்பாவில்,. செப்பலோசையில் சேர்ப்பதற்கும் பயன்படும் உறுப்பு இது. பாத்திரங்களின் உளப்பாங்கை பேச்சு வாயிலாக வெளிப்படுத்தவும் இவ்வுறுப்பு ஏற்றது.

**5. சொற்சீரடி :**

உரைச் சொற்களே சீர்களாக அமைவது. 'நீறெடுப்பவை நிலஞ்சாடுபவை' - ஒரு சொற்சீரடி. சொற்சீரடி வந்த கொச்சகம். என்றால் கொச்சக உறுப்பின் இடையே ஏதாவது ஓரிடத்தில் சொற்சீரடி வந்திருக்கும். 'முட்டடியின்றிக் குறைவுச்சீர்த்தாகிய சொற்சீரடி' என்றால். அவ்வடியில் நான்கு சீர்களிலும் குறைந்த சீர்கள் இருக்கும் என்றும், அச்சீர்கள் சொற்சீர்களாக இருக்கும் என்றும் பொருள்.

**6. கொச்சக வெண்பா :**

இரண்டடிகளிலோ அதனினும் மிக்கோ வரும். ஆனால் உறுப்பினுள் ஓரிரு இடங்களில் செப்பலோசை தட்டு வரும். 'சொற்சீரடியும் ஈரடியான் ஒன்றும் சொச்சகப்பா என்றால், முன்னே ஒரு சொற்சீரடியும் அதன்பின். வேறு சீரடிகள் வந்து, இம்மூன்றடிகளின் பின்னே அககொச்சகம் வரும். கொச்சக வெண்பாக்களின் இடையே ஐந்து சீர்கள் கொண்ட அடிகளும் விரவலாம். கொச்சக வெண்பாவின் ஊடே முடுகியல் வரலாம்.

இறுக்கமான வெண்பாக்களிலிருந்து படிப்பாரை மீளவைப்பது கொச்சக வெண்பா. கலிப்பாவின் சாயலைக் காப்பாற்றுவது இது

**7. கொச்சகக் கலி :**

துள்ளலோசை கொண்டு, சிறிதும் பெரிதுமான சீர்கள் அடுக்கிவரப்பெறும் உறுப்பு. கொச்சகக் கலிப்பாவின் முன்னே கூற்று நிலையான் முற்றுப் பெற்ற ஓரடிவரின் அப்போது அக்கொச்சகக் கலி. 'ஓரடியான் என்றும் கொச்சகம் எனப்படும். முச்சீரடியும் இருசீரடியும் ஒன்றும் கொச்சகம் எனில், அக்கொச்சகக் கலியுள் மூன்று சீர்கள் கொண்ட அடி ஒன்றும், இரு சீர்கள் கொண்ட அடி ஒன்றும் வந்திருக்கும். முச்சீரான் வந்த சொற்சீரடி வந்த கொச்சகம் என்றால் அக்கொச்சகக் கலியுள். ஒரு

சீரடி வந்துளது என்றும் அது மூன்று சீர்கள் கொண்டது என்றும் பொருள்.

கலிப்பாவுக்கே உரிய சிறப்பு ஓசையைத் தரப்புலவர்கள் இந்த உறுப்பைப் பயன்படுத்திக் கொள்வர்.

**8. அம்போதரங்கம் :**

அடிநிலையில் பொருள் முடிந்து நிற்பது. குறளடி சிந்தடி. அளவடிகளால் வரும். முல்லைக்கலியில் குறளடி, அளவடியான் வந்த ஓரடி அம்போதரங்கள் இருபாக்களில் உள. சிற்றெண் போரெண் ஆகியன அம்போதரங்க உறுப்பு வகைகளே.

**10. சுரிதகம் :**

கலிப்பாவின் ஈற்றுஉறுப்பு இது. கலிப்பாவின் வேறு எவ்விடத்திலும் இது பயிலாது. ஓடிவந்த பாட்டு. சுரிவு பெற்று முடிவதால், இது சுரிதமாயிற்று. இது இருபதுக்கும் மேற்பட்ட அடிகள் கொண்டும் வரலாம். சுரிதகம் முழுவதும் வெண்டளை வந்து, வெண்பாச்சீரில் இற்றால், அது வெள்ளைச் சுரிதகம் எனப்படும்.

சுரிதகத்தின் ஈற்றடி மூன்று சீரானும் அமையலாம். பெரும்பாலும் நாற்சீரிலேயே இறும். சுரிதக உறுப்பில் ஐந்து சீர்கள் கொண்ட அடியும் விரவலாம். பல உறுப்புகள் பெற்று நடந்து வந்த கலிப்பாவானது ஓர் அறிவிப்பு ஓசையுடன் முடிவதற்காக இது பயன்படுத்தப்பட்டது. இந்த ஓசையைக் கேட்டதுமே, கலிப்பா முடிந்தது எனத் தெரிந்து கொள்ளலாம்.



# CUTS IN PALMLEAF MANUSCRIPTS : A NOTE OF RESEARCH OBSERVATIONS

- DR. S. SOUNDARAPANDIAN
M.A., M.A, B.Ed, Dip, Skt., Ph.D.,
Govt. Oriental Manuscripts Library
University Library Building
Chennai - 5.

In palmleaf manscripts, we quite often see some injuries or cuts in the sides in which matters have been incised (fig.1_)




Diligent scientific observations have revealed that those cuts crop up due to the worm's (Gastrollus indicus) dwelling and eating its food which is nothing but the leaf itself.

Innumerable samples of injured leaves in which the actual worms were just alive, have proved the above notion.

This fairly explains why we have not cuts or injuries in leaf manuscripts as in figure 2. In other words,




we can have leaves with cuts as in fig.2 and 3.



The cuts we see in leaf manuscript as in fig 1 are usual. The size of the cut suits to that worm Gastrollus indicus. This worm dwells in a particular place making a groove and it eats the leaf. After having developed into a bigger size, it tries to move up or down or sideway; but it falls. Only in this process it makes a deep cut leaves. Finally for want of air to breathe, it dies in the same pit it made!.

In single cut or pit, only one worm resides. This is the reason why we do not find cuts like fig.2.

In a tied up bundle of leaf, since the front and rear leaves are tight upon the leaf in which the worm presents, the worm is unable to roam about freely. This is the reason why we do not look at injuries or cuts as in fig.3.

The worm, as indicated earlier, eats the cellulose of the leaf residing in its groove and it leaves its excreta in the same pit.

As a result, the front and back leaves get struck to the kiddle leaf.

So, sticking together of leaves, which is very common in palm leaf bundles of manuscripts, is explained only by the above observation.

When an uncaredfor leaf bundle is just hit with your fingers on it, you can witness that a considerable quantity of mud will flow down! Part of this mud may be to dust accoumulated in the leaf bundle; but other part of the mud must be the excreta and pieces cut by the worms inside.

So, the sticking together of leaves, the presence of excreta of worms inside the bundle, the lenghty injuries or cuts on the sides of leaves, go hand in hand in a palmleaf manuscript. This phenomenon can be fully understood only above observations and deducations.

## AN UNPUBLISHED MACKENIZIE MANUSCRIPT ON LANKA : A NOTE

- DR. S. SOUNDARAPANDIAN,

M.A., M.A., B.Ed., Dip Skt, Ph.D.

Curator, Govt. Oriental Manuscripts Library,

University Library Building, Madras - 5.

**• MACKENZIE :**

Colonel Colin Mackenzie (1754-1821), a Scot, the first Surveyor General of india, had collected thousands of oriental manuscripts among which is present a rare unpublished Tamil paper manuscript entitled 'Singalaththvipak Kaifyat' (a local history of the island of sinhalam). This is being preserved at Government Oriental Manuscripts Library, Madras - 5. India under number D. 3387, the English translation of the extract of which is furnished below.

**TEXT :**

After the period of Ravana, several of 'Lankapuri pattanam' (city of lanka) and been washed out by eruption of sea. At that time the pandiyas were rulling from Rameswaram (in TamilNadu) to Ayodya (In Uttar Pradesh).

One day when the two beautiful daughters of the king Nala were playing in the garden, a lion saw the younger daughter and wanted to enjoy her. It carried her to a forest and fed her. In due course both enjoyed together and as a result she gave birth a male child with lion featurers having a tail.

One day as the mother and the child wanted to go to their native place, Kandigai, they quit the place of lion secretly and reached Kandi. Searching these two, the lion also reached Kandi. The king of Kandi ordered to kill the lion and he also proclaimed that he would give her daughter in marriage to him is he killed the lion.

The lion - shapped man, born to the lion, wanted to kill it. The lion identified its issue and told him to cut its own tongue and keep it with him saefly.

The other day, some hunters cutting a tail and ears of some other deceased lion in the froest, went to the king and gave them claiming his daughter.

Then appeared the lion's son. He asked what was the evidence that the hunters killed the same lion king had announced.

When the hunters were blinking, the lion's son explained his story.

Then the king gave his daughter to the lion's son and named the place as 'Singaththwipam' (island of Sinkala; Singam - lion).

**DATE :**

Though the date of the Manuscript is early 19th Century, the text it portrays is only remnant chronicle of the old history that was in the air since long ago.

**RESEARCH OUTLOOK :**

The above text could be anatomized in various outlooks such as anthropological, religious, historical etc.

**SYMBOLISM :**

One area where we oriental scholars fumble is that we do not know to interpret the symbolic respresentations made in the ancient treatises.

The present text contions a few symbolic presentations, one among which is the note of the tail of the lion's son.

Tail of the lion's son symbolically hinting us the formation of a new race with special body features. This may be explained in the following diagram.

The rule of Pandiyas 'upto Ayodya' may symbolically picture the domination and mighty rule of the Pandiyas in south India in general at that time.

**RELIGIOUS ASPECT :**

Hunting of lions was a common duty of the kinds of ancient Tamil soil. Even today, the gods in temples of Tamilnadu come out in procession on a particular auspicious day to "hunt lion". This is called as Parri-vettai

In this way, a relationship between the then Tamil country and the present Sri lanka is spoken in our text. Since the hunting of lions is still celebrated in temples, this text is having conspicuous religious importance.

**ETYMOLOGY :**

As to the etymology of the name sinhala, the text says that because of the lion (Singam in Tamil) the whole land was torned as 'Singalam'; but this is only to speak, again, symbolically the fact that the Sinhalase were distinct in features and they were, though resembled much with Tamils, quite different.

Present Kandi of Sri Lanka has been marked in the text as Kandigai meaning the same Kandi. (Kandi + gai=Kandigai; gai - suffix which has no considerable meaning)

**SEA ERUPTION :**

Immerse of vast settlement due to sea eruption, talked about in the text, is not something unsurmisable. Indepenent India had witnessed the wash out of Dhanuskodi from the map of India.

**FURTHER RESEARCH :**

Comparision of the Nala told in the text and the one described in Indian puranas may be a fruitful further research.

**INFERENCE :**

From the tenet of the manuscript, one can infer that the island Lankha must have been linked with India by earth once upon a time; And pursuing this researches can be built up.





## R. 8513

# சேலம் சுந்தரராசாலயம் அனுமாபன் திருமாலை

## SALEM SUNDHARARAJALAYAM ANUMAN THIRUMALAI

Pages 538-550, Lines 36 on a page.

Hanumar a devotee of Rama has been eulogised here in 50 verses. This is also an achievement of N. Kanagaraja Iyer.

தொடக்கம் :

காப்பு

"சேலத் தழகன் திருக்கோயில் மண்ணிற்கும்
கோலத் தழகன் குணத்தழகன் - சீலத்
தழகன் அனுமான் அருள்மாலை பாட
விழையு மனமே மிக.
தக்க துணையின்றி தனிப்போத லாகாதே
மிக்க துணையாக விண்(டு)டன்பன் - தொக்க தொகை
போற்றுக முக்கண்ணன் பூம்பதமும் போற்றுகவோ
ஆற்றுக செய்யுள் அளந்து."

முடிவு :

ஒப்புயர்வில் பரம்பொருட்கே உதவிபுரி பணியில்
உவந்துபுகும் சிவமயமே உவமையிலா மனத்தாய்
இப்புவியில் யாம் வணங்கி இதயநலம் பெறவே
எழில்மலியும் மாதவனே ஏற்றதிருத் தளியில்
வைப்புதவி யெமைத்திருத்த வந்தருளும் சிவமே
வாக்குமனம் அனுகரிய மறையறிந்த தலைவ
செப்புநெறி நினைநிகர்ப்பத் தெளிந்தவரு முளரே
சீராம சேவகனே சீதைபக்த மணியே.' (ரு)

### வாழ்த்து

"மாருதியின் புகழ்வாழ்க மனத்தவம்வா ழியவே
மறைமுடியின் பொருள்தெளிந்த மரபுரிவா ழியவே
சாருதிரோ பொருளையெனத் தகவிளக்கு தலைவன்
தனைமறந்த சபிரணியின் தாள்மலர்வா ழியவே

வேருதிர விழுதிர விழுந்தபெரு மரம்போல்
மிக்கவலி யிராவணனை வீழ்த்தியவன் வாழியவே
காருதிரு மழைமலிந்த கவின்சேல நகரும்
கரியமுகில் திருத்தனியும் கலந்துறவா ழியவே"

**குறிப்பு** : இந்நூல் சேலம் சுந்தரராசாலயம் அனுமான் திருமாலை என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இதன் கண்ணே சேலத்தில் வீற்றிருந்து அருளும் அனுமானின் அருளும். ஆற்றலும் பாராட்டப்பட்டுள்ளது. இராமயணக் கதையின் செய்திகளை அனுமானைப் புகழும்வண்ணம் எடுத்தாண்டுள்ளார். முழுவதும் உள்ளது. இயற்றியவர் **திரு. நா. கனகராசன், எம்.ஏ.,**

## R. 8514

## நாமக்கல் நரசிங்கமாலை
## NAMAKKAL NARASINGAMALAI

Pages 551-562. Lines 36 on a page.

Extent : 225 Granthas :

**COMPLETE :**

Poet N. Kanagaraja Iyer's view here is to devote to Narasinga Murthi of Namakkal (Salam Dt). This has been achieved is 50 verbs.

**தொடக்கம்** :

'நாமகிரி கோயில்கொளும் நாமக்கல் மாமலையில்
ஏமகிரி யென்றே இருந்தருளும் - நாமநர
சிங்கத்தைப் போற்றும் திருமாலை நம்மாழ்வார்
சங்கத்தை வேண்டும் தணிந்து

மறையோதி ஆறங்கம் வழக்கருளும் பிறநூல்
மரபுமுறை யேபயின்ற மாமறையோர் குலத்தே
நிறைவாய மனச்செல்வ நேயத்தார் நிலைத்த
நெறிசிறிது மறியாதே நித்தியதத் துவத்தை

முறையான அறிவலென முயன்றுவரு சிறியேன்
முக்கணொடு மிரணியனை முடித்தருள வெழுந்த
இறைவோனை நாமக்கல் இருந்தநரே வரியை
இதயமுற நினைகின்றேன் எத்துரைக்கத் துணிந்தே.' (க)

**முடிவு** :

'அன்புருகு பிரகலாதன் அகத்தூய்மை மதித்தோ
அவன்தந்தை இரணியனுக்களித்தவர நினைத்தோ
என்புருகு தமிழ்ச்செய்யுள் இசைகேட்க நினைத்தோ
இருக்குமுதல் மறைநான்கின் இசைசுவைக்க விழைந்தோ

மென்புமொழி விழியோடு மேன்மைபொலி முகத்தாய்
வெற்பரசர் மேருதரு வியன்குன்ற முடியில்
வன்புவிளக் கியவுருவம் வாய்த்தநர வரியே
வளர்நாம கிரியமர்ந்தாய் மகிமைவிளக் 'கினையே' (ரு)

**வாழ்த்து**

'சுரசங்கம் தொழுதேத்து தொல்பொருள்வா ழியரோ
சுருதிபுகழ் பரம்பொருளின் தோற்றமும்வா ழியரோ
வரசங்கம் புகழ்ந்தேத்தும் வரமேகு மலையின்
வருநாம கிரிசிகரம் வாழ்பவள் வாழியரோ

சரசங்கம் தலைவணங்க தருமமலி நிலத்தே
தன்துணையால் தேவியொடு தலைவனும்வா ழியரோ
நரசிங்க உருவெடுத்த நாயகன்வா ழியரோ
நாமகிரி தேவியமர் நகமுடி வாழியரோ'

**குறிப்பு** : இந்நூல் நாமக்கல் நரசிங்க மாலை என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இதன் கண்ணே. நாமக்கலில் வீற்றிருந்து அருள் வழங்கும் நரசிங்கமூர்த்தியின் பெருமை பாடப்பட்டுள்ளது இரணியன் பிரகலாதனுக்கு இடையில் நடந்த நாத்திக ஆத்திகப் போராட்டக் கதையைப் பற்றி ஆசிரியர் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார். முழுவதும் உள்ளது. இயற்றியவர் **திரு. நா. கனகராசன், எம்.ஏ.**

R 8515

# நாமக்கல் ஆஞ்சநேய மாலை

# NAMAKKAL ANJANEYA MALAI

Pages 563 - 574; Lines 36 on a page
Extent: 175 Granthas

**COMPLETE :**

Hanuman enshrined at Namakkal (Salem Dt) is the theme here. Author N. Kanagaraja Iyer. Period 20th century.

**தொடக்கம் :**

காப்பு

'நாமக்கல் வாழ்ந்தருளும் நரசிங்க னாலயத்தின்
ஏமக்கல் ஈங்கமைத்த ஏற்றத்தோர் - காமத்தை
வென்றுயர்ந்த அஞ்சனைசெய் மென்மாலை யேற்றருள
நன்றுபுகு நாயகனே நாவு

பிரபந்தம்

பொன்மலையின் முடியொன்றை யேந்தி வந்து
நரசிங்கன் பொருந்து கோயில்
நன்மலையே நாமகிரி யெனுமுறைவி
வாழ்வுவந்த நகமே யென்று
வின்மலையை யேந்துபிரான் அவதாரம்
எனப்பிறந்தே வேத வேத்தா
தன்மலைவு தானறியா அஞ்சனை செய்
தாண்மலரிற் சரணம் சார்வாய்.' (க)

முடிவு:

'இறைவனருள் எய்துநெறி விளக்கு தற்கே
அஞ்சனைசெய் இராம பக்தி
நிறைவதனை நாமுணர இராமகாதை மகாமணியாய்
நிலைமை யேற்றான்
பொறை பொருந்து மவன்கவியில் நரசிங்கன்
திருமுன்பு பொருந்தி நிற்றல்
மறைமறையும் பொருள்மனிதர் தெளிவதற்கே
யௌமுனிவர் வழக்கு வாரே (ருஉ)

### வாழ்த்து

வாழியரோ நாமகிரி மகாதேவி நிலைகொள்ளும்
வனப்பார் குன்றம்
வாழியரோ நாமகிரி தேவி திரு வடிமலராம்
தாயின் செல்வம்

வாழியரோ நரசிங்க மூர்த்தியருள் அவள்முன்பு
வணங்கு மன்பன்
வாழிரோ அவன்புகழை வழுத்துதமிழ்
மலர்மாலை வாழி நன்றே'

**குறிப்பு** : நாமக்கல் ஆஞ்சநேய மாலை என்னும் பெயரினை உடையது. இதனுள் இராமாயணக்கதையில் ஆஞ்சநேயரின் பங்குபற்றிச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. நாமக்கல்லில் கோயில் கொண்டிலங்கும் ஆஞ்சநேயரின் பெருமை கூறப்பட்டுள்ளது. முழுவதும் உள்ளது இயற்றியவர் **திரு. நா. கனகராசன், எம்.ஏ.**

## R 8516
## திரிபுராந்தக மாலை
## THIRIPURANTAKA MALAI

Pages 575-587; Lines 36 in a page
Extent 150 Granthas

**COMPLETE**

Thiripuranthakeswaran is a shrine near Trinelvelly. A form of siva has been here. Author N. Kanagaraja Iyer. Period 20th century

**தொடக்கம் :**

### காப்பு

'பாளையங் கோட்டைப் பரம சிவனென்றே
நாளையும் மக்கள் நவில்கின்ற - வேளைவென்ற
தேவன் திருபுராந்தா கேசன் திருவடிக்கே
நாவில் வரும்பா நயந்து

திருபுராந்த கேசன் திருநெல்லை சார்ந்த
திரிபுரா நன்னகரிற் சேர்ந்தான் - அரிபிரம
பாடும் பதமலரான் பாளையங்கோட் டையினான்
நாடும் திருவருளும் நன்கு

## வேண்டுகோள்

அருளினுரு விளக்கிநிற்கும் ஆனைமுகச் செல்வன்
ஆறுமுகச் செல்வனேனும் அரன்மக்க ளிருவர்
பொருளினுரு வெனதுளத்தே புகுத்துவது துணிந்தே
புராந்தக மகற்கு மாலைசெயல் புறப்பட்டே னதனால்

இருளினுரு வென்னியத் தெள்ளளவு மிருக்க
இயைபின்மை துணிகின்றே இறைவனொடு கணைக்கே
தெருளினூரு அவனென்றே செப்புவது துணிந்தேன்
சேவிக்கும் பேறுபெற்றேன் திருநெல்வே லியிலே'

முடிவு :

'ஒருவருக் கொருவர் உதவியால் இருக்கும்
உணர்ச்சியே உலகிடை யிலையே
அருவருப் புணர்வும் அவலமும் வெறுப்பும்
ஐயகோ மனத்தையே துளைக்கும்

இருவருக் குரிமை யிருப்பதென் றிசைக்கும்
இல்லறம் கடந்ததே இறைவ
குருவருட் குரியேன் என்றுநீ கருதிற்
குறிப்பிடு திரிபுராந் தகனே (ருஉ)

வாழியர் வழுதி மரபினர் வளர்த்த
மலிபுகழ்ப் பாண்டிய நிலமே
வாழியர் நெல்லைத் திருப்பதி யுறையும்
வள்ளலாம் சிவபரம் பொருளே

வாழியர் திரிபுராந் தகபுரத் துறையும்
மலைமகள் நாயகன் கழல்கள்
வாழியர் திருபுராந்தகன்திரு மாலை
வளர்வுறு பொருட்சிறப் புடனே.

**குறிப்பு** : இந்நூல் திரிபுராந்தக மாலை என்னும் பெயரினை உடையது. அதன் கண்ணே, திருநெல்வேலிக்கருகே சிறப்புற விளங்கும் திருபுராந்தகேசுவரத்தில் கோயில் கொண்டு அருள் வழங்கும் இறைவனின் பெருமை பாடப்பட்டுள்ளது. உலகியலைப் பற்றி ஆசிரியர் கூறும்போது நம்மைச் சிந்திக்க வைக்கிறார். ஒருவருக்கொருவர் உதவியாய் இருக்கும் உணர்ச்சியே உலகிடை இலையே என்றவரிகள் சிறப்பான கருத்தை விளக்குகின்றன. முழுவதும் உள்ளது. இயற்றியவர் **திரு. நா. கனகராசன் எம்.ஏ.,**

## R. 8517

## பாளையங்கோட்டை வேதநாராயணப்பெருமாள் மாலை

## PALAYANKOTTAI VEDANARAYANAPERUMAL MALAI

Pages 588-600; Lines 36 on a page.
Extent 175 Granthas

**COMPLETE**

Vedanarayanaperumal of Palayankottai has been spoken at length in 53 verbs by N. Kanagaraja Iyer. Date of composition 18.7.70.

**தொடக்கம்** :

'நெல்லைக் கருமமே நிமிர்பா ளையங்கோட்டை
எல்லைக் கழகாய் எழுந்தருளும் - தொல்லை
பரம்பொருளை வேதநா ராயணனைப் பாட
வரம் வழங்க ஆழ்வார் மரபு.

வேணுகர மேந்துபிரான் வேதநா ராயணன்முன்
வேணுகோ பாலனென மேவுதலால் - ஆணுமிகு
நெஞ்சமே ஆழ்வார் நினைப்பை யாட்கொண்டு
வஞ்சமே யின்றிவெளி வா.

இருந்த திருக்கோலம் எந்தை இருக்கிலுளான்
பொருந்து குழற்கைப் புருடன் - அருந்தமுதம்
நல்குகின்றான் நெல்லை நகர்க்கருகில் ஆலயத்தே
புல்குகின்றோம் சீர்பாதம் போது. '

முடிவு

'தனக்கெனவே வாழாத தகைமை யோரைத்
தருவதையே மறந்துவிட்டாள் தரணிச் செல்வி
எனக்கெனவே யான்வாழ்வேன் என்றான் தந்தை
எவர்பொருட்டும் நான்வாழேன் என்றாள் தாயே
நினக்கெனவே வாழ்ந்தவுயர் நெஞ்சத் தன்பர்
நிலத்தகத்தே இன்றின்மை நிலம கண்டாய்
மனக்கினிய பொருள்மறைந்த மறையினுள்ளே
வாழ்வேத நாராணனே வாழ்வை நல்கே (ருஉ)

**வாழ்த்து**

வாழியரோ நெல்வேலி வளத்தி னோடு
வாழியரோ தண்பொருந்தம் வளத்தை நல்கி
வாழியரோ பாளையமே வாழும் கோட்டை
வாழியரோ அறம்பொருளால் வளரும் இன்பம்

வாழியரோ மறைநா ராயணமால் பாதம்
வாழியரோ அவனருளை மறவா நெஞ்சம்
வாழியரோ ஆழ்வார்கள் வாக்கின் செல்வம்
வாழியரோ அன்பர்கணம் மசியின் கண்ணே"

**பின்னணியுரை** : இப்பிரபந்தம் பாளையங்கோட்டை இராமபாக்கில் தொடங்கி மதுரை சங்கரன் அகத்தில் நடந்து கொட்டையூர் ஸ்ரீ இராமநகரத்தில் இன்று காலை பூர்த்தியாயிற்று. 18-7-70. சாதாரண ஆடி 2. காலை சனிக்கிழமை.

**குறிப்பு** : இந்நூல் பாளையங்கோட்டை வேதநாராயணபெருமாள் மாலை என்னும் பெயரினை உடையது. இதன் கண்ணே, வேதநாராயணப் பெருமானின் பெருமை விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. அரும்பாகி மலராகி அதன்பின் காயாய் கனியாய், அளிகனியாய் அமைகின்ற அவனி வாழ்க்கையின் அல்லல் ஒழிந்து அழிவிலா வீட்டுலகை அடைய வேதநாராயணனை விட்டால் வேறொன்றும் கதியில்லை என்று ஆசிரியர் இப்பிரபந்தத்தில் அறிவுறுத்துகின்றார். முற்றும் உள்ளது. இயற்றியவர் திரு. நா. கனகராசன், எம்.ஏ., ஆவார்.

## R 8518
## வேணுகோபாலன் மாலை
## VENUGOPALAN MALAI

Pages 601-622; Lines 38 on a page
Extent 325 Granthas

**COMPLETE**

Venugapalan is the name of the Vishnu at Vedanarayana Perumal temple at Palayankottai. He has been worshipped by the author N.Kanagaraja Iyer in 52 Tamil verses.

**தொடக்கம்** :

**காப்பு**

'வேணுகோ பாலன் விழைந்தேற்கு மாலையினை
ஆணுவமை நெஞ்சோ டமைக்கின்றேன் - பூணுதுழாய்
வேதநா நாராயணனே வேண்டுமொழி தந்தருளும்
போதநா ராயணனாய் போந்து

**பிரபந்தம்**

பூதவகை கதிரிருமை பொருந்துமுரு. வாயினனாய்
புராரிநான் முகனு மானாய்
புண்ணியச் செல்வர்புகழ் தமிழ்மறையி னுள்ளே
புகுந்துவிளை யாடு கழலாய்
சாதமுதல் மரணம்வரை துணையா யிருப்பதோடு
சாதமர ணாதி களறச்

சாசுவத மோகமும் தந்தருளும் நம்பியே
    தனக்கினை யிலாத பெரும
காதமொரு நூறுபோய் வந்துநின் மெய்யுளே
    காணமுயல் அன்ப ருளரே
கண்ணமணி வண்ணவென உள்ளமுற வெண்ணியே
    காலம் கழிப்பவர் சிலர்
வேதநா ராயணனை 'வேதமே தமிழ்மறைகள்
    வேண்டுவது கேட்டு வப்பாய்
வேணுகோ பாலவருள் பூணுவாய் நெஞ்சமலர்
    மேவுவாய் பிரகிலாயே' (௧)

முடிவு:

'சேயவன் மாமனே செந்திலம் பதியிலே
    திருப்பள்ளி கொண்ட ருளினாய்
திருச்சித்திர கூடத்தில் அம்பலத் தாடினான்
    சேடசய னத்த யர்ந்தாய்
மாயவன் தருமமே மூவுலக முணரவே
    மாயையை வசப்ப டுத்தி
மாதவ சோதையும் மெய்யுணர்வு காணவே
    வாய்திறந் தருளி னாயே
தாயவன் தந்தையும் தமையனும் தம்பியும்
    தகுநண்பு மானவ னவன்
தாரணியை வாழ்விக்க வந்தபெரு மானவன்
    தமிழகத் தெய்வமானான்
வேயவன் வாய்மலரில் அமுதேற்று நாமெலாம்
    விண்ணேற வழிகோலுமே
வேணுகோ பாலவருள் பூணுவாய் நெஞ்சமலர்
    மேவுவாய் பிரிகிலாதே'

## வாழ்த்து

'பாளையங்கோட்டை வாழ்க பழம்பெருங் கோயில் வாழ்க
    நாளையும் நம்மைத் தேடும் நந்தகோன் தனயன் வாழ்க
வேளையும் செல்லச் செய்த வேதநா ரணனே வாழ்க
    கோளையும் மாற்றிக் காக்கும் கோபால சாமி வாழ்க

நெல்வேலி நகரம் வாழ்க நிறைபுனற் பொருனை வாழ்க
சொல்வேலி நாவால் ஆக்கும் தூமனப் புலவர் வாழ்க
கல்வேலி சூழ்ந்த கோயில் காக்குமெங் கண்ணன் வாழ்க
நெல்வேலி நல்கா நிற்கும் வேதமார் திருமால் வாழ்க."

**குறிப்பு** : வேணுகோபாலன் மாலை என்னும் பெயரினை உடையது இந்நூல். பாளையங்கோட்டை வேதநாராயணப் பெருமாள் திருக்கோயிலில் உள்ள கோபாலசாமி என்ற வேணுகோபாலனுக்கு பாமாலை சூட்டுகின்றார் ஆசிரியர் நா. கனகராசன் எம்.ஏ., ஆசிரிய விருத்தத்தில் பாடியுள்ளார் மொத்தம் வாழ்த்துப்பாக்கள் இரண்டுடன் ஐம்பத்திரண்டு பாடல்கள் உள்ளன. வேணுகோபாலனின் நாதப் பெருமை நயம்பட விளக்கப்பட்டுள்ளது. அதரத்தில் வேய்ங்குழலை அவன் வைத்து இசையெழுப்ப மக்களேயன்றி விலங்கும் மரமும் கூட மெய்மறந்து நின்று கேட்கும் என்று ஆசிரியர் வருணிக்கின்றார். முழுவதும் உள்ளது. இயற்றியவர் **திரு. நா. கனகராசன் எம்.ஏ.,**

## R 8519
## சுசீந்திர நான்முகன் மாலை
## SUSIENDIRA NANMUGAN MALAI

Pages 623 - 629; Lines 32 on a page.
Extent 125 Granthas.

**COMPLETE.**

This has been flourished in 1970. This is on Brahma templed at Suchindram (Near Nagarkoil). Author by N. Kanagaraja Iyer.

**தொடக்கம்** :

**காப்பு**

'வாசவன் பெற்ற மருமாய் சுசீந்திரத்தில்
நேசமே கொண்டு நிலைபெற்ற வாசமலர்
நான்முகத் தேவனை நாடும் தமிழ்மாலை
மான்முகத் தின்னருளின் வாக்கு

**பிரபந்தம்**

மாலையனே தாணுவெனும் மாதேவன் திருக்கோயில்
ஆலயமே யெனக்கென்றே ஆதரவாற் கூறுகின்றேன்
காலயவ னாதியரைக் கருவறுத்தார் திருமகளும்
சாலமற முழுதறிந்த சதுர்முகத்து பெருமாளே' (க)

**முடிவு:**

'ஓங்காரம் மந்திரமாய் உணருகின்ற பரம்பொருளே
ஆங்காரம் மானுக்கும் அப்பாலாம் பரம்பொருளே
நீங்காத செல்வத்தாய் நிலையான தெய்வருள்வாய்
பாங்காகும் வெண்கமலம் பானவதரு நான்முகனே'

**வாழ்த்து**

'முப்பொருளு மொருமையொடு முதன்மைபெறு சுசீந்திரத்தே
அப்பொழுது நீர்நிலையின் அருகிருந்த கோயிலகம்
எப்பொழுதும் வீற்றிருக்கும் இசைமகனார் தவத்தலைவன்
இப்பொழுது நலமருளி என்றென்றும் வாழியரே

**பின்னணியுரை** : சாதாரண ஆடி ச திங்கள் கிழமை இரவு 7.30 மணி. 20.7.70. ஸ்ரீ ராமநகரம் இராமநாதபுரம் மாவட்டம்.

**குறிப்பு** : சுசீந்திர நான்முகன் மாலை என்னும் பெயரினை இந்நூல் உடையது. நாகர்கோவிலுக்கு அண்மையிலுள்ள சுசீந்திரம் பல சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டது. அவற்றுள் ஒன்று நான்முகனுக்குக் கோவிலைப் பெற்றிருத்தல். நான்முகனாகிய படைப்புக் கடவுளின் பெருமைகளைப் பாடல்களாக்கிச் சூட்டி மகிழ்கின்றார் ஆசிரியர் திரு. நா. கனகராசன். புராண கதைகள் பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. முழுவதும் உள்ளது. மொத்தம் 53 பாடல்கள் உள்ளன.

## R 8520

## சுசீந்திரத் திருமால் மாலை

## SUSINDHIRA THIRUMALMALAI

Pages 630-636; Lines 36 on a page.
Extent 150 Granthas.

**COMPLETE**

Eulogy on Tirumal at Suchindram mentioned before. 53 verses are for this. Composer of these verses was N. Kanagaraja Iyer.

**தொடக்கம் :**

**காப்பு**

'காப்புக் கடவுளென காவியகா லாநிதிகள்
யாப்புக் கிடையே இயம்புகின்ற – மாப்புருடன்
சீரார் சுசீந்திரத்துத் தேவர் பெருமான் மாலை'
நாரால் எழுதுவதாம் நா'

**பிரபந்தம்**

'நீராரும் கடலருகு நிலவளமும் நீர்வளமும்
சீராரும் சுசீந்திரத்தே திருமகனார் மார்படங்க
ஏராரும் திருக்கோயில் அனிதுநின்று காட்சிதரும்
பேராரும் சுசீந்திரத்தேம் பெருமானை பணிவோமே (க)

முப்பொருளு மோருவாய் முகிழ்த்தசுசீந் திரநகரில்
எப்பொழுதும் திருமகளோ டிருந்தருளும் திருமாலை
அப்பொழுது தாமரைவாழ் அருமந்த மகனோக்கும்
துப்பொழுது மேனியனைத் தொழுதுதுதித் துருகுவமே' (2)

**முடிவு:**

'மாலோல என்னும் பெயரை வரிக்கின்ற மாலயனே
ஆலோலம் பாடுகின்ற அணிகுறிஞ்சி யொழுக்கத்தை
நீலோக மேனியொடு நிறையெழிலின் திருமகள் பால்
கோலோக மகிழ்வுபெவறக் கொண்டருளும் சுசீந்திரத்தே'

**வாழ்த்து**

'வாழியரோ சுசீந்திரத்து வளர்தாணு மாலயனே
வாழியரோ சுசீந்திரத்து வாழ்வுபெறு திருமாலே
வாழியரோ சுசீந்திரத்து மறைபயின்ற நான்முகனே
வாழியரோ சுசீந்திரத்து மனமுருகு மன்பர்களே"

**பின்னணியுரை** : சுசீந்திரத்தின் தாணுமாலயன் திருமாலை முன்பு இடம் பெற்றது. இங்கு இப்பிரபந்தத்தில் இயற்றிச் சேர்க்கப்படுகின்றன.

**குறிப்புரை** : இந்நூல் "சுசீந்திரத் திருமால் மாலை" எனும் பெயரினைப் பெற்றுள்ளது. இதன்கண்ணே சுசீந்திரத்தில் கோயில் கொண்டிலங்கும் திருமாலின் பெருமை பாடப்பட்டுள்ளது. திருமகளோடு இணைந்து காட்சிதரும் திருமாலைப்பற்றிய புராணக் கருத்துக்களும் இடம்பெற்றுள்ளன. இயற்றியவர் நா. கனகராசன், எம்.ஏ., ஆவார். முழுவதும் உள்ளது. மொத்தம் 53 பாடல்கள் உள்ளன.

## R 8521

## சிரஞ்சீவி சுசீந்திர ஆஞ்சநேய மாலை

## SIRANJEEVI SUSIENDIRA ANJANEYAMALAI

Pages 637 -648; Lines 36 on a page.
Extent 175 Granthas

**COMPLETE**

Hanuman of Suchindram has been worshipped in verses; 53 verses stand for this purpose. Author, N. Kanagaraja Iyer.

**தொடக்கம்** :

**காப்பு**

'பனிநீர் குளித்துப் பரமபத நாதன்
புனிதா லயத்திற் பொருத்தும் – களிமனத்தால்
ஆன்ற சுசீந்திரத்தின் அஞ்சனைசெய் மாலைசொல
நான்றமொழி நாமகளே நல்கு'

**பிரபந்தம்**

'அஞ்சனையின் திருக்குமர முக்கண்ணான்
வரம்பெற்றே அவனி புக்காய்
வஞ்சனையும் சூதுமிலா மனம் படைத்த
வாயுசுத மலைபோல் மேனி
அஞ்சலிசெய் கரத்தொடு சுசீந்திரத்தில்
அமைந்து நிற்கும் அறிவின் செல்வ
கஞ்சயவன் பதவிபெறக் காத்திருப்பாய்
என்கின்றார் கலைஞர் தாமே' (க)

முடிவு :

'இல்லாரை எள்ளுவதும் உள்ளாரை
 இறைஞ்சுவதும் இயல்பே யானால்
இல்லாளு மிழந்தானை பேரரசு
 துறந்து வந்த இயல்பினானைஎல்
நல்லாரும் ஞானியரும் அரணியத்தை
 போற்றவரு நலத்தி னானை
எல்லாரும் அறியவைத்த தொழும்பனெனச்
 சுசீந்திரத்தே இருக்கின் றாயே'

**வாழ்த்து**

"வாழிசு சீந்திர மும்மை மூர்த்தியென மனமார வழுத்து கின்றோம்
வாழிசு சீந்திரம் வாழும் திருமகளார் தலைவனென வாழ்த்தா நின்றோம்
வாழிசு சீந்திரம் உறையும் நான்முகனே அனுமனென வணங்குகின்றோம்
வாழசு சீந்திர வனுமன் மாலையென மனம்கனிந்து வாழ்த்து வேமே"

**குறிப்பு** :சிரஞ்சீவி சுசீந்திர ஆஞ்சநேயமாலை என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இதன் கண்ணே சுசீந்திரத்திலுள்ள ஆஞ்சநேயரின் சிறப்பியல்புகள் விளக்கப்பட்டுள்ளன. மிகப்பெரிய திருவுருவத்தோடு அன்பர்களுக்கு ஆஞ்சநேயர் காட்சி தருகின்றார். மருந்துமலை கொணர்தற்குத் தாவிய திருக்கோல மெனப் பக்தர்கள் தங்கள் மனத்தகத்தே எண்ணும் படி இருக்கின்ற உருவம் என்று பாடலில் வருணிக்கப்டுகிறது. புராணக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு ஆஞ்சநேயரின் ஆற்றல் விளக்கப்படுகிறது. இயற்றியவர் திரு. நா. கனகராசன், எம்.ஏ., முழுவதும் உள்ளது. மொத்தப்பாடல்கள் 53.

## R 8522

## திருவல்லிக்கேணி பார்த்தசாரதி திருமாலை
## THIRUVALLIKENI PARTHASARATHY THIRUMALAI

Pages 649-656; Lines 32 on a page
Extent 125 Granthas

**COMPLETE**

Parthasarathy temple at Triplicane (Madras) is an ancient

one. Poet N. Kanagaraja here presents a garland Tamil of verses to this Parthasarathy

**தொடக்கம் :**

**காப்பு**

' பார்த்தனுக்குச் சாரதியாய்ப் பாரதத்தே பூரணனாய்
ஆர்த்தமறை தேடுபத அம்புயனாய்த் - தீர்த்தரினச்
சென்னியின் மேல் வீற்றிருக்கும் சீதரனைப் போற்றுபணி
நன்னிலமை வாய்த்ததுநம் நாவு.

சேனை முதலியார் தென்குருகூர் நம்மார்வார்
ஆனை முகவனே ஆதியோர் - தானையினைப்
போற்றுகின்றேன் பார்ப்பதற்குப் பூரணத்தை பாரதத்தே
சாற்றுகின்றார் மாலைதரத் தான்'

**முடிவு:**

'ஆற்றல் மிக்கவர் அரசர் பல்லாயிரர் அமரிலே மடிந்தாலும்
ஏற்ற மிக்கது தருமமே யென்பதை எளியரேல் உணர்தற்கே
தோற்ற மெய்திய பார்த்த சாரதியருள் சுருதியை யுணரேமேல்
மாற்றமற்ற மெய்பொருள் இழந்தழி வேமே மாநிலமிதன் மீதே (ருஉ)

**வாழ்த்து**

வாழியோ திருவளர்தற்கு சீதையை வழங்கிய திருநாவலன்
வாழியோ குருகுலப்பெருஞ் சமரிலே வாவுமான் தேரோட்டி
வாழியோ சமர்க்களத்திலே சீதையாம் மறைமுடி
செவியேற்பான்
வாழியோ அல்லிக் கேணியில் வாழ்வுறு மாயவன் உலகத்தே

**குறிப்பு** : இந்நூல் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி திருமாலை என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இதன்கண்ணே திரு அல்லிக்கேணியிலே கோயில் கொண்டு அருள் வழங்கும் பார்த்தசாரதியின் பெருமை பாடப்பட்டுள்ளது. பார்த்தனுக்குச் சாரதியாய் அமர்ந்ததும், பகவத்கீதை

அருளியதும் ஆகிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. இயற்றியவர் திரு. நா. கனகராசன். முழுவதும் உள்ளது.

## R8523
## திருமயிலை கபாலீசன் திருமாலை
## THIRUMAYILAI KAPALIESAN THIRUMALAI

Pages 657-663 Lines 32 on a page
Extent 126 Granthas

**COMPLETE**

All the 53 Tamil verses here are on Kapalisan a form of Siva, at Mylapore (Madras - 4). Composer of the verses, N.Kanagaraja Iyer.

**தொடக்கம் :**

**காப்பு**

'அநாயக னான அருள்வள்ளல் முக்கண்
சுநாயக மாலை சொலவே - விநாயகனை
வேண்டிக் கபாலீசன் மெய்மாலை சூட்டுகின்றேன்
பூண்டிக்கு நோக்கும் பொருள்

**பிரபந்தம்**

மூலப் பரம்பொருள் முக்கண் படைத்தா முழுமுதமல்வன்
ஆலக் களத்தினன் சீகாழிப் பிள்ளை அருள்மொழியில்
சாலப் பூகுந்தெழு பூங்கோதை வாழ்வு தழைவித்தவன்
காலக் கடவுள் மயிலா புரியிற் கபாலி யன்றே. (க)
உருவிற் பெரியான் உயிர்க்கு ளுயிராய் ஒளிர்பரமன்
அருவிற் கிளர்பவன் ஐம்பூத மாக அமர்தலைவன்
திருவிற் சிறந்தெழு பூங்கோதை வாழ்வு சிறப்பித்தவன்
கருவிற் புகாமை யருளு மயிலைக் கபாலி யன்றே ' (உ)

**முடிவு :**

'என்பையும் பெண்ணா யியற்றித் தலநெறிக் கேற்பித்தருள்
அன்பையும் ஆண்டவன் பேரருள் தன்னையும் ஆரனப்பார்

இன்பையும் துன்பையும் எண்ணார் மயிலை இறையருளின்
மென்மையும் நன்மையும் நோக்குவார் முத்தியு மேவுவரே (ருஉ)

**வாழ்த்து**

பாம்பா பரணத் திருமயிலா புரிப்பண் ணவனும்
காம்பாய தோளால் அவனைத் தழுவிய கற்பகமும்
தேம்பாவை யோது திருஞான சம்பந்தர் செந்தமிழும்
பூம்பாவை சீரும் பொலிக பொலிக பெலிகநன்றே

குறிப்பு : திருமயிலைக் கபாலீசன் திருமாலை எனும் பெயரைப் பெற்றுள்ளது சென்னை மாநகரத்தைச் சார்ந்த மயிலாப்பூர் என இன்று வழங்கும் திருமயிலையில் கோயில் கொண்டுள்ள கபாலீசுவரரின் சிறப்பினைப் பாடல்வரிகள் விளக்கிச் செல்கின்றன. அவ்விறைவனுக்குப் பாமாலை சூட்டுகின்றார் திரு நா. கனகராசன். மொத்தம் 53 பாடல்கள் உள்ளன. முழுவதும் உள்ளது

## R 8524
## திருவட்டீசுவர மாலை
## THIRUVETTISWARA MALAI

Pages 664-670. Lines 32 on a page.
Extent : 125 Granthas

**COMPLETE**

Thiruvettesvaran has been sung by 53 Tamil stanzas by N. Kanagaraja Iyer.

தொடக்கம்:

'கருவேட்ட வாழ்க்கைக் கசடனேன் சார்ந்தேன்
திருவேட்ட தேவன் திசையே - உருவேட்டு
இனிப்பிறவா வண்ணம் அவன் ஏற்பாது வேழத்
தனிப்பிறவி தங்க தமிழ்.

திருவேட் டிறைவன் திருத்தொண்டை நாட்டுச் சிவபெருமான்
உருவேட்டவனது கோயில் புகுந்தேன் ஒளிந்தனனோ
அருவேட் டிருப்பின் அகத்திலே காண்பவ னவனை யென்றே
கருவேட்ட வாழ்க்கை மறந்தேன் பணிந்தேன் கனிவுறவே" (க)

முடிவு :

'ஆராய் மனத்தே புகவிரும்பாத அறமுளதோ
பூராய மாக வுணர்த்திய நூலும் புகழ்குணமும்
நேராய் விளங்கத் திருவேட்டி ளீசன் நிலயத்திலே
பாரார் வணங்க வமர்ந்தாய் இஃதவர் பாக்கியமே (ருஉ)

**வாழ்த்து**

வாழி திருவேட்டி ளீசுவரன் மான்மியம் மாண்புறவே
வாழி திருவேட்டி ளீசுரன் நாம மகேரதயமே
வாழி திருவேட்டி ளீசுரன் கோயில் வரநிலமாய்
வாழி திருவேட்டி ளீசுரன் மாலை வளம் பொலிந்தே'

**குறிப்பு** : இந்நூல் திருவட்டீசுவர மாலை என்னும் பெயரினை உடையது. இதன் கண்ணே, தொண்டை நாட்டுச் சிவபெருமானின் பெருமை உரைக்கப்படுகின்றது. திருவேட்டீசுவரத்தில் கோயில் கொண்ட திரு ஏட்டீசுவரன் அருள் வழங்கும் தன்மை உரைக்கப்படுகின்றது. பார்த்தன் பணிந்த திருவடிகளையுடைய இறைவன் என்றும், பூதங்கள் ஐந்தும் விளையாட நோக்கும் புதுமையினான் என்றும் பாராட்டப்படுகிறது. இரு நிலத்தே இல்லாததில்லை இருப்பதுமில்லை இவையெல்லாம் ஈசனின் செயலே என்று ஆசிரியர் பாடுகின்றார். இயற்றியவர் திரு நா. கனகராசன் எம்.ஏ., முழுவதும் உள்ளது.

## R 8525

# திருவொற்றியூர் சிவபிரான் மாலை

## THIRUVOTTRIYUR SIVAPIRAN MALAI

Pages 3-10; Lines 28 on a page
Extent : 115 Granthas.

**COMPLETE:**

Siva of Thiruvottriur's is the theme here; Author of this is N. Kanagaraja Iyer. We have 53 Tamil verses.

**தொடக்கம் :**

**காப்பு**

'வெற்றியூர் பேறொன்றும் வேண்டா வியப்பாலே
ஒற்றியூர் வாழும் ஒருவனையே - பற்றி நின்று
மாலையிசைத் தோத மதகரியின் மாமுகத்தான்
காலைமன மெய்வணங்கும் காண்

**பிரபந்தம்**

கற்றியூர் தோறுமெனைக் காண்டியெனக் கற்பித்தாய்
பற்றியூர் இருவகைப் பற்றினையும் களைக வென்றாய்
வெற்றியூர் வேறில்லை வெள்ளிமலை யென்கின்றாய்
ஒற்றியூர் கோயில்கொளும் ஒப்புயர்வில் பெருமானே' (க)

**முடிவு :**

'வேண்டுவது சிறிதுமிலான் வெறுப்பதுவோ தெரியாதால்
பூண்டுளபூண் அரவேனும் பூமிமுத லுலகமெலாம்
ஆண்டுநல மருளுகின்றான் அடிமையெனப் புகுவாரை
மீண்டுவரா நிலைநிறுவும் வேந்தனொற்றி நக்கருளனே (ருஉ)

**வாழ்த்து**

வாழ்த்துகிறேன் திருவொற்றி வள்ளலையே மனமார
வாழத்துகின்றேன் முடிவணங்கி மலைவளர்கா தலியினையே
வாழ்த்துகின்றேன் திருவொற்றி மாநகரின் பெரும்பேற்றை
வாழ்த்துகின்றேன் அவனடிமை மரபுபுகு மாந்தரையே'

**குறிப்பு :** இந்நூல் திருவொற்றியூரில் கோயில் கொண்டு அருள் வழங்கும் சிவபிரானின் தன்மை போற்றப்படுகின்றது. வெற்றியூரென்றும் திருவொற்றியூரென்றும் வழங்கும் ஊரின் சிறப்புக்களை ஆசிரியர் சில பாடல்களில் விளக்கியுள்ளார். உழைப்பதற் பகல் வேண்டும் உறங்குவதற் கிரவுளதே போன்ற சில நயமான பகுதிகளும் உள்ளன. சில பிராணக் கருத்துக்கள் பல இடங்களில் குறிப்பிடப்படுகின்றன. இயற்றியவர் திரு. நா.கனகராசன், எம்.ஏ., முழுவதும் உள்ளது.

## R 8526

# திருவொற்றித் தியாகராசமாலை

# THIRUVOTTRI THIYAGARAJA MALAI

Pages 11-17; Lines 32 on a page.
Extent : 150 Granthas

**COMPLETE.**

Eulogy on Thiyagaraja of Tiruvottriyur lauded by N.Kanagaraja Iyer in 50 verses.

**தொடக்கம்**

**பிரபந்தம்**

'தியாகேச பக்திமலி சித்தமுள சுந்தரரைத்
தியாகேச திருவாரூர்த் தெருவீதி நடத்தினையே
தியாகேச வழிகவர்ந்து சிவதலங்கள் சூழ்வித்தாய்
தியாகேச கண்திறந்தாய் திருவொற்றி அரசேயோ

திருவொற்றி யூரகத்தே சிவன்பணியே பூண்டிருந்த
கருவொற்றி யறியாத காரிகையைச் சங்கிலியை
உருவாற்றி மனம் கொடுத்த ஊரருக்கே வுரிமை செய்த
மருவொற்றித் தியாகேச மனம்புணர்க்கும் செயலாயே' (உ)

**முடிவு :**

'மற்றினியு முரைப்பதென்னை மாதேவி பரமேட்டீ
ஒற்றியூரை பரமனு நீ யூரனையாண் டருவனீ
சுற்றிவரு தேவகணம் சூழ்தேவா சிரயத்தே
நிற்றியென விசைத்தனையே நினதுகருத் தறியேனே (சகூ)
புறகுரைத்த விறன்முண்டர் புராரிபதத் தொண்டரன்றே
பிறகுவந்து பயின்றவரும் பிஞ்ஞுகன்றன் தொண்டரன்றே
இறகுபுனை யோயர்கோன் கலிக்காமர் எனக்குரியார்
உறவுகொள்வ னிவர்பாலே ஒற்றிநகர் தியாகமெய்யே'

**குறிப்பு** : திருவொற்றித் தியாகராசமாலை என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இத்தியாகராசமாலையில் சுந்தரர் பற்றிய செய்தியும்,

தடுத்தாட்கொண்ட புராணச் செய்தியும், சங்கிலியார் மணம் பற்றிய செய்தியும் விளக்கமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. ஏயர்கோன் கலிக்காமனூர் சுந்தரரை இறைவனை ஏவியவர் என்பதற்காக வரவேற்க மறுத்தமையும் விளக்கப்பட்டுள்ளது. மொத்தம் 50 பாடல்கள் உள்ளன. இயற்றியவர் திரு நா. கனகராசன்,எம்.ஏ., முழுவதும் உள்ளது.

## R 8527
## திருவாரூர் வன்மீகநாதன் மாலை
## THIRUVARUR VANMIGANATHAN MALAI

Pages 18 - 31; Lines 32 on a page.
Extent : 200 Granthas

**COMPLETE**

Vanmiganatha is the name of god at Thiruvarur (Tanjore Dt). This piece is for this Vanmiganatha. Kanagaraja Iyer advocates for this god in elegant style.

**தொடக்கம் :**

'மருவாரூர் நோக்குநுதல் வன்னிவிழி கொண்டான்
திருவாரூர் வன்மீகத் தேவன் - திருவாழும்
பாதம் பணியும் பனுவல் விநாயகன்றன்.
போதம் பொருந்தும் புகுந்து.

விநாயகனே ஆறுமுகன் வேதமே தேடும்
அநாயகனே ஆரூர் அரனே - சுநாயகனாய்
உள்ளத் துறவே யுரைக்கும் தமிழ்மாலை
வெள்ளத் துறவே விழும்
வன்மீக நாதனையே வாழ்த்துமனம் கொண்டாலும்
சென்மீனும் வன்மைத் தியாகேசன் - தன்மானம்
காக்கும் கருணையான் கான்மலரை நெஞ்சகத்தே
பூக்கும் தமிழ்க்கருளப் போற்று'

**முடிவு :**

'திருவாரூர் இதயநலம் தேவ தேவ
சிறியேனும் இதயமலர் சிறிதே யுள்ளேன்
கருவாரூர் இனிவருமா கருத மாட்டேன்
மருவாரூர் சிரித்தழித்த மறைப்புற் றீசர்
வண்மை யுண்மை வெண்மைநிற மனத்தாய் நின்னை
ஒருவாறே பாடலினாய் உணர லானேன்
உனையன்றி நானில்லை உலகத்துள்ளே

**வாழ்த்து**

வாழியவே திருவாரூர் வாழும் செல்வம்
வாழியவே மறைப்புற்றில் வாழும் தேவன்
வாழியவே கமலையெனு மாதர்த் தெய்வம்
வாழியவே தியாகேச வள்ளல் தெய்வம்
வாழியவே சுந்தரர்தம் வாக்கின் செல்வம்
வாழியவே திருத்தொண்டர் வாழும் மன்றம்
வாழிகம லாலயமாம் வளம் சால் தீர்த்தம்
வாழிகம லாலயமாம் வாழ்வு தானே"

**குறிப்பு** : இந்நூல் 'திருவாரூர் வன்மீக நாதன் மாலை' என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே திருவாரூரின் கண்ணே கோவில் கொண்டருளும் இறைவனின் பெருமை பாடப்பட்டுள்ளது ஐம்பெரும் பூதங்களுள் ஒன்றாகிய மண்ணால் ஆகிய சிவலிங்கத்தைப் பெற்றிருக்கும் சிறப்பினை ஆரூர் பெற்றுள்ளது. புற்றீசர் என்று இறைவனை அழைக்கின்றார். திருவாரூரில் பிறந்தால் சிறப்புண்டு என்று ஆசிரியர் தம் பாடலில் குறிப்பிடுகின்றார். திருவாரூர் கமலாயமும், தியாகேசன் அருள் பொதுத்தன்மையும் பாராட்டுகின்றார். சமயக்குறவர்களால் பாடல் பெற்ற திருத்தலம் திருவாரூர். அவ்வூரில் அமர்ந்து அருள் வழங்கும் இறைவனின் பெருமையை திரு. நா கனகராசன் எம் ஏ., பலவாறாக பாராட்டியுள்ளார். முழுவதும் உள்ளது.

## R 8528

# திருவாரூர் தியாகராச மாலை

# THIRUVARUR THIYAGARAJA MALAI

Pages 32-44; Lines 32 on a page.
Extent 150 Granthas

**COMPLETE**

51 Tamil Songs are for Thiyagaraja of Thiruvarur. Poet N. Kanagaraja Iyer solicit graces of Thiyagaraya.

**தொடக்கம் :**

**காப்பு**

'முந்நூற் றறுபான் முழுவிளையாட் டாடுபரன்
முந்நூற் பகவதற்கு மூப்பாளன் - எந்நூற்கும்
கண்ணும் தியாகன் கழல் மலர்சார் மாலிகையை
அண்ணால் கரிமுகனே ஆக்கு

**பிரபந்தம்**

அனைத்து நன்மையே ஆகுக வென்னவே
அடியவர் விழைகின்றார்
நினைத்து நின்றிரு வுருவினை நெஞ்சகம்
நிலைபெறப் புரிகின்றார்
எனைத்து நல்வினை இயற்றினா ராயினும்
இதயம் வாழ் தியாகேச
துனைத்து மேற்செல நின்னருள் வேண்டும்
சுருதியின் முடியோனே. (க)

**முடிவு :**

'கமல ஆலயத்திலே புற்றினுட்
கரந்தருள் பிரான் முன்பு
சமல ராகிய மனிதர்யாம் புகுவது
தகுவதே யென்கின்றோம்
விமல தியாகனும் திருவிளை யாட்டெலாம்
விழைவுறு மானத்தே மாய்
அமல வாழ்வையே வேண்டுவே மாதலால்
அருளையே நினைவேமே (ரு 0)

## வாழ்த்து

வாழ்க வாழ்கவென ஆரூர்த் தியாகனை
மனமுற நினைக்கின்றோம்
வாழ்க வாழ்கென வன்மீக நாதனை
வழுத்தியே துதிக்கின்றோம்
வாழ்க வாழ்கவெனக் கமல அம்பிகை
மனத்தனி வைத்தோமே
வாழ்க வாழ்கவெனத் தாண்டவ தியாகனை
மனத்துறப் புரிவாயே

**குறிப்பு** : திருவாரூர் தியாகராச மாலை என்னும் பெயரினை இந்நூல் பெற்றிலங்குகிறது. திருவாரூரில் கோயில் கொண்டு அருள் வழங்கும் தியாகராசனின் பெருமைகள் பாடப்பட்டுள்ளன. ஆண்டவனையே தியாகம் செய்தவனாகக் கண்டு மகிழ்கிறார்கள் அடியார்கள். தன் மேனியையே சரிபாதியாகப் பகுத்து தியாகம் புரிந்தாய் என்று ஆசிரியர் நா. கனகராசன் வருணிக்கிறார். மொத்தம் 51 விருத்தப் பாடல்கள் உள்ளன. முழுவதும் உள்ளது.

## R 8529
## பஞ்சமுக ஆஞ்சநேய மாலை
## PANCHAMUGA ANJANEYAMALAI

Pages 45 -57; Lines 32 on a page.
Extent 200 Granthas.

**COMPLETE**

Curiously enough we meet Hanuman with five faces at Secandarabad (A.P) Author N. Kanagaraja Iyer worships this five faced Hanuman in 51 Tamil veses.

**தொடக்கம்** :

'பாரின்மேற் சாய்ந்து பலதிறத்த ஆனைத்தோடு
ஆரும் அனுமான் அடிமலர்க்கே - சேரும்
திருமாலைப் பாடுகின்ற சித்தம் சுமுகப்
பெருமாளை வேண்டும் பெரிது

## பிரபந்தம்

பாரதமா நாட்டகத்தே பண்டை நாளிற்
படைத்தபெயர் மறைந்ததனால் பலரும் இன்று
சேரவரு பெயரான் சிகந்தா ராபாத்
திருநகர மென்றுனக்கும் திவ்ய பூமி
நாரகமே யுடையோர்க்கு நல்கல் வேண்டி
நால்வேறு முகங்களோடு நடுவே தோன்றும்
தீரமுக மொன்றுள்ள சிறந்த யக்தன்
சித்தசுத்த அனுமானைச் சேவிப் போமே'

**முடிவு:**

'மனுமானும் இராகவனை மன்னன் ஆக்கி
மாதேவி சீதைகழல் வணங்கும் தேவ
முனுமானா வினைபுரிந்த முயற்சி யாள
மூதுலக முழுத்தறியும் முத்தர் வேந்தே
இனுமானா வினைபுரியும் இதயம் உண்டோ
இனிப்படைக்கும் நான்முகனீ என்றே கேட்டோம்
அனுமானே சிகந்தநகர் அவாவி வந்தார்
ஆந்திரத்தார் பெரும்பேறே ஆனாய் அன்றே (ரு)

வாழ்வுறுக அறங்காக்க வந்த வீரன்
மனுகுலத்துத் தலைமணியாம் வள்ளல் வாழ்க
வாழ்வுறுக சானகியாம் மாதர்ச் செல்வி
மாதேவன் அமிசமுள வாயு மைந்தன்
வாழ்வுறுக உலகமெலாம் மக்க ளெல்லாம்
மான்களெலாம் மரங்களெலாம் மழையைக் கண்டே'

**குறிப்பு** : இந்நூல் பஞ்சமுக ஆஞ்சநேய மாலை என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இதன் கண்ணே ஆந்திர மாநிலத்தில் செகந்திராபாத் எனும் நகரில் எழுந்தருளி அருள் வழங்கும் ஆஞ்சநேயரின் பெருமை பாடப்பட்டுள்ளது. இராமாயணத்தில் ஆஞ்சநேயரின் பங்கு பற்றியும் இந்நூலில் பாராட்டப்பட்டுள்ளது. மொத்தம் 51 ஆசிரிய விருத்தப்பாடல்கள் உள்ளன. இயற்றியவர் திரு. நா. கனகராசன், எம்.ஏ., முழுவதும் உள்ளது.

## R 8530

# பஞ்சவடி ஆஞ்சநேய மாலை

# PANCHAVADI ANJANEYA MALAI

Pages 58-65; Lines 28 on a page
Extent : 125 Granthas

**COMPLETE**

Author N.Kanagaraja Iyer remembers the days of Hanuman at Panchavati (Now Nasik) This runs in verse medium.

**தொடக்கம் :**

**காப்பு**

'கோதா வரிக்கரையிற் கோலமிகு பஞ்சவடி
சீதா வனவாச சீதலத்தே - மேதாவி
ஐந்துமுகத் தஞ்சனைசெய் அன்புபெறு மாலைசொல
மைந்துதரும் வேழமுக மன்
புவியினுக் கணியே பொருள்மிகு புலத்திற் றாகி
அவியகத் துறை ளோடே ஐந்தினை நெறியிற் சென்ற
கவியென நடந்த யாற்றின் கரையிலைம் முகத்தோ டுள்ள
சவிமிகு மாஞ்ச நேயன் சரண்மலர் பணிவோம் நாமே (க)

**முடிவு :**

'கற்பினுக் கரசி சீதை கரியசூர்ப்ப னகை தூண்ட
வெற்பினும் பெரிய தோளாய் வெஞ்சிறை புகுந்த காட்சி
நிற்பது போலத் தோன்றும் நிலத்திலே கோயில் கொண்டாய்
அற்புத வாயு மைந்த அஞ்சனை செல்வ நன்றே

**வாழ்த்து**

வாழிநீர் மல்கு கோதா வரியெனும் பெயர்கொள் யாறே
வாழியக் கரையிற் பஞ்ச வடியெனும் புண்ய தேசம்
வாழியத் தேயம் வாழும் மாருதி ஆஞ்ச நேயன்
வாழியல் வன்னி சீர்மை வழுத்திய மாலை தானே"

**குறிப்பு** : இந்நூல் பஞ்சவடி ஆஞ்சநேயமாலை என்னும் பெயரினை உடையது. இராமன் தன் மனைவியுடனும் தம்பியுடனும் காட்டிற்குச் சென்றபோது தங்கியிருந்த இடம் பஞ்சவடி என்றழைக்கப்டுகிறது. இந்தப் பஞ்சவடி கோதாவரியாற்றின் கரையில் இன்று நாசிக் என்று வழங்கப்படுகின்றது. ஐந்து ஆலமரங்களின் நிழலில் அவ்வழகிய பஞ்சவடி அமைந்திருந்ததாக ஆசிரியர் பாடுகின்றார். இராமயணக் கதையில் ஆஞ்சநேயரின் பங்கினைப் பாராட்டிப் படுகின்றார் திரு. நா. கனகராாசன் எம்.ஏ., முழுவதும் உள்ளது.

## R 8531
## செஞ்சி ஆஞ்சநேய மாலை
## SENJI ANJANEYAMALAI

**குறிப்பு** : தலைப்பு மட்டுமே காணப்படுகின்றது.

## R 8532
## அத்தினபுர ஆஞ்சநேய மாலை
## ATHTHINAPURA ANJANEYAMALAI

**குறிப்பு** : த்லைப்பு மட்டுமே காணப்படுகிறது.

## R 8533
## காசிவிசுவேசா சதகம்
## KASI VISUVESA SATHAKAM

Page 66-115; Lines 36 on a page
Extent : 800 Granthas

**COMPLETE**

A piece of 100 verses on Visvesa of Kasi in sathakam type. Singer, N. Kanagaraja Iyer; Written in 1970.

**தொடக்கம்:**

காப்பு

'காசிவிசு வேசனருட் காட்சியினைக் கண்டுருகி
மாசில்தமிழ்ப் பாட்டிசைக்கும் வாய்ப்புற்றேன் - பேசறியேன்
தாண்மலரைச் சாரும் சதகம் விநாயகனே
கோண்மலர நல்கும் குழைந்து

## பிரபந்தம்

## காசிச்சிறப்பு

பிறப்பவர் சிறப்பெய்து கமலா யத்திலே
பிறவியாய்ப் பெளிதில்லையே
பிறவிபெற வேண்டுசிவ புண்ணியப் பேற்றினைப்
பெற்றவுயர் பலவில்லையே
அறப்பயனை நாட்டவே அன்னமலை பாலிக்கும்
அம்பலத் தாடிதிருமுன்
ஐம்பொறியு மொன்றவே நின்றுதரு சித்துருகும்
அரும்பேறு பெறுநர் சிலரே
மறப்பரிய அருணமலை மூர்த்தியை நினைந்துருகும்
வாய்ப்புவரு வதுவுமரிதே
மரித்தவுயிர் எதுவேனும் வீடருளும் வள்ளலுறை
வாராணசிப் பெருமையை
கறப்பதி காமதெனு வினுமிகு மென்னவே
கலைஞர்பலர் கூறுகின்றார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேசசிவமே.' (க)

முடிவு:

## சமனொளி

'இலங்கையென மக்கள்பல் இந்நாள் அழைக்கின்ற
ஈழமா நாட்டின்கணே
இலங்குபல கோயிலுள பௌத்தம நாடெங்கும்
இன்று நிலை பெற்றுள்ளதே
வலங்கொளு மதப்பற்று சிங்களர்க் கிடையே
வளர்வுற்று வாழ்வ தறிவோம்
மாபாரதப் பெருநிலத்திலே வாழ்வற்று
வந்தசிலர் அங்குள்ளனர்
தலங்கள் பலவுண்டேனும் பாரத மதத்துறைகள்
தக்கவணம் வளர்வதிலையே
சமனொளியெனும் பெரிய மலையினுச் சியின்மீது
ததாகதர் அடிச்சுவடுள

கலங்கலது பௌத்தநெறி வாழ்வுபெற அந்தமலை
கண்போல் விளங்குமென்ப
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே

## வாழ்த்து

காசிவிசு வேசனிரு பாதமலர் வாழ்கவே
காசிமாநகர் வாழ்கவே
கண்டனுதல் கரத்திலே அன்னமிகு பூரணியின்
கவின்மிக்க பாதம் வாழ்க

மாசில் மனமுடைய பல முனிவர்கள் வாழ்வு பெறு
வரநதிப் புணறும் வாழ்க
வரநதிக்கரையிலே யுள்ளபல கோயிலும்
வளம்பெற விளங்கி வாழ்க

காசி நகரத்திலே கல்விவளர் பல்கலைக்
கழகமும் கலையும் வாழ்க
கடவுளருள் பெற்றகல கலைஞரும் வாழ்வுறுக
கல்விநிலை யங்கள் வாழ்க

ஆசில்விசு வேசுவரன் லாபமே வேண்டுறும்
அம்பிகை விசாலாட்சியும்
அவள் புரியும் ஆட்சியம் நிலைபெற்று வாழ்கவே
அன்னையருள் உலகுறுகவே"

**பின்னணியுரை** : முதற்பிரதி 21.4.70 சுந்தரசரகம்

இரண்டாம் பாதி 30.7.70 இராம சரகம்

**குறிப்பு** : காசிவிசுவேச நகரம் எனும் பெயரிய இந்நூல் திரு நா. கனகராசன், எம்.ஏ., அவர்களால் இயற்றப்பட்டது. இந்நூலுக்குள்ளே, காசி விசுவேச சிவனின் நூறு தலங்களைப் பற்றிப்பாடப்பட்டுள்ளது. தமிழகத்தைச் சார்ந்த தலங்கள் மட்டுமின்றி வடநாட்டினைச் சேர்ந்த ஊர்களும் சேர்க்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலும் காசிவிசுவேச சிவமே என்று முடிகிறது. இயற்றிய முழுதும் உள்ளது.

## R 8534
# காசி ஆஞ்சநேயன் மாலை
# KASI ANJANEYAN MALAI

Pages 116-166; Lines 32 on a page
Extent 500 Granthas

**COMPLETE**

Hanuman of Kasi has been lited to a glorious pedestal here by N.Kanagaraja Iyer. We have got 100 verses for this.

**தொடக்கம் :**

**காப்பு**

'அனுமன் படித்துறையில் ஆட்சிபுரி கின்றான்
தனுமன் இராகவன் தன்னை - உனுமன்
இராமகாதை கேட்டின் எய்தும் செவியாற்
பராவ விநாயகனே பார்

தமிழ்மக்கள் மிக்கநிலம் என்றுகாசியில் வாழ்ந்த
சாதுசனம் யாவுமறியும்
சாந்தமுக அனுமான் திருப்பெயர் பொருந்தியுள
சானவிக் கரையின்கணே
தமிழ்கற்ற குமரகுருபரர் வந்து கம்பகவி
தந்தருளும் இராம கதையை
தக்கவணம் நன்மக்கள் கேட்புற விளக்கவே
தண்டூன்று கிழவ னாகத்
தமிழ்கற்கும் வேட்கையோ இராமகதை யின்பமோ
தனைத்தூண்ட வந்து நின்றே
தாசரதி கதைகேட்டல் தளராத மாண்புள்ள
சாதுவைக் கங்கை நதியில்
அமிழ்தமினு மமரனாரும் தெளியாத அமுதத்தை
அகத்திலறி பவனசுதனை
அனுமந்த கட்டம்வாழ் அனுமானை மனமார
ஆதரித் தேத்துவோமே' (க)

முடிவு :

‘குறுமுனிவர் அனுமனது வித்தையைப் பாராட்டு
குறிப்புள முகத்தி னோடும்
கூப்புகை யோடுமெழ நாரத மகதியைக்
கொண்டிசை யெழும்பி யனுமான்
பெறுகலையின் மகிமையினை யுலகறிய வைப்பதாம்
பெருஞ்சூ ளுரைத்து நின்றார்
பிரசதிகர் இசைதந்த யாழினை யகத்தியரும்
பெருமைநன் கோதி நின்றார்
மறுமையிலை யிம்மையிலை இராமனருளால் வீடு
வாய்ப்பதே திண்ண மென்ற
மனமுள்ள மாருதியும் நாரதரும் கைகோத்து
வாழ்த்தினார் குறுமுனிவரை
அறுமைமுக முளமுருகன் அருள்பெற்ற முனிவரை
அனுமான் மிகப்புகழ்ந்தான்
அனுமந்த வட்டம்வாழ் அனுமானை மனமார
ஆதரித் தேத்து வோமே (க00)

**வாழ்த்து**

அகத்தொடு புறத்திலும் இராமதரி சனமின்றி
அறியாத அடியர் வாழ்க
அவர்கற்ற கல்வியும் கலைகளும் பலர் நன்மை
அடையவே உலகில் வாழ்க

இகத்தொடு பரத்தையும் இராமநா மத்தினால்
இனிதருளும் இறைவன் வாழ்க
இணையற்ற கங்கைநீர் பெருகிவரு மாண்புள்ள
எழில் நகரம் என்றும் வாழ்க

சகத்தினது நன்மைநினை தேவியொடு காசியிற்
றானமரு மிறைவன் வாழ்க
தருமமறி அன்னபூரணி விசாலாட்சியால்
தையலர்கள் சரணம் வாழ்க

மகத்துவ மிகுத்ததவ மாருதியின் ஆலயம்
வரநதியின் அருளு வாழ்க
மாருதியின் அருள்பெற்ற குலமெலாம் குடியெலாம்
மண்ணுலகில் வாழ்க நன்றே"

**குறிப்பு** : காசி ஆஞ்சநேயன் மாலை என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இதன்கண்ணே காசியில் உள்ள ஆஞ்சநேயர் காட் என்று வழங்கப்படும் கோயிலில் எழுந்தருளி அருள் வழங்கும் இராமதூதனின் பெருமைகள் பாடப்பட்டுள்ளன. காஞ்சனத் தாசையில் காமிணியிலாசையில் கவிதைகளில் ஆசையிலை ஆஞ்சநேய உன்றன் காலடியில் தான் ஆசை என்று ஆசிரியர் திரு. நா. கனகராசன்.எம்.ஏ., பாடியுள்ளார். புராணக் கருத்துக்களை வைத்துப் பலவாறாகப் பாராட்டியுள்ளனர் முழுவதும் உள்ளது. நூறுப்பாடல்கள் உள்ளன.

## R 8535
## காசி துளசிராமன் மாலை
## KASI THULASI RAMAN MALAI

Pages 167 - 174; Lines 30 on a page
Extent 125 Granthas

**COMPLETE**

Sri Rama enrshrined at Kasi is the theme here. Author N.Kanagaraja Iyer personally visited this shirine thrice before the outcome of this literary piece.

**தொடக்கம்:**

**காப்பு**

'துளசி திருப்பெயர் சூடும் கவிஞன்
உளனில் உறையும் உருவான் - யளகில்
துளசி யிராமன் துதிபாடக் காசி
வளரும் விநாயகனை வாழ்த்து

அளவில் வெற்றி வாழ்ந்தசீர் அயோத்தி யாண்ட மன்னவன்
களவில் அன்பர் நெஞ்சில் வாழ்க குத்த வங்கிசத்தவன்
வளனில் மிக்க கங்கை யாறு வருகை நோக்கி மகிழ்பிரான்
துளசி தாசம் பாடல் வேண்டு துளசி ராமன் வாழ்கவே.' (க)

ஆய கலைகள் யாவும் வாழ அருளும் அன்பின் உருவினான்
மாய வாழ்வின் மன்னன் மைந்தர் வாழ்வு மற்றும் வில்லினான்
தேய மாந்தர் வந்து போற்று திவ்ய காசி வாழ்பிரான்
தூயதுளசி தாசர் போற்று துளசிராமன் வாழ்கவே (2)

முடிவு :

'வடமொழிக்கண் வாழவைத்த வான்மிகர்க்கு முரிமையே
மடமொழித்த தமிழிலுள்ள வாக்கினுக்கு முரிமையே
திடமழுத்து துளசிதாசர் திருமொழிக்கு முரிமையே
தொடர்மொழிக்கு எில்லையென்றி துளசிராம எவ்வனே

**வாழ்த்து**

வாழ்க துளசிதாசர் என்ற மனநிறைந்த அன்பினார்
வாழ்க ராம சரிதமான மாதைச் சரோவாய்
வாழ்க முந்தை ஞான மூர்த்திவைத்த ராம காதையே
வாழ்க ராம பக்தி ஞாலமக்கள் வாழ்வு பெருகவே"

பின்னணியுரை : காசிக்கு மூன்றுமுறை சென்றிருக்கிறேன். துளசிதாசர் தரிசிக்கும் இராமமூர்த்தியும் அனுமானும் ஒரு சிறு கோயிலில் இருப்பது பார்த்திருக்கிறேன். துளசிதாசர் பணிந்த இராமமூர்த்தியைத் துளசிராமன் என்று பெயரிட்டுப் புகழத் துணிந்தேன்.

**குறிப்பு** : இந்நூல் 'காசித்துளசிராமன் மாலை' என்னும் பெயரினை உடையது. இந்நூலுள்ளே காசியில் இருக்கின்ற இராமர் கோவிலின் பெருமையையும், ஆஞ்சநேயர் அருகிருக்க துளசிதாசர் வணங்கும் மாட்சியும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. துளசிதாசரால் வணங்கப்பெறும் பெருமையைஉடையது என்பதால் துளசிராமன் என்றே அழைக்கின்றார் இந்நூலாசிரியர். இயற்றியவர் திரு நா. கனகராசன் எம்.ஏ., முழுவதும் உள்ளது.

## R. 8536
## காசி துளசி அனுமான் மாலை
## KASI TULASI ANUMAN MALAI

Page 175-182; Lines 28 on a page
Extent 125 Granthas

**COMPLETE**

Tulasi in the title stands for Tulasidasar author of Tulasi Ramayana. This treatise stands for the worship of Hanuman of Kasi possessing 53 verses.

**தொடக்கம் :**

**காப்பு**

'காசியிலே மாதுளசி காவியகர்த்தா வணங்கும்
மாசில்திருத் தாசரதி மாண்பறிந்து - கூசிநிற்கும்
அஞ்சனைசெய் மாலை அமைக்க விநாயகனை
நெஞ்சகமே வைப்போம் நினைத்து

**பிரபந்தம்**

ஆரியமும் தாய்மொழியும் ஆய்ந்துபெறும் புலமைபெறும்
சீரியராம் புலவர்பிரான் சீதைபதி கதையியற்ற
நேரியமெய் யுதவிபுரி நித்தியவைராக்கியனை
ஆரியனும் அனுமானை யகம்வைத்துப் புகழ்வோமே (க)

அஞ்சனமே நிகர்மேனி அருக்ககுல சிகாமணியை
நஞ்சனையும் களமறைத்து நன்குபணி யனுமானை
கெஞ்சநிறை பேரன்பால் நிருபமனும் கலீகரனை
அஞ்சனைசெய் தணைக்கரசி யகரத்தே வாழ்த்துவமே (உ)

**முடிவு :**

'நினைபவருக் கெளிதரும் நெஞ்சமுள மாருதியே
இணைபவருக் குரியமருந் தீர்ந்தருளு மருத்துவனே
வனைபவருக் குளம்வேண்டும் வாழ்வனைத்தும் அருள்வாயே
புனைவர்க்குப் பொருளானாய் பூரணனே அனுமானே (ருஉ)

**வாழ்த்து**

காசிநகர் வாழ்ந்தருளும் கலீசுவரன் வாழியவே
ஊசியிலே தக்கிணத்தே உலாவுமண்ணல் வாழியவே
மாசிலதா மனம்படைத்த வால்மீகி துளசிகவி
ஆசிலதாம் வாக்குடைய அறிவர்கணம் வாழியவே'

**குறிப்பு :** இந்நூல் காசி துளசி அனுமான் மாலை என்னும் பெயரினை பெற்றுள்ளது. இதன் கண்ணே காசியிலுள்ள அனுமான் பெருமைகள் பாடப்பட்டுள்ளன. துளசிதாசர் ஓர் இராமாயணம் எழுதத் தூண்டுதலாக வணங்கிய கோவிலை துளசி அனுமான் என்று பெயரிட்டு அழைக்கின்றார் இந்நூலாசிரியர் அவ்வனுமனுக்குப் பாமாலை ஒன்றைச் சூட்டி மகிழ்ச்சி அடைகின்றார். இயற்றியவர் திரு. நா. கனகராசன் எம்.ஏ. முழுவதும் உள்ளது. மொத்தம் 53 பாடல்கள் உள்ளன.

## R 8537
## காசி மாதவன் மாலை
## KASI MADHAVAN MALAI

Pages 183-190; Lines 28 on a page.
Extent 125 Granthas

**COMPLETE**

Worships Madhava (Vishnu) in 53 stanzas. Author, N.Kanagaraja Iyer.

**தொடக்கம் :**

'காசியிலே வாழ்வுதந்து கங்கைநதி நோக்கியமர்
தேசில் மாதவன்றன் சேடிக்கே - பேசுதொகை
நன்கமைய நான்முகனார் நாமகளை
மென்கவியால் நெஞ்சமே வேண்டு

கங்கைபிந்து அருள்வதனாற் காசினியின் சராசரத்தை
அங்கைநிறை தனம்போன்றே ஆனந்த நிலையேற்றும்
செங்கையுள மாதவனே தேவேசா சிறுதளியில்
எங்கைநிறை பிரசாதம் ஈத்துவப்பாய் காசியிலே (க)
காசியிலே கங்கையருள் கரைமேலே கவின்விளங்க
தேசின்மிகு திருக்கோயில் திகழ்ந்தருளும் தேவேச
ஆசில் மனம் அடியேங்கள் அடைவதற்கே அருள்புரிந்து
மாசில்பதம் வரஅருள்வாய் மனதிசையு மாதவனே.'

**முடிவு :**

'முடிவின்றி தொடக்கமின்றி முகிழ்த்தபொருள் ஒன்றுளதே
படியன்றி வானகத்தும் பாதலத்தும் உளததுவே
கடியொன்று துளவமணி கவின்மலிந்த திருமேனி
அடியொன்றி மாதவனென் றணுகுதும்யாம் கங்கையிலே (ருஉ)

**வாழ்த்து**

காசியவி முக்தநகர்க் கடவுண்மை வாழியரோ
ஊசிமுதல் வ"சிவரை உலகுயர்கள் வாழியரோ
மாசில் மனம் புகுந்துறையும் மாதவன்றாள் வாழியரே

பாசியொடு பதீசியெலாம் பரம்பொருளே வாழியரே"

**குறிப்பு** : காசி மாதவன் மாலை என்னும் பெயரினை உடையது இந்நூல். இதனுள் காசி மாநகரின் கண் அமர்ந்து அருள் வழங்கும் மாதவனின் பெருமைகள் கூறப்பட்டுள்ளன. இவ்விறைவனை வணங்கினால் ஆற்றல் வரும் அறிவுவரும், பொருளரசு, புகழரசு, பொருந்துவதும் எளிதாகும் என்று ஆசிரியர் திரு. நா. கனகராசன் எம்.ஏ அவர்கள் பாடல்களில் கூறியுள்ளார். இதயத்தை மலராக்கி இறைவன் இரு திருவடியில் தூவுகின்ற தொண்டர்கள் தொல்லையினின்றும் மீள்வார்கள் என்றும் குறிப்பிடுகின்றார். முழுவதும் உள்ளது. மொத்தம் 53 பாடல்கள் உள்ளன.

## R 8538

## ஸ்ரீ காசி காலவயிரவ மாலை

## SRI KASI KALAVAIRAVA MALAI

Pages 191-198; Lines 28 on a page.
Extent 130 Granthas.

**COMPLETE**

**God Bairava of Kasi has been praished by N.Kanagaraja Iyer in 53 songs.**

**தொடக்கம் :**

**காப்பு**

'காசிநகர் வாழ்ந்தருளும் கால வயிரவனை
ஆசி தருக்கென் றடைமாலை - தேசிலக
காசிநகர் வாழும் கணபதியைப் போற்றுகின்றேன்
மாசில்பொருள் வாக்கில் வர.

மாசிலா மனத்தோர் வேண்ட வரந்தரும் கருணைவள்ளல்
ஊசிவாழ் கங்கா மக்கள் உளத்திலே யுறையும் தேவன்
ஆசிலா வேத அந்தத் தருத்தமே விளங்கு மூர்த்தி
காசிகா புரத்தைக் காக்கும் காலவை ரவனே போற்றி (க)

அருத்தியா லிறைஞ்சு மக்கட் கவரவர் வேண்டிற் றீயும்
விருத்தியே யன்றி வேறு வேண்டிலாக் கால மூர்த்தி
வருத்திய வருத்த மாற்றும் வயிரவ தேவ நின்னை

இருந்தினா ரிதயத் தென்றார் எழில்மலி காசிக் கண்ணே' (உ)

**முடிவு** :

'எழில்மலி யுருவே யுள்ளோய் எழில்பொலி யிதய முள்ளாய்
பொழில்மலி காசிக் கண்ணே பொலிவுறும் கோயில் கொண்டாய்
மொழியெது கூறினாலும் முனிவற வேற்றுக் கொள்ளும்
கழிமகிழ் மனத்துத் தேவ காலவை ரவனே வாழி (ருஉ)

**வாழ்த்து**

காசி வாழ் விசுவ நாதன் கழல்மலர் சிறப்ப வாழ்க
காசிகா புரத்து வாழும் காந்தையர் இருவர் 'வாழ்க
காசியே காவல் பூண்ட காலவை ரவனும் வாழ்க
காசிமா மக்கள் வாழ்க கங்கையும் வாழ்க நன்றே"

**பின்னணியுரை** : சாதாரண ஆடி நஉ (ஆம் நாள்) சனிக்கிழமை காலை மணி 8.30 இப்பிரபந்தம் இங்கு முதற்பாதி பூர்த்தியாகிறது.

**குறிப்பு** : காசி காலவயிரவ மாலை என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இந்நூலுள்ளே. 'ஆலமே பருகும் அண்ணல் ஆலயம் காவல் பூண்ட சீலமே மிகுந்த' வைரவனை வாழ்த்திய பாடல்கள் உள்ளன. காசி மாநகரில் சிவபெருமான் குடிகொண்டிருக்கும் கோவிலின் சிறப்பினையும் அங்கும் அமர்ந்தருள் வழங்கும் வைரவனின் பெருமையும் சிறப்பாகப் பாடப்பட்டுள்ளன. இயற்றியவர் திரு. நா. கனகராசன், எம்.ஏ., மொத்தம் 53 பாடல்கள் உள்ளன. முழுவதும் உள்ளது.

## R 8539
## காசித் துண்டி விநாயக மாலை
## KASI THUNDI VINAYKA MALAI

Pages 199-206; Lines 28 on a page.
Exelent 100 Granthas.

**COMPLETE.**

Vinayaka of Kasi has been glorified by N.Kanagaraja Iyer in 53 Tamil veses.

**தொடக்கம் :**

**காப்பு**

'துண்டி விநாயகன் தொன்மைபொலி காசிநகர்
கண்டி அணிந்த களமுள்ளான் - வெண்டிருநீ (று)
ஏறு திருமேனி யீசன் புகழ்பாடப்
பேறு பெறுவேம் பெரிது.

துதிக்கையா லுயர்ந்த தேவன் தொல்பெருங் காசி யுள்ளான்
துதிக்கைநம் கடமையென்றே சுருதியோ தினர்சொல் கின்றேன்
மதிக்கையும் எளிதினிலே வாரண முகத்துத் தேவை
பதிக்கையும் அரிதே வாழ்க்கைப் படுகையில் வீழு நெஞ்சே

வீழுவாய் நெஞ்சே ஞான வீரையின் அலைகளுடே
தாழுவாய் என்றேன் கேளாய் சகத்திலே தாழ்வா யந்தோ
வாழுவாய் என்று கூறும் வாரண முகத்து வள்ளல்
ஆழுவான் வேதம்பாடும் அவமுகதக் காசிக். கண்ணே (உ)

**முடிவு :**

"சரணமே நல்காயிற் சரணத்தை விடுதல் செய்யோம்
பரணமே விழையா யாயிற் பாடுவோம் பணிவோம் போவோம்
கரணமே நினக்குத் தந்தோய் கணபதி காசி வார்வே
அரணமே யெமக்கா தற்கா அகமுறத் துதித்து நின்றேன் (ருஉ)

**வாழ்த்து**

காசிமா நகரம் வாழ்க கங்கைமா நதியே வாழ்க
காசிவாழ் இறைவன் வாழ்க கண்ணுதல் தலைவி வாழ்க
காசிவாழ் தருமம் காக்கும் கணபதி தேவன் வாழ்க
காசியே நினைக்கும் மாந்தர் கருதிய வாழ்வு வாழ்க"

**குறிப்பு** : இந்நூல் காசித் துண்டி விநாயக மாலை என்னும் பெயரினை உடையது. இதன் கண்ணே காசியிலுள்ள விநாயகனின் பெருமை கூறப்பட்டுள்ளது. துதிக்கையாலுயர்ந்த தேவனைத் துதிப்பதே நமது கடமையென்றும், வணங்குவார் இனத்தை வாழ்த்தும் வாரண முகத்து வள்ளலென்றும் விநாயகன் பாராட்டப்படுகின்றான் விநாயகனைக் காவற்றெயவமெனக் கொண்டு காப்புச் செய்யுள் பாடாதார் காவியம்

பாடாதாரே என்று விநாயகனின் பெருமையைக் கூறுகின்றார். வாழ்த்துப் பாடல் ஒன்றுடன் 53 பாடல்களும் உள்ளன. இயற்றியவர் திரு நா. கனகராசன், எம். ஏ., முழுதும் உள்ளது.

## R 8540

## வதரி நாராயண மாலை

## VATHARI NARAYANAMALAI

Pages 207 - 219; Lines 32 on a page.
Extent 175 Granthas

**COMPLETE.**

God Narayana of Vathari Shrine has been extolled in pious words. Extolled by N.Kanagaraja Iyer is 51 Tamil verses.

**தொடக்கம் :**

**காப்பு**

'உருக்குருகும் பாட்டால் ஒருவனையே யாரும்
திருக்குருகை நம்மாழ்வார் தேரும் - திருக்கொள்
வரதிநா ராயணனை வாக்காலே வாழ்த்தி
பதவியும் காண்பேன் பரிந்து

**பிரபந்தம்**

அதரிவார் பெயரர் அவரென மனத்தே
தொடர்பினை வளர்ப்புறு முறவு
பதரென வுணரும் மெய்யறி அறவே
பரமகா ருணிகராம் குரவர்
தெரியர் இணக்கம் பெறாதபே றாளிக்
காத்தலால் மெய்யறி வடைந்தே
வதரி யாசிரமம் இமயமா மலைமேல்
வசித்தருள் நாரணற் பணிவோம். (க)

**முடிவு :**

'பொன்னொளி பிறங்கும் முடிகளே யுடைய
பொருப்பெனப் புலவரே புகழ்ந்த
மின்னொளி முகிலே தவழுறு மிமய

வெற்பிலே முடிமணி யெனவே
விளக்கும் தலத்திலே மறைந்த
தன்னொளி தலைவனே வியாசன் முதலோர்
மன்னொளி தெளிக்கும் வதரியா சிரம
வதரிமா முடியநா ரணனே (ரு)

**வாழ்த்து**

வாழிய உலகே மக்களே விலங்கே
மற்றுள வுயிர்களின் வகையே
வாழிய அமர கரணங்களே முனிவர்
மாதவர் துறவினர் வகையே
வாழிய இமய மலையின்மே லெழுந்த
வயக்கமார் முடிகளின் வகையே
வாழிய வதரி மாமுடி யமர்ந்த
வதரிநா ராயண முனியே'

**தொடக்கம்** : வதரி நாராயணமாலை என்னும் பெயரினை உடையது. இதனுள்ளே, நாராயணனின் சிறப்புகள் பாடப்பட்டுள்ளன. அவ்விறைவனை பெருமைகள் பிறக்கும் பிறப்பிடம் எனவும் வாக்கருள் தலைவன் எனவும் வாழ்த்துகின்றார். மேலும் வள்ளலே யெனயாம் வாய்திறந்திடு முன் வதரி நாரண அருளுகவே எனவும் வேண்டுகின்றார். இயற்றியவர் திரு நா. கனகராசன், எம்.ஏ., அவர்கள். முழுவதும் உள்ளது. மொத்தம் 51 பாடல்கள் உள்ளன.

## R 8541
## வதரிமுடி ஆஞ்சநேயன் மாலை
## VATHARI ANJANEYAN MALAI

Pages 220 - 227; Lines 28 on a page.
Extent 125 Granthas.

**COMPLETE**

Poet N. Kanagaraj Iyer worships Hanuman of Vathari on Himalayas. Sons written 53.

**தொடக்கம் :**

**காப்பு**

'வதரிமுடி நாரணற்கு வாய்த்தெழும் பாகக்
கதரியரே காணக் கருதாப் - பதமதனில்
நிற்கும் அனுமானை நெஞ்சில் நினையவருள்
சொற்கும் கலையாள் துணை

நரநாரா யணமுனியாய் ஞானமுளார் இனம் பணிய
வரநாரா யணதலமாம் வதரிமுடி நாரணன் முன்
படிநாரா யணசபமே பலிக்கநிற்கும் அனுமானை
அரநாரா யணனயனே அருள்வதனுர் பணிவோமே (க)

**முடிவு :**

'தாயிருந்த தலநோக்காய் தந்தையினை மறந்தனையே
வாயிருந்த மனமிருந்த மாதவனை யுருக்காண
நீயிருந்த வதரிமுடி நேயமொடு பிறர்வந்தால்
காயிருந்த மரம்காட்டி கனிதகுதி அனுமானே (ருஉ)

**வாழ்த்து**

வாழியரோ இமயமலை வாழியரோ வதரிமுடி
வாழியரோ வதரிமுடி வாழ்ந்தருளு நாரணனே
வாழியரோ நாரணனை மனத்துவைத்த மாருதியே
வாழியரோ சித்தசுத்த வாய்த்தபெரு மாதவரே'

**குறிப்பு :** இந்நூல் வதரிமுடி ஆஞ்சநேயன் மாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண் ஆஞ்சநேயரின் சிறப்புகள் விளக்கப்பட்டுள்ளன. இமய மலையின் சிகரத்தில் இருக்கின்ற மாலுக்குத் தொண்டரான அனுமனின் பெருமை விளக்கப்பட்டுள்ளது. கணையாழி அளித்து இறைவிதந்த தலைமணி பெற்று இணையாரும் இல்லாத இராமனுக்கு செய்தி சொன்ன இராமாயண வரலாறும் பிற புராணக் கதைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆசை வயப்படா மனத்தன் என்றும் அஞ்சனையின் திருக்குமரன் என்றும் ஆசிரியர் நா. கனகராசன், எம்.ஏ., அவர்கள் பாராட்டுகின்றார்கள். முழுவதும் உள்ளது. மொத்தம் 53 பாடல்கள் உள்ளன. இறுதிப்பாடல் வாழ்த்துப்பாடலாக அமைந்துள்ளது.

# R 8542

# கேதார நாதன் மலை

# KETHARA NATHAN MALAI

Pages 228-235; Lines 28 on a page.
Extent 125 Granthas.

**COMPLETE**

Siva of Tirukketaram has been talked at length in praise; Told by N.Kanagaraja Iyer in verse medium. We have got 53 stanzas.

**தொடக்கம் :**

'மாலிமயத் துச்சியிலே வாழ்ந்தருளும் கேதாரன்
நூலிமயத் துள்ளே நுழைகின்றான் - ஆலினகம்
நால்வர்க்கு அருளினற்கு நன்மாலை வேழமுகன்
பால்வைத்த நெஞ்சமே பாடு.

**பிரபந்தம்**

ஆழாழி வளர்ந்தானுளன் அருகே யெனமகிழ்வாய்
யாழாய்கா ஞானாதியர் எய்தபெறு நிலையாய்
வாழாதவர் வாழ்வைப் பெற வரமேயருள் தலைவ
கேழாயின வொளிமேயினை கேதார கிரீசா (க)
கேதார முடிக்கண்ணுறை கேண்மைப்பொரு ளலையோ
சாதாரண ஞானத்தவர் சார்தற் கெளிதிலதாம்
ஆதார மனைத்தும் கடந்தப்பால் உளபொருளே
வேதா முதலோர் வேண்டிய விமலா வருள்புரியே'

**முடிவு :**

'அலைபொங்கிய கடல்முன்புறு மசலத்திடை யமர்வாய்
மலையொன்றிய தலைவோனென மறையோர் புகழுவரே
நிலையொன்றிய கேதாரனே நினதாரருள் புனைவான்
கலையென்று ஆழாழி கடக்கம்துணி வுளவே (ருஉ)

**வாழ்த்து**

கேதார மலைக்கேயுறை கிரிசாபதி வாழ்க
ஆதார முயிர்க்காகிய அகலச்சிவை வாழ்க
தீதார விடுக்கமானச் செல்வத்தவர் வாழ்க
பாதார விந்தந் தந்தருள் பரமாயதி வாழ்க

**குறிப்பு** : கேதாரன் நாதன் மாலை என்னும் பெயரினை உடையது. திருக்கேதாரம் எனுமிடத்தில் கோவில் கொண்டருளும் சிவனின் பெருமைகளைப் பற்றி இந்நூல் குறிப்பிடுகின்றது. கறையே கெழு களமே என்றும், கருணைக்கடலலையே என்றும் ஆசிரியர் பாராட்டுகின்றார். இயற்றியவர் திரு நா. கனகராசன் ஆவார். முழுவதும் மொத்தம் 53 பாடல்கள் உள்ளன.

## R 8543
## திருக்கயிலைச் சிவபிரான் மாலை
## THIRUKKAYILAICH SIVAPIRAN MALAI

Pages 236 - 248; Lines 32 on a page
Extent 150 Granthas
**COMPLETE**

Running in virutham metre this manuscript tells about Siva of Kayila mountain. We see here a flow of 51 songs by N. Kanagaraja Iyer.

**தொடக்கம்** :

**காப்பு**

'திருக்கயிலை வீற்றிருக்கும் செம்மேனி வள்ளல்
உருக்கவினை யுள்ளத்தால் உள்ளி - மருக்கமரும்
மாலை புனைய மனங்கொண்டேன் ஓரம்பன்
காலை வணங்கிக் கனிந்து

**பிரபந்தம்**

உருக்கயிலை யுடையானை உளக்கயிலை
மகிழ்வானை ஓங்கா ரத்தே

அருக்கயிலை அமைவானை அருவுருவத்
தருட்கயிலை அமைகின்றானை
மருக்கயிலை மலர்சூட்டி மாதவரும்
பெருமானைச் சேவிப்போமே
போகியரும் வணங்க நோக்கும்
திருக்கயிலை மலையானைச் சிவமயமாம்'

**முடிவு :**

'அமையைவெலும் திருத்தோளி இமயமலை
உச்சியிலே அநேக காலம்
சமயமுடி வுறைபொருளைத் தான் மணக்கும்
கருத்தானே தவமே பூண்டாள்
கமலமலர் நிலத்தெழுந்து நீலநிறம்
விளக்கவங்கு கமழா நிற்கும்
நமையவனே நினையானேல் திருக்கயிலை
நினைந்தருகில் நணுகு வோமே. (ரு)

**வாழ்த்து**

வாழியரோ திருக்கயிலை இமாலயத்தின்
பெருமுடியாய் வயக்கம் பெற்றே
வாழியரோ கயிலாயம் கோயில் கொண்ட
கருணையினுன் மறையின் மேலோன்
வாழியரோ வைமவதி பார்வதியாம்
திருப்பெயர்பூண் மலையின் வல்லி
வாழியரோ சிவகணங்கள் கணபதியே
அறுமுகனே வாழ்க நன்றே"

**குறிப்பு** : திருக்கயிலைச் சிவபிரான் மாலை என்னும் பெயரினை உடையது இந்நூல். இதன் கண்ணே கயிலையங்கிரியில் காட்சிதரும் சிவபிரான் பற்றிய செய்திகள் விளக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. சிவனிருக்கும் கிரிதேடி அலைய வேண்டாம். தீ வளர்த்து வேள்விகளைச் செய்ய வேண்டாம். அவனிருக்கும் திசை நோக்கி தொழுதால் போதுமென்று கூறுகின்றார் ஆசிரியர் நா. கனகராசன். எம்.ஏ., மொத்தம் 51 விருத்தப் பாடல்கள் உள்ளன. முழுவதும் உள்ளது.

# R 8544
# தத்தாத்திரேய மாலை
# THATHTHATHIREYA MALAI

Pages 249 - 261; Lines 32 on a page
Extent 160 Granthas

**COMPLETE**

Delineation of Tathattiraya rishi Anosuya Attiri and others are present in this manuscript writer N.Kanagaraja Iyer. We have 51 verses.

**தொடக்கம் :**

**காப்பு**

'அநசூயை அத்திரியார் ஆரணம்வாழ் மும்மை
தனைநாடி வேண்டித் தவத்தால் - வனைசுதனும்
தத்தாத் திரேயமுனி தாண்மலர்சேர் மாலையிது
வைத்தாள் கலைமா மகள்

**பிரபந்தம்**

சிவத்தினை நினைக்கச் சிவன்படை பொருத்தித்
  திருமகள் கொழுநனை நினைக்க
நவத்தினை விளக்கும் திகிரிசங் கேந்தி
  நான்முகன் திருவுரு நினைக்கத்
தவத்தினை மறையாக் கமண்டலம் தாங்கித்
  தத்தவாத் திரேயனா யமைந்த
பலத்தினை யடைந்து பவத்தினைக் கடக்கும்
  பரிசருள் பரமனைப் பணிவாம்'. (க)

**முடிவு :**

'அருட்பெருங் கடலே அறிவின் வாரிதியே
  ஆத்தும தத்துவ சாகரமே
பொருட்பெருந் தலைவ பொருளையோ யுணர்த்திப்
  பூமியை வலம்வரும் புருட
மருட்பெருங் களைக்களைந் தருட்பயிரை

வளர்த்தருள் அறிவினே ருழவ
தெருட்பெருந் திருவைச் சிறயரேம் பெறவே
செய்தருள் தத்தமா முனியே (ரு0)

**வாழ்த்து**

வாழிய கற்பின் உருஅந சூடை'
வாழிய அத்திரி முனியே
வாழிய அவர்தம் தலத்தது சிறப்பே
வாழிய மலைதொழும் மலையே
வாழிய தவத்தின் வடிவென வுலகில்
வந்தருள் தத்தமா முனியே
வாழிய பிரம விஷ்ணுசங் கரராம்
வடிவுள ஒருபெரும் பொருளே'

**குறிப்பு** : தத்தரிதிரேய மாலை எனும் பெயரினை உடையது இந்நூல். இதன்கண் நாராயணனின் தொண்டராகவும், அவதாரமாகவும் மதிக்கப்டுகின்ற தத்தாதிரேய முனிவரின் பெருமை விளக்கப்ட்டுள்ளது இவர்தம் வரலாற்றுடன் தொடர்புடைய அநுசூயை அத்திரியார் ஆகியோரின் வரலாறும் விளக்கப்பட்டுள்ளன. முப்பெரும் கடவுளரும் குழந்தையானமையும், அவர்தம் மனைவியர் சென்று வேண்டியனமையும், பிற கதைகளும் குறிக்கப்ட்டுள்ளன. இயற்றியவர் நா. கனகராசன் முழுவதும் உள்ளது.

## R 8545

## அவதூத மாலை

## AVATHUTHA MALAI

Pages 262 - 282; Lines 32 on a page.
Extent 275 Granthas.

**COMPLETE.**

A literacy garland on Avatuta rishi whose sketch is in mahabarath present sketch in 53 verses is by N. Kanagaraja Iyer.

**தொடக்கம் :**

**காப்பு**

'அவதூத ஞான அவதார கோட்டி
சிவதூதர் நாரணன் - தவதூதர்
என்னவே வாழ்வகலா நேரம்பன் மெய்யருளாற்
பன்னவே கொண்டேன் பரிவு

சிவதூதர் இவரென்றே தெளித லாமோ
திருமாலின் தூதரென்று தேர்தல் ஆமோ
தவதூதர் தத்தமுனி தயையின் தூதர்
தமக்கெனவே வாழாத தரும தூதர்

நவதூதர் பக்தியினை நயக்கும் தூதர்
ஞானகணம் அருள்பொழிய நடக்கும் தூதர்
அவதார பரம்பரையின் அருள்மெய்த் தூதர்
அனைவரையும் ஒருருவாய் அகம்கொள்வோமே'

**முடிவு :**

'நீதிபதி பதவியிலே நிறைந்த கீர்த்தி
நிலத்தடங்கத் துறவரசராய் நிமிர்ந்த ஞானி
பாதிமதி யணிந்தபரன் பதியே யாடும்
பழமைமலி புதுவைநகர் படைத்த பேரும்

போதின் முக மமையிறைவி புவனை தேவி
புகுந்திருக்கத் தனிமையமைத்துப் பொருத்தமாக
வீதியினை அவள்பெயரால் விளங்கச் செய்தே
வேதமுடிக் காலயத்தே விரிவித் தாரே (அஉ)

சேந்தனது மங்கலத்தே செறிந்த ஞானி
சிவமயமாய் ஆங்கடங்கு சிறப்பு நோக்கிச்
சாந்தமுனி திருப்பணிகள் தகவே செய்தார்
தகுமுறையில் தவம்வாழத் தருமம் நாட்டி
மாந்தர்மனம் மகிழவறம் வளரும் நாட்டில்
வந்தருளும் புவனேசி மலர்த்தாள் போற்றி
ஆர்தனையும் அருட்பணிக்கே அகத்தைக் கொண்டே
அவனிமகன் வாழ்த்த அமைந் தாங்குளாரே (அங)

**குறிப்பு** : இந்நூல் அவதூத மாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண் வியாசமுனி பாகவத வியன்கதைக்கண் போதமுற அவதூத புருடன் என்றோர் புண்ணியனைத் தருகின்றார். அப்புண்ணியமுனியின் வரலாறே போற்றப்படுகின்றது. அவதூதன் என்றால் அனைத்தையும் துறந்தவன். வெறுத்தவன் என்று பொருள் தரும். உலகபற்றுகள் அனைத்தையும் துறுந்த முனியை அவதூத முனி என்று அழைக்கின்றார் ஆசிரியர். அகப்பற்று அனைத்தையும் திகம்பர நிலையைக் குறிப்பதாகவும் நூலுள் குறிப்பிடப்பட்டுள்ளது. அரும்பு மலர் கொண்டு அருச்சித்தாலும் அனற்குழம்பை உடம்பெல்லாம் அப்பினாலும் மாறுபடாத மனநிலையைக் கொண்டவர் அவதூத புருடர். மறைக்காத உடலோடு தோன்றும் தோன்றல் என்றெல்லாம் புகழப்படுகின்றார். இயற்றியவர் திரு. நா. கனகராசன் எம்.ஏ., முழுவதும் உள்ளது. மானமரியாதை முதல் மரபை யெல்லாம் மனிதர்விட்டால் விலங்கினமே வந்தாற்போலும் என்று சில உலகியலைப் பற்றிய கருத்துக்களையும் ஆங்காங்கே பாடியுள்ளார்.

## R 8546 - 8594 (One Codex)

Pages 1-476; Paper 33cm x 20.5c.m.
Tamil New Good Presented by the author N.Kanagaraja Iyer to G.O.M.L. Madras - 5.

## R 8546
## பரம்பொருள் மாலை
## PARAMPORUL MALAI

Pages 1-4; Lines 30 on a page.
Extent 250 Granthas

**COMPLETE**

On general almightly this by N.Kanagaraja Iyer runs in 30 verses.

**தொடக்கம்** :

'பரம்பொருள்மேற் பாடும் பனுவல் சிறப்ப
வரம்பொருளை நன்கு வழங்கச் - சிரம்பணிவேன்
வேழ முகத்து விநாயக மெய்ப்பொருளை
ஆழ மனத்து ளமைத்து

## நூல்

புகழற் குரியது புனைதற் குரியது போற்றற் குரியதென
இகழற் கரியது எண்ணற்கரியது எய்தற் கரியதெனா
அகழற் கரியது ஆழ்தற் குரியது அணுகற் குரியதெனா
மகிழப் பெறுமுனம் வாழ்த்தத் துணிகுவம் மறைமேற் பொருளினையே (க)

மறைமேல் மறைவதை மனனுக் கரியதை வாழ்த்தத் துணிவதுவே
நிறைவே நிறைவதை நிலையே பெறுவதை நினைக்கத் துணிவதுவே
பொறையே தவநெறி பொலியப் பெறுமவர் புகழற் கரியதனை
இறையே யெனநினை துணிவே பெறுகுவம் இறைமைப் பொருளினையே (உ)

முடிவு :

'தேந்துணர் வேண்டிய நிலையென ஞானியர் சித்த மறிந்ததுவே
மாந்தளிர் அறுகொடு பூக்களை வீசுநர் மண்ணகம் வருவதுவே
பூந்துணர் தூவிய புண்ணியர் நெஞ்சுறு பொற்புரு வுள்ளதுவே
மாந்தரு மேனிதில் அறிவுறு பரவுறு மெய்ப்பொருளே (உகூ)
பழம்பொரு ளென்று பணிந்தவர் பேசிய பழமைசிறந்ததுவே
சிரம்பாடி பாதமு நெஞ்சுறு பாதமும் சேர்த்து வணங்குநரை
பெறு மாறு வினிப்பது போல்வது வருவது போல்வதுவே
தரம்பெறு வாழ்வை யளிப்பது ததாரணி தானறி யாததுவே (௩உ)

**குறிப்பு** : பரம்பொருள் மாலை என்னும் பெயரினை உடையது இந்நூல். இதன் கண்ணே, வருவது மிலையது போவது மிலையென மறைகள் புகன்றிடும் பரம்பொருளைப் பற்றிய செய்திகள் பாடப்பட்டுள்ளன. அப்பரம்பொருளுக்குப் பாமாலை சூட்டுகின்றார் ஆசிரியர் நா. கனகராசன். இந்நூலில் பரம்பொருளின் தன்மைகளைப் பற்றியும் பாடப்பட்டுள்ளன. மொத்தம் 30 பாடல்கள் உள்ளன. முழுவதும் உள்ளது.

# R 8547

# சொக்கலிங்க மாலை

# CHOCKALINGGA MALAI

Pages 5-11; Lines 30 on a page
Extent 150 Granthas
**COMPLETE.**

God Chokkalingan of madurai has been praised for compassion. Author, N. Kanagaraja Iyer. Total Stanzas 51.

**தொடக்கம் :**

## காப்பு

'கயற்கண்ணி போற்றும் கழல் கொண்ட சொக்கன்
மயற்கண்ணே வாழும் மனத்தேம் - செயற்கண்ணர்
ஆகம் புரிய அருளுகென வேழமுகம்
ஏகத் தருளும் இனிது.

## நூல்

நாக வாழ்வினான் இந்திரன் தொழும் நாயகப்
பெருந்தெய்வ மென்பதோ
பாக வாழ்வினை அங்கயற்கணி பற்ற நல்கிய செல்வ
னென்பதோ
ஏக வாழ்வினை யாமுமெய்தவே இனிதுமுன்வரு
மீசனென்பதோ
சோக மாகிய பாவமேவுமெம் சொக்கலிங்கமே
சொக்கலிங்கமே'

**முடிவு:**

'காரணத்துளே காரியத்தினை காண்க வெண்ணமே கழலும் வேதமே
ஆரணத்துறை ஆழமறிபவர் ஆயிரத்திலே ஒருவர் இல்லையே
நாரணற் கருள் நம்பவெம் பிரான் ஞானயோகமே நல் வேண்டுவேம்
தோரணத்தெழில் தோன்று மாலவாய்ச் சொக்கலிங்கமே சொக்கலிங்கமே

## வாழ்த்து

கடம்பன் வாழ்கவே கரியும் வாழ்கவே கடம்பமாவனக் கடவுள் வாழ்கவே
நடம்பயின்றருள் நம்பன் வாழ்கவே ஞான மார்க்கமே நன்கு வாழ்கவே
விடங்க வேடமே வேண்டி வாழ்கவே வேதவேதியன் மெய்ம்மை வாழ்கவே
தொடங்க வந்தன சொற்கள் வாழவே சொக்கலிங்கமே சொக்கலிங்கமே (ருக)

**குறிப்பு** : இந்நூல் சொக்கலிங்க மாலை என்னும் பெயரினை உடையது. இதன் கண் கயற்கண்ணிக் காதலியின் நாயகனும் சொக்கலிங்கனின் சிறப்பு சொல்லப்படுகிறது. அன்பு கொண்டவர் நெஞ்சுள் நிற்பவன் ஆலவாயுறை அமுத மூர்த்தி, என்று இறைவனை நினைந்து உருக்கமாகப் பாடிய வரிகள் பல இடங்களில் உள்ளன. ஒவ்வொரு பாடலும் இறைவனின் பெருமையைக் குறிப்பிட்டு இறுதியில் சொக்கலிங்கமே சொக்கலிங்கமே

என்று முடிகின்றது. திருவிளையாடற் புராணக் கதைகளைத் தாங்கிய பாடல்களும் உள்ளன. இயற்றியவர் திரு நா. கனகராசன் எம்.ஏ., முழுவதும் உள்ளது.

## R 8548

## நன்மை தருவார் மாலை
## NANMAI THARUVAR MALAI

Pages 12-34; 36 on a page.
Extent 300 pages

**COMPLETE**

Poetic garland in pious praise of Chokkalingam of Madurai praise consists of 52 songs. All are in virutham metre.

**தொடக்கம் :**

'சுந்தர பாண்டியனார் சொக்கனே பூசித்த
சந்திர சேகர சங்கரன் - எந்தையின்
இம்மையில் நன்மைதரு மீசன் திருமாலை
செம்மை செயும் வேழமுகத் தேவு

மெய்ப்பொருள் யின்னதென நன்குணரு நாட்டமொடு
மேதினியில் வாழ்வு கண்டோம்
மெய்யற்ற பொருள்பலவு நமதுள்ள மைம்பொறிகள்
வீழ்ந்தவழி யீர்த்த தறிவோம்

எப்பொருளை யுணர்வதால் வேறொன்றை எண்ணவோ
எய்தவோ நினைவுறாதோ
இணையற்ற அப்பொருளை எய்தாத நிறைவாழ்வில்
எப்பயனும் விளைவ தில்லை

முப்பொருளு மாவதது மூன்றுமறை முடியேறு
முக்கியப் பொருளு மதுவே
முச்சங்கம் வாழ்ந்த தமிழ் வடமொழியின் மாகடல்
முயன்றுபெற லரிய பொருளை

இப்பொரு ளெனத் தெளியு மெய்யறிவு குருவருளின்
எய்துவோம் உய்தி பெறுவோம்
இம்மையினில் நன்மைதரு மிறைவனது திருவருளை
எட்டுவோம் இப்பி றவியே' (௯)

முடிவு

சாமமறை இசையோடு கேட்கவே செவிகொண்ட
சங்கரன் ஐந்து முகவன்
சச்சிதா னந்தமய மானமெய்ப் பொருளென்று
சாத்திரம் தேறு மொருவன்

காமமதை வேரோடு களையவே கருதலாற்
கல்லாலி னீழல் வந்தான்
கலைகளால் விளக்க லாகாத பொருள் பெற வந்த
கற்புமிகு சனகாதியர்

நாமமது சேரவே தண்ணருள் விழித்தருளு
சத்தியன் நித்திய சிவம்
தருமமுதல் நான்கையும் மனிதர்பெற வேண்டியே
தண்டமிழ் நாடு வந்தான்

ஏமமலி வாழ்வருளி யன்பருக் குதவவே
இறைவியொடு வீற்றிருந்தான்
இம்மையினில் நன்மைதரும் இறைவனது திருவருளை
எய்துவோம் இப்பிறவியே (ரு0)

## வாழ்த்து

வாழிதிரு வாலவாய் மதுரையம் பதிகூடல்
வாழிய கடம்ப வனமே
வாழியந் நகரிலே அரசாண்ட மாண்புமிகு
வழுதியர் குலத்தின் அறமே

வாழியம் மரபிலே தவத்தினால் வேள்வியால்
மலையதுச மன்னன் எய்தும்
வாழிதிரு மகளாக வந்தருளு மம்பிகை
வாழ்வார் கயற்கண்ணியே

வாழி அரனாகவே வந்தவனை யேற்றருளும்
மன்னவன் சொக்கேசனே
வாழிசுந் தரனாய பாண்டியன் வழிபட்ட
மத்தியபுரி தேவதையருள்
வாழியத் தேவிதிரு மணம்வேட்ட நன்மைதரும்
வள்ளலாம் நம்பிதானே
வாழியம் பெருமானை வாழ்த்தவரு மாளிகை
மணமுள்ள மலராகவே"

குறிப்பு : 'நன்மை தருவார் மாலை' என்னும் பெயரினை இந்நூல் பெற்றுள்ளது. இந்நூலின் கண் இம்மையில் நன்மை தரும் இறைவனது அருட்சிறப்பு விளக்கப்பட்டுள்ளது. அந்நன்மை தரும் இறைவனின் பெருமை மலர்களைக் கவிதை நார் கொண்டு தொடுத்துப் பாமாலையாக்கிச் சூட்டிப் பரவசமடைகின்றார் ஆசிரியர். அவ்விறைவனை சுந்தர பாண்டியனாச் சொக்கனே பூசித்த சந்திரசேகரன் என்று பாராட்டுகின்றார். இயற்றியவர் திரு. நா. கனகராசன் எம்.ஏ., முழுவதும் உள்ளது. மொத்தம் 52 பாடல்கள் உள்ளன. அனைத்தும் விருத்த யாப்பினால் அமைந்து உள்ளன.

## R 8549

## திருவாப்புடையார் மாலை

## THIRUVAPPUDAIYAR MALAI

Pages 35-41; Lines 30 on a page.
Extent 110 Granthas

**COMPLETE.**

Aappu here stands for Aappanoor. Aappanoor siva has been lifted to a glorious position by N. Kanagarais Iyer in 50 stanzas.

**தொடக்கம் :**

காப்பு

'ஆலவாய் உத்தரத்தே ஆப்புடையார் கோயிலென
ஞாலமே போற்றுகின்ற நற்பதியிற் - கோலமுற
வீற்றிருக்கும் தேவன் வியன்மாலை சூட்டுகின்றேன்
ஊற்றிருக்கும் நெஞ்சால் உவந்து.

ஆப்பனூர் வாழும் அரன்கழற்கே சேர்மாலை
வாய்ப்பவே வாக்கருள்க வாக்கிறைவி - கோப்பமையும்
சொல்லும் பொருளும் துணியும் விநாயகன்றான்
புல்லும் துணையாற் புகும்

**நூல்**

யாப்புருவ மணியுருவம் எழுத்தமையும் சொல்லுருவம்
கோப்புருவம் பொருளுருவம் கொடுத்தடியார் குலமானாய்
ஆப்புடைய திருக்கோயில் அமருகின்ற நாயகனை
ஆப்புடைய சீலகனை அகமுருகி இறைஞ்சுவமே'(க)

**முடிவு :**

'அம்மையே அப்பனே ஆப்பனூர் வீற்றிருக்கும்
செம்மையே உருவாய தெய்வத்தை நினைப்பார்க்கு
வெம்மையே தருகவியும் மென்மைநல முதவுவதை
இம்மையே காண்குறலாம் என்பர்திருத் தொண்டர்களே (சஅ)

ஆ வாழ்க அந்தணரும் அருமறையும் வாழியரோ
கோ வாழ்க கோமுறையைக் கொண்டவரும் வாழியரோ
தே வாழ்க ஆப்பனூர்ச் சிவபெருமான் திருவடிகள்
நாவாழ்க நாவில்வரும் நன்மாலை வாழியவே (ரு0)

**குறிப்பு** : 'திருவாப்புடையார் மாலை' எனும் பெயரினை உடையது இந்நூல். இதன்கண், ஆப்பனூர் எனும் பதியில் கோயில் கொண்டருளும் அரன் பெருமை பாடப்பட்டுள்ளது. தோப்புடைய திருமதில்கள் சூழ்ந்துவர விளங்கும் திரு ஆப்புடையார் கோயிலமர் அரனருளை வேண்டி ஆசிரியர் நா. கனகராசன் பாமாலை சூட்டி வணங்குகின்றார். மொத்தம் 50 பாடல்கள் உள்ளன. முழுவதும் உள்ளது.

## R 8550

## கூடலழகர் திருமாலை

## KUDALAZHAKAR THRUMALAI

Pages 42-48; Lines 30 on a page.
Extent 150 Granthas

**COMPLETE**

51 Stanzas here proclain about the nicety of Azagar of Madurai; all by N.Kanagaraj.

**தொடக்கம்** :

'கூடல் அழகர் குணநலங்கள் பாராட்டிப்
பாடல் புகலவரும் பண்பினேன் - நீடவளர்
தண்டமிழின் வேதம் தகும்குருகை மாலடியார்
கண்டபொருள் தேடுவேம் காண்.

பாடலழகர் பலர்புகழ்ந்த பதங்கொள் மதுரவல் லிதமும்
கூடலழகன் குணத்தழகன் கோன்மை யழகன் குறிப்பழகன்
ஆடலழகன் அருளழகன் அருமை மறைவாழ் பொருளழகன்
பாடலழகன் பரிவழகன் பதமே பணிந்து பராவுவமே (க)

பரி மேலழகர் வையைநதிப் பரப்பை நோக்க வருமழகர்
கரிமே லழகர் கலையழகர் கருத்தினினைப்பார் மனத்தழகர்
அரிமே லழகர் தமிழழகர் அரிய மறையின் மேலழகர்
புரிவாழ ழகர் புகழழகர் பொருந்துகூடல் அழகரன்றே' (2)

**முடிவு** :

'சிந்தா மணியே அடியேங்கள் சிந்தை நினைந்த அருள் மாலை
நந்தா விளக்கே நாயகனே நான்மை வேத முதற்பொருளே
அந்தார் அணியும் உரமுடையாய் அழகுக் கொள்ளை யுருவாள
எந்தாய் அருள்க என்கின்றோம் எமக்கே யருளை விளக்குதியே (ரு0)

**வாழ்த்து**

வாழி தமிழே வளர்கூடல் வாழிசங்கத் தமிழ்மதுமை
வாழி கூடல் அழகானான் வாழிமதுர வல்லி கழல்
வாழி அடிகள் பதத்தடிமை மாறா மனத்டதுப் பெருமக்கள்
வாழி அழகன் தமிழ்மாலை மதுரமயமாய் தமிழ் அமைந்தே"

**குறிப்பு** : கூடலழகர் திருமாலை என்னும் பெயரினை உடையது. இதன் கண்ணே நான்மாடக்கூடல் என வழங்கும் மதுரையின் அருட்சிறப்பு பாடப்பட்டுள்ளது. வையை நதிபரப்பைக் காணவரும் (அழகர் திருநாள்)

அழகரின் காட்சிபற்றியும் மதுரையின் அழகு பற்றியும் விளக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. மதுரையம்பதியின் பெருமை மாத்தமிழின் பெருமையோடு இணைந்தே காணப்படுவதால் தமிழையும் பாடுகின்றார். இயற்றியவர் திரு. நா. கனகராசன். எம்.ஏ., மொத்தம் 51 பாடல்கள் இருக்கின்றன. முழுவதும் உள்ளது.

## R 8551
## சோலைமலை அழகர் மாலை
## SOLAI MALAI ALAKAR MALAI

Pages 49-56; Lines 30 on page.
Extent 125 Granthas.

**COMPLETE**

A Vaishnava literature on Azhagar of TirumalirunCholai Malai, this has been composed by N.Kanagaraja Iyer in verse medium.

**தொடக்கம் :**

**காப்பு**

'திருமா லிருஞ்சேலை தென்மலையில் வாழும்
திருமால் திருவடிக்கே சேர்ந்து - கருமால
கழலக் கருதுவேன் கற்றதமிழ் மாலை
அழகற் கமைப்பேன் அமைந்து

**விநாயகர்**

அநாமயமே நல்கும் அழகர்திரு மாலை
விநாயகனை வேண்டி விளம்பிச் - சநாதனமாம்
தத்துவமே தேர்வேன் சரண்புகுந்த வாழ்வினேன்
சத்துவமே மாலையெனத் தான்

**ஆழ்வார்கள்**

மாலிருஞ் சோலை மலையழகன் மாலையினை
நூலிருஞ் சோலை நுழையாதேன் - மேலிருந்து
ஆரருளை நல்கவல ஆழ்வார்கள் பன்னிருவர்
பேரருளை யேத்துவேன் பெற்று.'

முடிவு :

'இலங்கா புரத்தை யடியவர்க்கீந்த இராகவனே
கலங்கா வரத்தைக் குசேலர்க் களித்த கரியவனே
அலங்கா இருப்பைத் திருமகட் டாக்கி அழகர் மலை
அலங்கார மாயவ னாக விளங்கும் அதிபதியே.

**வாழ்த்து**

வாழி திருமா லிருஞ்சோலை யாய மலையரசு
வாழி திருமா லிருஞ்சோலை மாயவனே
வாழி அழகன் குழகன் தமிழிதேர் மனத்தினனே
வாழி அழகன் திருமாலை என்றும் வளம்பொலிந்தே"

**குறிப்பு** : சோலைமலை அழகர் மாலை எனும் பெயரினை உடையது. இது திருமாலிருஞ்சோலைமலை அழகர் மாலை எனும் பெயரினையும் பெற்றுள்ளது. இதன்கண்ணே திருமாலிருஞ்சோலை வெற்பினைச் சேர்ந்த இடமும் இறைவனும் சிறப்பிக்கப்படுகின்றனர். பக்தர்களின் பயண திசையாக விளங்குகின்றது என்றும் போற்றப்படுகிறது. ஆங்கு கோயில் கொண்டு உறையும் திருமாலை, அடியாரைக் காக்கும் அறமுடையாய் என்றும், மூலப்பொருளே என்றும் மூலப்பொருளே என்றும் பழகாதவர்க்கும் பெரும் பேறு அளிக்கும் பரிவினை உடையாய் என்றும் போற்றுகின்றார். இயற்றியவர் திரு. நா. கனகராசன், எம்.ஏ., முழுவதும் உள்ளது.

# R 8552
# திருவேடக நாதன் மாலை
# THIRUVEDAKA NATHAN MALAI

Pages 57-69 Lines 34 on a page.
Extent 175 Granthas.

**COMPLETE**

A Saiva literature on Iswaran of Thiruvedagam, All the 51 stanzes are by N. Kanagaraja Iyer. Sketch of nayanar, Pandian King, Mangayarkarasi are also present in small measure.

**தொடக்கம் :**

காப்பு

'ஏடக நாதன் இணையடிக்கே சாத்தவரும்
ஏடக மாலை இனிதாகிக் - கூடகமே
ஆடும் பொருள் விளக்க ஆனைமுகப் பிள்ளையருள்
ஆடும் துணையாய் அமைந்து

புகலியர் பெருமான் சமணரை வாத
பூமியி லெதிர்த்திடும் பொழுது
மிகலியில் உடைய வழுதியர் குரிசில்
மேனியை பொழித்தருள் விரகர்

தகலியல் தெளிய வையயில் விடுத்த
தமிழ்மய மந்திரப் புதையல்
இகலியல் புனலை யெதிர்த்து மேலடைந்த
ஏடக நாதனைப் பணிவாம்.'

**முடிவு :**

'நாவினுக் கரசர் ஞானசம் பந்தர்
நாவலூர் நம்பி வாசகரே
கோவினுக் குரிய மறைகளைத் தமிழாற்
குறைவற விசைக்கவே பிறந்தார்

ஆவினுக் குரிமை ஐந்தினா லரனை
ஆட்டுதல் என்றனர் அவரே
தேவினுக் குரிமை யேடகப் பெருமாள்
செயலென உலகுணர்ந் துயுமே. (ருO)

**வாழ்த்து**

வாழிய வழுதி அரசூண் நிலமே
வாழிய மதுரைமா நகரே
வாழிய பெருகும் வையமா நதியே
வாழிய புனலெதிர் தமிழே

வாழிய தமிழின் ஏட்டிரன மகிழ்வால்
வருகென வழைத்த வேடகமே
வாழிய சிவமே யேடக முடையான்
மாலையும் வாழிய வளர்ந்தே. (51)

**குறிப்பு** : திருவேடகநாதன் மாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே திருவேடகத்தின் பெருமையும் அங்கே கோயில் கொண்டு அருள் வழங்கும் நாதனின் பெருமையும் பாராட்டப்பட்டுள்ளது. பாண்டியனின் வெப்பு நோய் தீர்ந்ததும் மங்கையர்க்கரசியார் மாண்பும் குறிப்பிடப்பட்டுள்ளன. வைைப்புனலை எதிர்த்து வாழும் தமிழும் வாழ்வு தரும் இறைவனும் வணங்கப் பட்டுள்ளன. சீர்காழிக் குழவி மழுவொரு கையிலும், மறியொரு கைகளிலும் வசித்தருள் ஏடகம் என்றும் போற்றப்பட்டுள்ளது. இயற்றியவர் நா.கனகராாசன் எம்.ஏ., முழுவதும் உள்ளது.

## R 8553

## திருப்பூவணநாதன் மாலை
## THIRUPPOVANATHAN MALAI

Pages 70-76; Lines 30 on a page.
Extent 125 Granthas.

**COMPLETE**

Through these 51 songs the poet N. Kanagaraja Iyer exposes the tender heart of Thiruppoovananatha of Thiruppoovanam. The songs are in virutham metre.

**தொடக்கம்**

**காப்பு**

திருப்பூ வணநாதன் சேவடிக்கே சாத்தும்
திருப்பூ வணமாலை செய்து - விருப்பூர
சௌந்தர நாயகி தந்தவொரு தந்திகமழ்
சிந்தனையில் வைத்தேன் செறித்து

**நூல்**

உருவாய் இருப்பாய் என்கின்றார் உருவமில்லாய் என்கின்றார்
உருவோ டருவம் பொருந்தினையென் றுரைப்பார் தாமு
முளரிறையே
தருவாய் அருளை யெனவேண்டித் தலையார் றாழ்ந்து
பணிகின்றோம்
திருவார் வையைக் கரையிலுள்ள திருப்பூ வணத்தெம்
பெருமானே (க)

மலரே நிறைந்த வனத்தின்கண் வாழ்வு விழைந்துவந்தனையே
நலரே மனத்தால் உருவுணர்ந்த நணுகற் கெளிய
அருட்பெருக்கே
கலரே தவத்திற் புகுந்தாலும் காண்டற் கரிய பெருஞ்சுடரே
சிலரே தெளியப் பெறுந்தேவ திருப்பூ வணத்தெம்
பெருமானே (உ)

**முடிவு** :

'கயலார் கொடிகொள் கயற்கண்ணி கலைகள் வளர்த்த பாண்டிநிலம்
இயலா லுயர இசைகூத்தும் எழுந்து வளர வருள்தேவே
மயலா மனத்து நாங்குதொழும் வள்ளற் பெருமா ளீயலையோ
செயலா லுயர்ந்த தெய்வதமே திருப்பூ வணத்தெம் பெருமாளே (ரு0)

**வாழ்த்து**

வாழி பாண்டித் திருநாடு வாழி சைவ சமயநெறி
வாழி மதுரை வளநகரம் வாழி சொக்கன் திருவருளே
வாழி கயற்கண் பெருமாட்டி வாழி திருப்பூ வணநகரே
வாழி திருப்பூ வணநாதன் மலர்த்தாள் மற்றும் கவிமலரே"

**குறிப்பு** : திருப்பூவண நாதன் மாலை என்னும் பெயரினை உடையது. இதன் கண்ணே மலரே நிறைந்த வனத்தின்கண் வீற்றிருந்து அருளும் பெருமானின் புகழ்பாடப்பட்டுள்ளது. அப்பெருமானைத் தன்னேரிலாத் தருமத்தான் எனவும், நாதபூத நாயகன் எனவும் பாராட்டுகின்றார் நூலாசிரியர் நா கனகராசன். அறுசீர் விருத்த பாடல்கள் 51 உள்ளன. முழுதும் உள்ளது.

## R 8554
## சோமநாத மாலை
## SOMANATHA MALAI

Pages 77-84; Lines 30 on a page.
Extent 150 Granthas.

**COMPLETE**

God Somanatha of Madurai has been sung here in 51 stanzas by N. Kanagaraja Iyer of 20th century.

**தொடக்கம்** :

**காப்பு**

'வானர வீர மதுரை யெனப்பெயர்ப்பூண்
மான மதுரையிலே வாழ்சிவத்தின் - தானமெணி
பாடும் தமிழ்மாலை பண்புபெற வேரம்பன்
நீடும் அருணல்கும் நின்று.

**வேண்டுகோள்**

இலங்கையில் இராமபிரான் இதயச் செல்வி
இருஞ்சிறையி னிங்குதவி யியற்றப் போந்த
வலங்கையொடு வால்வலிகொள் வாயு மைந்தன்
வன்னிசுதன் முதலானோர் மதுரை நோக்கி

துலங்குபணி புரிந்துவரச் சோம நாதன்
சுடரொளிகொள் தேவியோடும் தோன்றும் காட்சி
நலங்கெழும் மனத்தாலே நாடிப்போற்றி
ஞானம் வழுதுண்டு நலங்காண் போமே' (க)

**முடிவு** :

'கருணை மூர்த்தியை வானர வீரரின் கணிபறி பெருமானை
அருணை காசியே சிதம்பர மதுரையில் அவதரித்
திருப்பானை
சுருணை யேடுகள் தேடியு மறிந்திலாச் சோதியைச்
சுருதியின் முடிவாமும்
மருணை மூர்த்தியை மதுரையம் பதியிலே வணங்குவேம்
வாழ்வோமே (ரு0)

**வாழ்த்து**

சோம நாதனே வாழிய ஆனந்த சுந்தரக் கோடி வாழ்க
ஏம நாதனே வாழிய வானரர் இறைஞ்சிய இறைவாழ்க
சாம நாதனே வாழிய தமிழ்மறை சாற்றிய தவன்வாழ்க
காம நாதனே உருவிலி யாக்கிய கடவுளின் அருள் வாழ்க."

**குறிப்பு** : இந்நூல் சோமநாத மாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே மதுரையில் வீற்றிருந்து அடியவர்க்கு அருள் வழங்கும் சோமநாதனின் பெருமை கூறப்படுகின்றது. மதுரை சோமநாதன் சுருதி முடி வீற்றிருக்கும் சோமநாதன் என்றும் வாயுகாதலன் முதலியோர் வணங்கிய மதுரைவாழ் மகாதேவன் என்றும் பாராட்டப்படுகின்றான். வானர வீரர் வணங்கிய பெருமையை உடையவன் மதுரை சோமநாதன் என்று ஆசிரியர் நா. கனகராசன் பாடுகின்றார். மூவர் பாடிய தமிழ் மறை கேட்டவன், மூவாத்தமிழைக் காப்பவன், அடியவர் துன்பத்தை அகற்றும் அன்பினன் திருவிளையாடல்களின் நாயகன் என்றெல்லாம் இறைவனைப் போற்றுகின்றார். மொத்தம் 51 பாடல்கள் உள்ளன. முழுவதும் உள்ளது.

## R 8555

## இராமநாத மாலை

## RAMANATHA MALAI

Pages 85-92; Lines 30 on a page.
Extent 150 Granthas.

**COMPLETE**

God Ramanatha of Rameswaram has been extolled in this piece. Author N. Kanagaraja Iyer. Period 20th century.

**தொடக்கம் :**

'இராமன திச்சரத்தே எவ்வுலகும் காப்பான்
பராபரமா யுள்ள பகவன் - அராவணிவான்
மாலை புகல்வான் மனங்கொண்டு வேழமுகன்
காலை வணங்கினேன் கண்டு

**வேண்டுகோள்**

சேதுபதி காவல் திருப்பணி வேண்டுவான்
மாதுபதி யாகவுள மாதேவன் - ஈதுபதி
என்னவே தேவை இருப்பான் திருமாலை
பன்னவே வந்தேன் பணிந்து.

பருவத வர்த்தனி பாதம் பணிந்தேன்
சருவதை என்றவனைச் சார்ந்தேன் - உருவருவம்
உள்ள இராமேசன் உள்ளத்தே யுக்குருகும்
வெள்ளம் அருள்க விழைந்து.'

**முடிவு:**

'சிலையே விழைந்து வளர்தலை தேடிப் பிரியா துறவுகொளும்
நிலையே சிறந்த நிருபனே நினக்கே யடிமை யெனவுரைத்துக்
கலையே பயின்ற புலவர்பலர் கருத்தை நினது கழற்கமைக்க
வலையே யறுக்கும் அறிவுறவே வருவாய் தேவைக்கதிபதியே

**வாழ்த்து**

இராம நாத சிவம் வாழ்க இறைவி மலைவாழ் மகள் வாழ்க
இராம நாத நாமவிசை இசைக்கு மன்பர் குழு வாழ்க
இராம நாத ஆலயத்தே இதயம் வைத்த உயிர் வாழ்க
இராம நாத மகேசுரத்தே என்றும் தருமம் வாழியவே."

**குறிப்பு** : இராமநாத மாலை என்னும் பெயரினை உடையது. இந்நூல் இராமபிரானும் சானகியும் சிவவடிவம் அமைத்துவணங்கிய இடத்தில் உள்ள இறைவன் இராமநாதன் என்று அழைக்கப்படுகிறான். அவ்விராம நாதனின் பெருமை எனும் மலர்களைக் கவிதை நாரில் தொடுத்துப் பாமாலையாக்கி அவ்விறைவனின் பாதமுடிக்குச் சூட்டி மகிழ்கின்றார் ஆசிரியர் நா. கனகராசன். இயற்கை நிலையின் எழிலெல்லாம் இனிது விளங்கும் தலமாக அமைந்துள்ளது என்று அந்த இடத்தையும் பாராட்டுகின்றார். மொத்தம் 51 பாடல்கள் உள்ளன. முழுவதும் உள்ளது.

# R 8556
# திருப்பரங்குன்ற மாலை
# THIRUPPARANGUNRA MALAI

Pages 93-100; 30 on a page.
Extent 90 Granthas

**COMPLETE**

Both the god and place of Tirupparangundram (near Madurai) have been talked at length by the author N.Kanagaraja Iyer. He has confirmed 56 stanzas for this mission.

**தொடக்கம் :**

**காப்பு**

'அறுபடை வீடென் றறிஞர்கணம் போற்றுகின்ற பேறுபெறு
மாதலங்கள் பிஞ்ஞகனே - நீறுபொலி
மேனியோடு வாழ்ந்தாலும் மேலவற்கே வாழ்த்துரைக்க
ஆனைமுகன் சொல்வான் அறிந்து வேண்டுகோள்

பரங்குன்றம் வாழும் பரமன் குமாரன்
அரங்குன்று கூரியவே லையன் - சிரங்குன்றில்
போற்ற வருளும் புதுப்பனுவல் வேழமுகன்
ஏற்றம் அருள எழும்'

**முடிவு :**

'தேவாரம் கேட்டான் திருப்புகழும் செய்த்தொண்டர்
நாவார ஓதும் நவகவியும் - தேவாதி
தேவன் பரங்குன்றன் செவ்வேள் செவியேற்றான்
யாவன் இதுசெய்வான் இன்று

**வாழ்த்து**

முருகப் பெருமான் முதன்மைநிலை வாழ்க
பருகற் கமுதாகப் பாடும் - திருமொழியை
அன்றுநமக் கீந்தருளும் அண்ணன் பரங்குன்றன்
என்று மிருந்தருள்க இங்கு"

குறிப்பு : திருப்பரங்குன்ற மாலை எனும் பெயரினை உடையது. இதன்

கண்ணே திருப்பரங்குன்ற முருகனின் பெருமையும் அப்பதியின் பெருமையும் கூறப்பட்டுள்ளன. சூரனை வென்ற சுடர்வேலையேந்திவரும் வீரன் என்றும் ஆறுமுக வித்தகன் என்றும் ஆறுபடை வீடுகண்ட பிரான் என்றும் முருகன் சிறப்பிக்கப்படுகின்றான். வாசவன் தந்த மகளை மணம் புரிந்த வரலாறும் குறிப்பிடப்படுகின்றது. மொத்தம் 56 பாடல்கள் உள்ளன. அவற்றுள் 53 வெண்பாயாப்பில் இயற்றப்பட்டுள்ளன. இயற்றியவர் திரு. நா. கனகராசன், எம்.ஏ, முழுவதும் உள்ளது. வெண்பா யாப்பில் தடங்கலின்றி கருத்துக்களை ஆசிரியர் தந்துள்ளார்.

## R 8557
## கதிர்காம மாலை
## KATHRI KAMA MALAI

Pages 101 - 107; Lines 30 on page.
Extent 110 Granthas

**COMPLETE.**

Lord Muruga of Kathir Raman (Sri Lanka) has been glorified by N.Kanagaraja Iyer. Runs in 51 songs.

**தொடக்கம்** :

**காப்பு**

'கதிர்காமம வாழும் கதிர்வேற் பெருமான்
உதிர்காமம் வேண்டா ஒருவன் - துதியாக
மாலை அமைப்போம் வரசித்தி வேழத்தின்
காலை இறைஞ்சிக் கனிந்து

**பிரபந்தம்**

உரைபிறந் தோங்கு மறைக்குள் மறைந்த உருவமுளான்
கரையிரந் தோங்கிய கல்விக் கடலைக் கடக்கவருள்
மரைசிறந் தோதிய மந்திர சக்தி பரித்த பிரான்
விரைசிறந் தாடும் கடம்பன் கதிர்காம வேலவனே

தூண்டா விளக்கே சுடரே சுடரிற் சுடரொளியே
ஆண்டான் அடிமைத் திறத்தால் அடியேமை ஆண்டவனே
பூண்டாய் கடம்பே மலர்த்திரு மாலை பொலிபெற
வேண்டா வடைந்தேன் அருள்வாய் கதிர்காம வேலவனே'

முடிவு:

'ஆடு மயிலூர்தி ஐயத் தமிழ்நன் கறிபுலவா
தேடி யடியவர் நெஞ்சம் புகுந்தருள் சிற்றடியாய்
வாடு மலரை மணக்கப் புரியும் மனமுடையாய்
வேடு பணியும் தனியாய் கதிர்காம வேலவனே

வாழ்க வேலவன் வாழ்க இலங்கைக் கதிர்காம மேவுபிரான்
நூலவன் வாழ்க அவுணரை மாய்த்தருள் நோன்புடையாய்
காலவன் வாழ்க அடியார் தலைமேற் கழல் பதிப்பான்
மாலவன் வாழ்க மலைசார் கதிர்காம மால்தளிக்கே'

பின்னணியுரை :கனகலஷ்மி சௌமிய மாசிக்கரு வியாழன் பகல்1030.

குறிப்புரை : இந்நூல் கதிர்காம மாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண் ஈழநாட்டில் உள்ள கதிர்காமம் எனும் ஊரில் கோயில் கொண்டிலங்கும் முருகனின் பெருமை கூறப்பட்டுள்ளது. கதிர்காமத்தின் வளமும் செழுமையும் வருணிக்கப்பட்டுள்ளது. கதிர்காம முருகன் வேண்டா தவர்க்கும் அருளுபவன் என்றும் விதியை யிருஞ்சிறை யாடுபவன் என்றும் கதிர்காம வேலன் என்றும் பாராட்டப்படுகின்றான். இப்பாராட்டு மலர்ப் பாடல்களை மாலையாக்கி முருகனுக்குச் சூட்டி மகிழ்கின்றார் திரு. நா. கனகராசன் எம்.ஏ., முழுவதும் உள்ளது மொத்தம் 51 பாடல்கள் உள்ளன.

## R 8558

## குற்றால நாதன் மாலை

## KURRALA NATHAN THIRUMALAI

Pages 108-115; Lines 30 on a page.
Extent 160 Granthas.

**COMPLETE**

A garland of 51 Tamil songs on Siva of Kurralam knitted by N. Kanagaraja Iyer.

**தொடக்கம் :**

### காப்பு

'குழல்வாய் மொழிதழுவும் குற்றால நாதன்
கழல்வாய் சிரம்வைப்போய் காதல் - எழவேலாய்
வேழ முகத்தானை வேண்டித் திருமாலை
யாழ அமைப்போம் இசைத்து.

### பிரபந்தம்

அருவியாய் குறிஞ்சி நிலச்சிறப்புடைய அகலகுற்றா லநாயகனை
ஒருவினா வினவி விடைபெறும் தகவோ உரிமையோ பெற்றிலே
மெனினும்
தருதியா லிறைவ திருவரு ளெனவே தாண்மலர் பணிவது புரிவேம்
வருதிரால் எனவே திறந்துவைத் திருக்கும் வாயிற் புகுந்து
வாழ்த்துவமே (க)

**முடிவு :**

'நீற்றினால் ஒளிரும் நெற்றியால் விடத்தால் நிழலிரு
களத்தினை நிமல
ஆற்றினால் விளங்கும் வேணியாய் தலைமூன் றமைபடை
யேந்திய கரத்தாய்
சோற்றினால் விளங்கும் துறையினை யுடையாய் சுடரொளிச்
சிதம்பரமுடையாய்
காற்றினால் ஒளிரும் காளத்தி யரசே காத்தி(டு) குற்றால
நாயகனே (௩0)

### வாழ்த்து

வாழியே திருக்குற்றா லநாயகனே வாழியோ குழலின்வாய்
மொழியை
வாழியோ தமிழை யுலகனிக் களித்த மாதவ அகத்திய
முனியே
வாழியோ அருவி யுருவெடுத் தணைந்த வரநதி சுரநதி
வளர்ந்தே
வாழியோ திருக்குற்றா லநாயகனை வாழ்த்திய தமிழ் மலர்த்
தொடையே

பின்னணியுரை : வியாழன் பிற்பகல் புதுக்கோட்டை சென்று வெள்ளிக்கிழமை காலை சாந்தானந்தரிடம் கந்தகிரிப் பிரபந்தத் திரட்டினைச் சமர்ப்பித்து வெள்ளி பிற்பகல் இங்கு வந்து மாலையில் இப்பிரபந்தந் தொடங்கி இன்று (சனி) பிற்பகல் பூர்த்தி செய்தேன்.

கனகலட்சுமி ஸ்ரீ இராம நகர் கோட்டையூர்
**நா. கனகராசன்**
28.2.70
(கையொப்பம்)

**குறிப்பு** :- இந்நூல் குற்றால நாதன் திருமாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே குற்றாலத்தில் கோயில் கொண்டு அருள் வழங்கும் நாதனின் பெருமை கூறப்பட்டுள்து. குற்றால நாதனை கயிலை வாழ் சிவமே காசிவாழ் சிவமே காளத்தி வாழ் பரம்பொருளே என்றெல்லாம் மனமுருக அழைக்கின்றார். அவ்விறைவனின் அருள்தன்மையை எம்மனோர் அணுகற் கெளியை நீ என்று பாராட்டுகின்றார். இயற்றியவர் திரு. நா. கனகராசன், எம்.ஏ., முழுவதும் உள்ளது.

## R 8559

## நெல்லையப்பன் மாலை

## NELLAIYAPPAN MALAI

Pages : 116-122; Lines, 30 on a page. Extent 150 granthas.

**COMPLETE**

Nellayappan Siva of Tinnevelley, is the theme here. On him is written here as much as 51 songs. All by N. Kanagaraja Iyer.

காந்திமதி தோள்தழுவும் கண்ணுதலாம் நெல்லையப்பன்
சாந்தியருள் பாதமலர் சார்ந்தரவே - ஏந்திசைகொள்
பாமாலை பாட பரவுவாம் வேழமுகம்
வேலிலே உயர்ந்த அறுமுக நயினார் பேற்றருள் சிவமே

கோமானை நெஞ்சம் குவிந்து
சாலிவா யீச தனிப்பரம் பொருளே தத்துவ நாயக தமிழர்
நூலிலே புகுந்து மணத்தினை வளர்த்த நுண்ணிய திண்ணிய பொருளே

காலிலே விழுந்த அடியவர் தமக்குக் கருணையால் நற்பொருள்
தருவாய் (க)
திருநெல்வேலியிலே தாமிரவருணித் தீர்த்தமே விழைந்த
வாலயனே
பெருநல்வேலியெனா நின்பத மிருமை பிடித்தவர் தலையிலே
நினையே
வருநல் வேலியென மணம்புரி காந்தி மதியினைப்
பிரிகிலா மறையோம்
தருநெல் வேலியிலே சரண்புகப் புரிந்த சாலிவாயீசுர வருளே.'(உ)

**முடிவு :**

'பரம ஆனந்த பரிதனா யினனே பரமநீ யருளிய செயலால்
சிரம சம்பந்தம் இனியெனக் கிலையே சிவமயக் கடலிலே
திளைத்தேன்
வரமடைந் தனனே வாழ்வடைந் தனனே மறந்தன னித்திய
வாழ்வை
உரமடைந்துளே ஒருமைபுக் கனனே ஒள்ளொளி நெல்லையா
னகத்தே (ரு0)

**வாழ்த்து**

நெல்லைவாழ் பெருமான் திருவடி மலர்கள் நிலநிலை திருந்த
வாழ்வுறுக
எல்லையே யிலாத திருவருள் விளக்கும் இறைவியின்
திருவடி பொலிக

நெல்லையே யுலகம் பெறவரு மழையை நிலமகள் நிரம்பவே
பெறுக.
புல்லையும் புண்மை புகல்கிலாய் புலவர் புலனெறி வழக்கு
வாழியவே'

**குறிப்பு :** நெல்லையப்பன் மாலை என்னும் பெயரினை உடையது. இதனுள் திருநெல்வேலியில் உள்ள சிவத்தலத்தின் பெருமைகள் விளக்கப்பட்டுள்ளன. தாமிர வருணியின் தண்ணீரில் குடமுழுக்குச் செய்விக்கப்படுவதை விரும்பும் தகைமையாளனாக இறைவனைப் பாராட்டுகின்றார். நெல்லினை வளர்த்து மக்களை புரக்கும்

நெல்லையம்பதி உறை சிவமே, அடியவர்க்கு அருள் வழங்கும் வள்ளலே என்று இவ்வாறு வாழ்த்துகின்றார். நெல்லிற்கு வேலியாக அமைந்த அற்புதச் செய்திகளைப் பாராட்டியுள்ளார். அப்பெருமானின் பெருமைகளைக் கொண்டு பாமாலை இயற்றிச் சூட்டி மகிழ்கின்றார் ஆசிரியர் நா. கனகராசன்எம்ஏ., முழுவதும் உள்ளது.

## R 8560
## செந்திலாண்டவன் திருமாலை
## SENTHIL ANDAVAN THIRUMALAI

Pages 123 - 135; Lines 32 on a page.
Extent 160 Granthas

**COMPLETE**
51 stanzas here sing the many faceted name and fame of Thiruchendur.
Singer N. Kanagaraja Iyer.

**தொடக்கம் :**

**காப்பு**

'சிவத்தின் குமரன் திருச்செந்தில் வேலவன்
பவத்தின் தொடர்பையே யாற்ற தவத்தின்
நெறியாற் றமிழ்பாட நேர்ந்தேன் தமையன்
குறியால் உளம்புதக் கொண்டு

**வேண்டுகோள்**

உருகவே யுளத்தை யுதவிய பெரும
உவமையே யிலாதபே ரழகாய்
அருகரே வருக திருப்பணி புரிக
அன்பனே யெனவெனை யழைத்தாய்

பருவமா முகிலே தோற்கவே யருளும்
பாத பங்கய மிரண்டுடையாய்
தருகவே யெனவே வேண்டுதல் புரியேன்
சரண்புகுந்தனர் தனர்சர ணருளே.'

முடிவு:

'வீட்டினை யிரக்க விரும்புவே முருக
வேறேதும் அருளவே விழையேம்
நாட்டினை நகரை நலத்தினைக் குலத்தை
நவநிதி களைமதித் திலமே

பாட்டினை யுவந்தே சிரமிசைப் பதிப்பாய்
ஆட்டினை யுவந்தாய் நுதல்விழிப் பொறியே
அப்பனே செந்திலாண் டவனே (ரூ0)
வாழிய கடலே வாழிய அலையே

வாழிய நாழியாய் கினறே
வாழிய சிவமே சிவமயம் பொருந்து
மனமெனும் பொறிநலம் பெறவே
வாழிய திருவார் செந்திலில் இருமை

வசித்துள ஒரு பொருள் முருகே
வாழிய முருகைப் பரவிய பனுவல்
வள்ளிதெய் வானையி னருளே'

**குறிப்பு** :இந்நூல் செந்திலாண்டவன் திருமாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண் கடலலைகள் புகழ்பாடும் திருச்சீரலைவாய் எனும் பதியில் வீற்றிருக்கும் ஆண்டவனின் புகழ் பாடப்பட்டுள்ளது. ஆண்டுள்ள முருகனின் அழகும் அருளும் பாராட்டப்பட்டுள்ளன. முருகனின் அருகே இருமருங்கும் வீற்றிருக்கும் இறைவியரின் எழிலும் கருணையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இயற்றியவர் நா. கனகராசன் எம்.ஏ., முழுவதும் உள்ளது. மொத்தம் 51 பாடல்கள் உள்ளன.

## R 8561
## ஆதிநாதன் மாலை
## ADHINATHAN MALAI

Pages 136 - 142; Lines 30 on a page.
Extent 150 Granthas.

**COMPLETE**

Lord Adinatha of Azhagar Thirumurugan is the main theme here. Composer N. Kanagaraja Iyer of 20th century. We have 51 stanzas to enjoy here.

**தொடக்கம் :**

'ஆழ்வார் திருநகரி ஆதிநா தன்புனைய
வாழ்வார் திருமாலை வாய்ப்புறவே - தாழ்வார்
திருக்குகை வாழ்வார் திருவடியைப் போற்றி
உருக்குருகும் வாக்கை நெஞ்சே உள்ளு.

**பிரபந்தம்**

இசைமலிந்த சாமமறை இளந்தமிழா லியற்றுமன்பர்
நசைமலிந்த நெஞ்சத்தால் நாரணனை யகலாதார்
பசைமலிந்த பாடல்பெறு பரம்பொருளை ஆதிமுதல்
விசைமலிந்த பெருமானை வேண்டுதும்யாம் வீடுறவே (க)

ஆதிமுதல் நாதனென அருமறையே புகழ்ந்தோதும்
வேதமுதல் வித்தகனை மெய்ப்பொருளை நம்மாழ்வார்
ஓதியினால் உணர்ந்துருகு முத்தமனைப் பணிகின்றோம்
நீதிநெறி யுலகினிலே நிலைநின்று வாழ்கனவே (உ)

**முடிவு**

"குருகூரும் திருநதியின் கோலத்தை நினையீரோ
அருகூரும் திருமாலின் அடிமலரை இறைஞ்சீரோ
குருகூரர் திருவாக்கின் குறிப்பினிலே மூழ்கீரோ
பருகீரோ தமிழமுதம் பணியீரோ ஆதியையே (ரு0)

**வாழ்த்து**

வாழ்த்துமின்கள் மனமார மாதவன்றன் பாதமலர்
வாழ்த்துமின்கள் அவன்மார்பம் வாழ்த்திருமான் அடிமலரை
வாழ்த்துமின்கள் குருகூரர் மனச்சிறப்பைத் தவநலத்தை
வாழ்த்துமின் திருக்குருகூர் மாயவன்தோள் மாலையையே

**குறிப்பு** : இந்நூல் ஆதிநாதன் மாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண் நம்மாழ்வாரைத் தந்தருளிய திருக்குருகூர் எனும் ஆழ்வார் திருநகரியில் கோயில் கொண்டருளும் ஆதிநாதன் பாடப்படுகின்றார். ஆதிநாதனை ஆசிரியர் நா. கனகராசன். அறிவர்கணம் புகழ்கின்ற ஆதிபரம்பொருள் என்றும் செங்கமல மலர்மாதைத் திருமார்பில் தரித்த பிரான் என்றும் பாராட்டுகின்றார். அவ்வூர் பரமபதம் பெறுஞ்சிறப்பைப் பாருலகத்திற் பெரும்பதி தான் என்று சிறப்பிக்கப்படுகின்றது.

தண்பொருநை நதி பற்றியும் நாட்டு வளம் பற்றியும், பாடல்கள் குறிப்பிடுகின்றன. இரணியனைப் பற்றிய புராணச் செய்திகளும் உள்ளன. இயற்றியவர் நா, கனகராசன். எம்ஏ., முழுவதும் உள்ளது.

## R 8562

## வைகுந்த நாதன் மாலை

## VAIKUNDA NATHAN MALAI

Pages 143 - 155; Lines 32 on a page.
Extent 300 Granthas

**COMPLETE**

**Vaikuntanatha of Srivaikuntha has been lauded here by the author N. Kanagaraja Iyer. Religious compromise between siva and vaishnava has been contemplated in this treatise.**

**தொடக்கம்** :

'தண்பொருநைத் தீரத்தே தான் பொருந்தும் வைகுந்தம்
பண்புநின்ற நெஞ்சத்தலம் பாடுதலம் - கண்பொருந்தும்
நாயகனைப் போற்றுதற்கு நம்மாழ்வார் பாதமலர்ச்
சேயதுணை யுண்டு சிறந்து.

**பிரபந்தம்**

திருமகள் தலைவன் ஒருபுறம் சிறப்பச்
சிவபரஞ் சுடரொடு புறத்தே
தருமமும் தவமும் தழைப்புற வருளித்
தரணியைப் புரக்கவே யிருக்கும்

பெருமையே பொலிந்த தாமிர வருணிப்
பெருநதிக் கரையுறை தலத்தை
அருமையி னடைந்து பணிந்தன மெழுவோம்
அருள்திரு வைகுந்தம் எனவே (க)

**முடிவு**

ஆன்மதத் துவத்தை அறிவதே சிறப்போ
அது இது என்பதை யுணர்ந்தால்

மான்மய முறவே மனம்புகி னெனையே
மாதொரு பாகனைத் தொடர்ந்து
மான்மய முணர முயலினு மெனையே
மறைகளே தெளிந்தநாள் முகத்தோன்
தான்மிகு மெனவே சரித்திடி னெனையே
சத்து வைகுந்த நாயகனே (ரு0)

**வாழ்த்து**

வாழியோதிரு வைகுந்த மாநகரம்
வாழியர் ஆங்குவாழ் மனித்தர்
வாழியதிரு வைகுந்தமே நிறைந்த
மாயவன் திருவடி மலர்கள்
வாழியோ திருவை குந்தனர் தலைவி
மலர்பொரு திருவடி யிருமை
வாழியோ திருவை குந்தனைப் புகழ்ந்த
மாலையாம் தமிழ்த்திருத் தொடையே

**குறிப்பு** : வைகுந்த நாதன் மாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே தண்பொருநைத் தீரத்தே அமைந்திருக்கும் வைகுந்தப்பதியில் வீற்றிருந்து அடியவர்க்கு அருள் வழங்கும் நாதனின் பெருமைகள் பாடப்பட்டுள்ளன. சிவ, வைணவ மதப் பிரிவுகளின்றி சமரசம் செய்விக்கும் பதியாக இருபெரும் இறைவர்க்கும் இருப்பிடமாக இலங்குகிறது. வைகுண்டம் என்னும் திருவைகுந்தம் என்று சிறப்பிக்கப்படுகின்றது. தொண்டர் தம் மனத்தே சுடர்விளக்கெனவே தோன்றும் தூய மாமணியே! அரிய வைகுந்த நாயகனே ஒப்பில் வைகுந்த நாயகனே என்றெல்லாம் பாடப்பட்டுள்ளன. இயற்றியவர் திரு. நா. கனகராசன் எம்.ஏ., முழுவதும் உள்ளது. மொத்தம் 51 பாடல்கள் உள்ளன.

## R 8563

# வில்லிபுத்தூர் மாலை
# VILLIPUTHUR MALAI

Pages 156 - 168; Lines 32 on a page.
Extent 160 Granthas.

**COMPLETE**

An interesting garland of 51 songs on Andal villiputhur etc. Composed in style by N. Kanagaraja Iyer, this piece runs elegantly.

**தொடக்கம் :**

**காப்பு**

விண்டுசித்தர் கோதை வியப்பார் திருப்பிறப்புக்
கண்டு மகிழ் வில்லிபுத்தூர்க் காவல்புரி - விண்டுபதம்
போற்றிப் புகழும் புதுமாலை நம்நாழ்வார்
சாற்றிற் பெறுமே தமிழ்.

**பிரபந்தம்**

விண்டுசித்தர் பெரியாழ்வார் வேயர் கோமான்
வேதமறை பொருளையுளம் விளங்கக் காணூ
மண்டுசித்த மகிழ்ச்சியினால் மாலை கோத்து
மாலருளே பெறக்கருதி வாழ்த்தப்

பாவைபுகல் பெண்பாவை பவத்தைக் கண்டு
விண்தேய்த்த மகவாக்கொள் வில்லிபுத்தூர்
வேதியனை வேத்தியனை வேண்டு வோமே

**முடிவு**

மைப்படிந் திருமேனி மாயோன் பாதம்
மனம் வைத்துப் பொறிகளையும் வசமே யாக்கிக்
கைப்பிடித்த ஏடுகளைக் கடலில் வீசிக்
கற்பனையே கடந்தபிரான் கருனை காண்பான்

எப்படியும் தவம்புரிவ தெனவே வந்தேன்
இந்நிலத்தில் இனிப் பிறக்கும் எண்ணம் இல்லேன்
செப்படியான் வித்தையென்னச் சிறியோன் றன்னை
திருவல்லி புத்தூரான் சீர்செய் தானே.

**வாழ்த்து**

வாழியவே வில்லிபுத்தூர் வாழும் தெய்வம்
வாழியவே திருப்பாவை வனைந்த கோதை

வாழியவே விண்டுசித்தர் மனத்துச் செல்வம்
    வாழியவே வடமறையும் வழக்கும் வாழ்வும்

வாழியவே ஆழ்வார்கள் வகுத்த வேதம்
    வாழியவே தெய்வசக்தி மனிதர் நெஞ்சம்
வாழியவே மெய்யன்பர் வளரும் நாடு
    வாழியவே அறம்பொருளே மயங்கும் வீடே

**குறிப்பு** : இந்நூல் வில்லிபுத்தூர் மாலை எனும் பெயரினை உடையது இதன்கண்ணே ஆண்டாள் அவதரித்த வில்லிபுத்தூரில் அமர்நது அருள்வழங்கும் பெருமாளின் பெருமைகுறிக்கப்பட்டுள்ளது அக்கோதையின் பெருமையை கோதையெனும் திருப்பெயரே கொண்ட தெய்வம் என்றும் பண்மக்கள் இசைமக்கள் யாவும் சீர்மை படைத்திருந்த கோதைநிகர் பாவை இல்லை என்றும் பாராட்டுகின்றார் திரு நா. கனகராசன் எம். ஏ. வில்லி எனும் வேடர்குலம் தோற்றுவித்த புத்தில் வாழந்த பெருமானின் அருமையும் புலிக்குகையின் பொருள்· கொண்டு எடுப்பிக்கப்பட்டக் கோவிலின் செய்தியும் ஆண்டாள் எனும் கோதையின் வரலாறும் குறிப்பிடப்பட்டுள்ளன முழுவதும் உள்ளது.

## R. 8564

## அரங்கநாதன் மாலை

## ARANGANATHAN MALAI

Pages 169 - 176, Lines 30 on a page
Extent 125 Granthas

**COMPLETE**

Herein 51 verses sing the glory of Sri Ranganathan of Srirangam town. Authored by N. Kanagaraja Iyer of 20th Century.

**தொடக்கம்**

**காப்பு**

திருவரங்க நாயகியின் சித்தமலர் வாழும்
திருவரங்க நாயகனைத் தேடிக் - கருவரங்கம்

மீளாத வாழ்வுபெற வேண்டும் தமிழ் மாலை
ஆளா அருள்வான் அவன்

**குருகூர்**

அவனருளி வேண்டி அவன்றாள் வணங்கும்
தவனமையு நெஞ்சே தமிழால் - அவனுருவைச்
சாற்றும் குருகூர் தாள்மலரில் சென்னிவைத்துப்
போற்றும் திருப்பணியைப் பூண்

**சேனை முதலியார்**

ஆனைமுக னாதியராம் அன்பர்கணம் ஆண்டருளும்
சேனை முதலாவார் திருவடியே - தானை
மடக்கி வணங்குவோம் வாக்கும் வளரும்
தொடக்கி யருள்வான் துணிந்து.

**முடிவு**

வேண்டுகின்றேன் வைகுந்தம் விண்டுபதம் அதுவன்றே
ஈண்டுபதம் பரமபதன் எம்பெருமான் பதமன்றோ
தேண்டுகின்றேன் திருவரங்க திருவீதி வலம் வந்தே
ஆண்டுகுன்றேல் எனவருள அரங்கனுள் ளறிந்தேனே.

**வாழ்த்து**

வாழியரோ உலகமெலாம் வாழியரோ பரமபதம்
வாழியரோ வைகுந்தம் வாழியரோ திருவரங்கம்
வாழயரோ அரவணையில் வளர்ந்தருளும் திருக்கோலம்
வாழியரோ அரங்கரசர் மணவாளன் மாலினகமே.

**குறிப்பு** : அரங்கநாதன் மாலை 'திருவரங்கம் அழகிய மணவாளன் திருமாலை' என்னும் பெயரினை உடையது. இதன் கண்ணே திருவரங்கம் எனும் பெயர் கொண்டு இருமருங்கும் சுற்றிலும் ஆறுகளால் சூழப்பட்டு விளங்கும் வளம் பொருந்திய ஊரில் அருள்வழங்கும் நாதனாம் அரங்கநாதனின் பெருமை பாடப்பட்டுள்ளது. அரங்கநாதனின் கிடந்த வண்ணத்தை ஆசிரியர் நா. கனகராசன் எப்போழுதும் அறிதுயிலில் எழில் விளங்கிவளர்கின்றாய் என்று பாடியுள்ளார். இது பிரபந்த வகையைச் சார்ந்தது. மொத்தம் வாழ்த்துப்பா ஒன்றுடன் 51 பாடர்கள் உள்ளன. முழுவதும் உள்ளது.

## R. 8565
## ஜம்புலிங்க மாலை
## SAMBULINGA MALAI

Pages 177 - 184, Lines 30 on a page
Extent 125 Granthas

**COMPLETE**

Lord Jumbulinga of Tiruvanaikkaval has been explicted in elegant style which has formed a Literary Garland. Making of this garland had been executed by N. Kanagaraja Iyer.

**தொடக்கம்**

**காப்பு**

சம்புலிங்கம் சம்புலிங்கம் ஆனைக்கா ஆண்டலிங்கம்
இம்புலிங்கம் வாழ்வினலம் யாக்கும்லிங்கம் - செப்புலிங்கம்
மாலைபுனை மெய்ப்பணிக்கு வாக்கருள வேழமுகன்
காலை மனம் வைப்போம் கனிந்து.

**வேண்டுகோள்**

முகிலாண்ட இந்திரனே முதலோர் வேண்ட
முத்தமிழும் அருள்கும்ப முனிவன் தந்த
நகிலாண்ட காவேரி நதியின் பாங்கர்
நரருலகும் சுரருலகும் நலமே யெய்த
அகிலாண்ட வல்லியொடும் அரசு பூணும்
அம்புலிங்க மாயமைந்த ஆனைக் காவின்
பகலாண்ட இரவாண்ட பகவன் பாதம்
பக்தியொடு பணிந்துருகிப் பாடு வோமே.

**முடிவு**

சக்தி அழிந்தது கோயிலி லென்பர்கள் சக்தியிலார்
பக்தி வளர்ந்தது காணீர் எனச்சிலர் பாடுகின்றார்
உக்தி சிறந்தது சாதி குலப்பரிவு ஓடியது
முக்தி பிறந்ததோ ஆனைக்கா வீச மொழிந்தருளே

**வாழ்த்து**

வாழிய ஆனைக்கா வாழ்வுறும் அண்ணல் மலரடிகள்
வாழிய தேவன் வழிபாடு பூணும் மலர்க்கொடியே
வாழிய பண்டித கோட்டி வரன்முறை வாழ்வுறவே
வாழிய ஆனைக்கா நாமகள் மாலை மணமுறவே.

**குறிப்பு** : இந்நூல் சம்புலிங்க மாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண் திருவானைக்காவல் எனும் ஊரில் அமர்ந்து அருள் வழங்கும் சம்புலிங்க இறைவனின் பெருமை பாடப்பட்டுள்ளது. ஆனைக்கா ஈசனையும் அகிலாண்ட நாயகியையும் பாடியுள்ளார் பிரபந்த வகையுள் ஒன்றாகிய மாலை வபையுள் அப்பிரபந்தம் அடங்கும் இயற்றியவர் திரு. நா. கனகராசன் எம். ஏ முழுவதும் உள்ளது. மொ¯த்தம் 51 பாடல்கள் உள்ளன.

## R. 8566

## தாயுமானவன் மாலை
## THAYUMANAVAN MALAI

Pages 185 - 197, Lines 32 on a page
Extent 150 granthas

**COMPLETE**

On the hill of Malaikkottai (Tiruchi) is available the god Thayumanavan, Sung herein 51 verses. this uphill task has been accomplished by N. Kanagaraja Iyer

**தொடக்கம்**

**காப்பு**

முக்குடுமி யுள்ள முதியமலை மேலிருக்கும்
முக்கணனைத் தாயான மூர்த்தியனை இக்கணமே
வாயில்வாழ் பிள்ளை மலையுச்சிப் பிள்ளைதுனை
வாயவே வாழ்த்துகவென் வாய்

## பிரபந்தம்

திருச்சிராப் பள்ளித் திருமலை யுருவாய்த்
திகழுமெம் மிறைவனே சிவனே
உருச்சிராப் பள்ளி உச்சியி னளவும்
ஓங்கிய மகாலிங்க மயமே

அருச்சிராப் பள்ளி அகத்திலும் புறத்தும்
அன்பருக் கருளிய அமலா
தருச்சிராப் பள்ளி தரிசனம் தருவாய்
தயைமிகு தாயுமா னவனே

**முடிவு**

ஈகையில் மனமே எழுவதா மெனினும்
எள்ளள வாழ்வுறும் இலேனே
வாகையில் அடைந்த கனகமோ மணியோ
வழங்கவே வழியிலை இறைவ

ஓகையில் வளரும் உளத்தினே னுனையே
உருகியே பாடுதல் துணிந்தேன்
சாகையில் அடைந்து மீண்டுற வரமே
தந்தருள் தாயுமா னவனே

## வாழ்த்து

மறைபுகழ் சிறப்பார் திருச்சிராப் பள்ளி
மலைவளர் திருத்தணி வாழ்க
இறைமையே சிறந்த மட்டுவார் குழலி
எம்மனை மலைமுடி வாழ்க

முறைமையே செலுத்து முச்சிமேற் பிள்ளை
முகவயிற் பிள்ளையும் வாழ்க
நிறைவருள் தாயு மானவெம் பெருமான்
நிலமெலாம் வழுத்தவா ழியவே"

**குறிப்பு** : இந்நூல் தாயுமானவன் மாலை' என்னும் பெயரினை உடையது இதன்கண் உள்ளத்தை நெகிழ்விக்கும் பாடல்களைத் தமிழுக்குத் தந்தருளிய தாயுமானவரின் புகழ் பாடப்பட்டுள்ளது. திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டையில் கோயில் கொண்டுள்ளர். இவரைப்பற்றிய

செய்திகளுடன் திருச்சிராப்பள்ளியின் வரலாற்றுச் செயதிகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. மட்டுவார் குழலியை மணந்தமையும் துறவு பூண்டமையும் பாடல்களில் இடம் பெற்றுள்ளன இது பிரபந்தவகையுள் ஒன்றாகிய 'மாலை'யைச் சார்ந்தது இயற்றியவர் திரு. நா. கனகராசன் எம்.ஏ. முழுவதும் உள்ளது மொத்தம் 51 பாடல்கள் உள்ளன.

## R. 8567

## பெருவுடையார் மாலை

## PERUVUDAIYAR MALAI

Pages, 198 - 204, Lines 32 on a page
Extent, 120 Granthas

**COMPLETE**

**On Siva of Tanjore, this has been sung by N. Kanagaraja Iyer touching some anecdotes sketched in Thiruvilayadal. Literary genre here is malai**

**தொடக்கம்**

'தஞ்சைப் பெருவுடையார் தாண்மலரிற் சென்னிவைத்து
நெஞ்சைப் பணிக்கே நியமித்தேன் - அஞ்செழுத்து
உன்னித் திருமாலை யோதுகின்றேன் மூத்தபிள்ளை
முன்னிற்கும் என்றே முனைந்து

இம்மையொடு மறுமையிலும் ஏனையரைப் பணியாமே
அம்மையொடு மப்பனென அமைந்தருளும் தஞ்சைநகர்
மும்மையுரு மூர்த்தியினை முறையானே பணியேற்றை
இம்மையிலே எமக்கருள்க இராசரா சேசுரனே (க)

சோழர்குலத் திருப்பணிகள் தோன்றுதமிழ் நிலத்தகத்தே
யாழறியும் பாணரொடு இனியதமிழ்த் தேவாரம்
கேழமையப் பாடிவந்த கெழுதகைமைச் சம்பந்தர்க்கு
ஈழவெற்றி தந்தவெந்தை இராசரா சேச்சுரனே.

**முடிவு**

'நாடுநகர் அரசாட்சி நல்கு என வேண்டுகிலேம்
பீடுபெறு பெருந்திருவின் பேராட்சி விழைகிலமே

தேடுபொருள் மதியாதே திருவருளே சுரக்கமனம்
ஈடுபடு வதையுணர்வாய் இராசரா சேச்சுரனே (ரு)

**வாழ்த்து**

இராசராசப் பெயர்கொள் ஏந்தல் திருப்பணி வாழ்க
இராசராசே சனெனும் எம்பெருமான் அருள்வாழ்க
இராசராசே சவரிஎம் மிறைவிபதம் வாழ்க
இராசரா சேசுவரன் ஏற்றதமிழ் வாழியவே".

**குறிப்பு** : இந்நூல் 'தஞ்சை இராசராசேச்சுரம் பெருவுடையார் மாலை' என்னும் பெயரினை உடையது. இதன் கண்ணெ தஞ்சைமாநகரில் சிறப்புடன் விளங்கும் 'இராசராசேச்சுரம்' என்னும் பெருவுடையார் கோவிலின் சிறப்பும் இறைவனின் பெருமையும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. அமரர்கள் அமுது பெறவும் நஞ்சினைத் தான் உண்டதுமான இறைவனின் திருவிளையாடல் போன்ற பல செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. சோணாட்டில் பல தலங்கள் இறைவனின்· இருப்பிடமாக அடியவர்கள் அருள் பெறும் ஆலயங்களாக விளங்கிய போதிலும் தஞ்சைக் கோவில் தரணி புகழ்கொண்டது என்றும் போற்றப்படுகிறது இயற்றியவர் திரு. நா கனகராசன் எம் ஏ முழுவதும் உள்ளது மொத்தம் 51 பாடல்கள் உள்ளன.

## R. 8568
## சார்ங்கபாணி மாலை
## SARNGAPANI MALAI

Pages, 205 -211 Lines 30 on a page
Extent, 150 granthas

**COMPLTE**

From the pen of the poet N. Kanagaraja Iyer have been flourished these 51 viruttams solely on sarngapani of Kumbakonam

**தொடக்கம்**

'ஆரா வமுதாய் அமைசார்ங்க பாண்ணியினை
ஈரா யிரம்பாடல் ஏத்தலாம் - சீரார்

திருமாலை பாடுகின்றேன் தெய்வக் குருகூர்
வருவாரை வேண்டும் மனம்

## பிரபந்தம்

விழவார் கோயில் விளங்குகின்றார் வில்லார் பாணிப் பெருமாளே
உழவார் நிலத்துக் குயிரருளும் உயர்வார் பொன்னி பணிபூண்டாம்
குழகார் எழிலின் கோலத்தாய் குணத்தின் கடலே அருளாளா
அழகார் நகரத் தாலயத்தாய் ஆராவமுதே அருள்வாயே (க)

தரும சாரங்க பாணியென்றே சங்கம் திகிரி தண்டமுளாய்
கரும வீர னெனவிளங்கக் கதையூம் பிடித்த தலைவாயோ
சரும முலக வூயிர்க்கருளத் தரணி யருச்சை யூருவூள்ளாய்
அருமை சிறந்த குடந்தைவளர் ஆரா வமுதே அருள்வாயே (உ)

முடிவு

"பரம பதத்தை அளிக்கவலாம் பரவும் தமிழின் சுவைதேர்வார்
சிரம பதத்தை மாற்றுதியே சீவைகுந்தம் சேர்ப்பிப்பாய்
சும பதத்தில் முன்வருவாய் சரணா கதனென் றேற்பாயே
அரம பதத்தை அரியாயே ஆரா வமுதே அருள்வாயே (ரு0)

## வாழ்த்து

வாழப் பிறந்தார் மனம்புகுந்து வாழும் வாழ்வே வாழியவே
ஆழத் தமுங்கும் அவர்க்களும் ஆரா வமுதன் வாழியவே
போழத் துணிந்த வினையார்க்கும் போகம் அருள வாழியவே
கேழிற் சிறந்த திருக்குடந்தை கிளரும் செல்வம் வாழியவே"

**குறிப்பு** : இந்நூல் 'சார்ங்கபாணி மாலை' என்னும் பெயரினை உடையது தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த 'குடந்தை'யெனும் கும்பகோணத்தில் கோவில் கொண்டு அருள்வழங்கும் ஆராவமுதன் சாரங்கபாணியின் பெருமையைப் பாராட்டிப் பாடப்பட்டப்பாடல்கள் இதனுள்ளே உள்ளன. புகழ்ந்தாலும். இகழ்ந்தாலும் பொருட்படுத்தாப்புண்ணியனே என்றும் தென்னர் கலையும் வடகலையும் தீரத் தெளிந்த வைணவநீர என்றும் பாராட்டப்படுகின்ற வரிகளுக்குச் சொந்தமான திருமால் அக்குடந்தையைச் சிறப்பிக்கின்றர். இயற்றியவர் திரு. நா. கனகராசன் எம்.ஏ மொத்தம் 51 விருத்தப் பாடல்கள் உள்ளன. முழுவதும் உள்ளது.

# R. 8569
# சக்கரத் தாழ்வார் மாலை
# CHAKKARATHALVAR MALI

Pages, 212-218 Lines 30 on a page
Extent, 150 granthas

**COMPLETE**

Sakkarattazhwar of Kumbakonam (Tanjore Dt) has been emlogised earnestly by N. Kanagaraja Iyer of 20th century Emlogy runs in 51 stanzas

**தொடக்கம்**

"அக்கரத்தைக் காண அருளும் திருவுள்ள
சக்கரத் தாழ்வான் தமிழ்மாலை - தக்கவணம்
ஆரத் திருக்குருகூர் ஆழ்வார் திருவருளைச்
சேரப் பெறுவோம் சிறிது.

**பிரபந்தம்**

திருவாழி ஆழ்வானைத் திருக்குடந்தை வார்வானை
அருளாழி யின்னதென அறிவிக்கும் திருவானை
உருளாழி ஞாயிறுவெல் ஒளியமைந்த செயலானை
மருளாழி கடந்துய்ய மனமார வாழ்த்துவமே (க)

ஆறுதலை யமைந்துள்ள தாறுதலை யருளுவது
தேறுதலை யன்பருக்கே சிறப்பாக அளிக்கவலது
ஏறுதலை யறிந்ததன்றி இறங்குதலை யறியாத
தூறுதலை சாய்த்தருளும் ஒருதிகிரி உருவினதே' (2)

**முடிவு**

"அரவணையான் ஆழியினை அகலாதே இருந்தாலும்
பரவணையும் குடையாகிப் பாதுகையா வந்ததுபோல்
இரவணையா ஒளியுடையான் எம்பெருமான் சக்கரமும்
பரவணையும் குடந்தையிலோர் பழங்கோயில் கொண்டதுவே

(சகூ)

சங்கேந்து பருப்பொருளின் தாண்மலர்கள் வாழ்த்துகின்றோம்
கொங்கேந்து சோலைகள் சூழ் குடந்தைநகர்க் கோயிலிலே
அங்கேந்து மிடங்கொண்ட ஆழியினைப் போற்றுகிறோம்
இங்கேந்து நிலையமைத்த இறைவனருள் வாழியவே" (ருO)

**பின்னணியுரை** : சௌமிய மாசி உ நஉ வெள்ளிக்கிழமை கனகலட்சுமி இராமநகர் 6.3.70 மாலை 6. மணி

**குறிப்பு** : 'சக்கரத் தாழ்வான் மாலை' எனும் பெயரினை இந்நூல் பெற்றுள்ளது. இதனுள் தஞ்சைமாவட்டத்தில் குடந்தை எனும் திரு. நகரில் கோவில் கொண்டிருக்கும் சக்கரத் தாழ்வாரின் பெருமை பாடப்பட்டுள்ளது. திருமாலின் ஐம்படையுள் நான்குபடை அடையாத பெரும் பேற்றை சக்கரப்படை பெற்றதாகக் கவிஞர் சாற்றுகின்றர். திருமாலின் திகிரி என்று திரிலோகம் அறிந்த ஒன்று இந்நூலில் பாராட்டப்படுகின்றது. ஆழியின் வரலாறும் பெருமையும் புகழ்ந்து கூறப்படுகின்றது. சங்குக்கோ தண்டுக்கோ வாளுக்கோ வில்லுக்கோ கோயில் இல்லை ஆனால் சக்கரத்திற்குக் கோயிலுண்டு என்ற முறையில் பாடுகின்றார் இயற்றியவர் திரு. நா. கனகராசன் எம்.ஏ. மொத்தம் 51 பாடல்கள் உள்ளன. முற்றுப் பெற்றுள்ளது.

## R. 8570

## கும்பலிங்கன் திருமாலை

## KUMBALINGAN THIRUMALAI

Pages, 219 - 225 Lines 30 on a Page
Extent 150 Granthas

**COMPLETE**

God Kumbalingan of Kumbakonam has been extolled in elegant stanzas which have been composed by N. Kanagaraja Iyer. Period of composition 1970

**தொடக்கம்**

**காப்பு**

'கும்பலிங்க நாமமுள கும்பேசன் மெய்யருளை
நம்பனருள் வாய்ப்பால் நணுகவே - கும்பமுனி

தந்ததமிழ் மாலைசொலத் தந்திமுகத் தெந்தைகழல்
சிந்தைசென்னி வைப்பாம் செறித்து.

பெற்றதாயினும் பெரிய தாயெனப் பிரிவிலாதமெய்த்
தந்தைதானென
உற்ற யாரினும் உற்ற உறவென உள்ள வள்ளலே கள்ளமில்லயே
வெற்றம் வேண்டுவேண் வேண்டுகோள்முறை விரைவினீ
நிறைவேற்று வாயெனில்
சுற்றமற்றவர் கூறுகின்றனர் கும்பகோணம்வாழ் கும்பலிங்கமே"

**முடிவு**

"முருகவென்றநன் மொழியையோதியே முத்தமிழ்க்கடல் மூழ்குவார்
சிலர்
உருகுநெஞ்சினோ குருவமருவமாம் உன்னை வேண்டியே உனது
கோயிலின்
அருகு மேவுவார் அவரை யேற்றுநீ ஆதரிப்பதே அறமெனக் கொளாய்
குருவு மாயினாய் குணமு நல்குவாய் கும்பகோணம்வாழ் கும்ப
லிங்கமே (சக)

வீடு வேண்டுவார் மேதிணிக்கணே மிகுவ துண்டுகொல் வேதநாதனே
காடு வாவெனக் கரையு நாளிலும் கைப்பணத்திலே கலங்குமக்களை
ஈடு கூறுதற் கியங்கிலாறிலை எவ்வன் ஏற்றுவாய் எங்கள் தெய்வமே
கூடு நீங்குநாள் கூற வேண்டுமோ கும்பகோணம் வாழ் கும்ப லிங்கமே"
(ருமு)

**பின்னணியுரை** : மாசி உச செளமிய பிற்பகல் 3 மணி 7.3 70 நா. கனகராசர் கனகலட்சுமி இராமநகர் கோட்டையூர்

**குறிப்பு** : இந்நூல் 'கும்பலிங்கன் திருமாலை' என்னும் பெயரினை உடையது இதன்கண்ணே கும்பகோணத்தில் வாழ் கும்பலிங்கனின் பெருமையும் சிறப்பும் பாடப்பட்டுள்ளது மாமகத்தினால் பெருமை பெறும் தலமாம் குடந்தை மாநகரில் குளிர்பிறைச்சடைக் கோல மூர்த்தி கோயில் கொண்டுள்ள செய்தியும் புராணக்கருத்துகளும் கூறப்பட்டுள்ளன. 50 பாடல்கள் உள்ளன இயற்றியவர் திரு. நா. கணகராசன் எம்.ஏ. முற்றுப் பெற்றுள்ளது

## R. 8571
## நாகநாதன் திருமாலை
## NAGANATHAN THIRUMALAI

Pages, 226 - 232 Lines, 30 on a Page
Extent 150 granthas

**COMPLETE**

Flourished in praise of Naganathan, god of Kumbakonam from the pen of N. Kanagaraja Iyer.

**தொடக்கம்**

"திருக்குடந்தை தென்பகுதி சீர்பெறுமரக் கோயில்
இருக்கு மெந்தை நாகமாய வீசன் - உருக்கமைந்த
ஏற்றம் பூகழும் எழில்மாலை வேழ முகன்
மாற்றம் தரலால் வரும்.

**பிரபந்தம்**

குடம்பையுட் புள்ளைக் காக்கும் குடந்தையம்பதி முக்கண்ணுன்
உடம்பினு ளுயிரைக் காக்க உள்ளுயி ரெனவே யுள்ளான்
மடம்பல பிறங்கு மின்ன மாநகர் இடைநிலத்தே
நடம்புரி சமையி னோங்கு நாகவீச் சுரமா மன்றே (க)
நிருத்தமே யுருவாய் நிற்கும் நித்தியன் மண்டபத்தை

உருத்தரு தேரே யாக்கி உருளைகள் வைத்த கோயில்
திருத்தகு பெண்ணி பாயும் திருத்தலம்குடந்தைக் கண்ணே
எருத்தினை யூரும் நாக வீச்சுரம் கோயிலன்றே (உ)

**முடிவு**

"வீட்டினில் விருப்ப முள்ளார் வேறொன்றும் விரும்ப மாட்டார்
நாட்டிலே நாட்டம் உள்ளார் நலங்களைத் துறப்பதே போல்
ஓட்டிலே பிச்சை யேற்ற உயர்பெரு நாக நாதன்
தேட்டிலே மனத்தை வைத்தார் சிவயோகம் சேர்வதன்றே (ரு0)

**வாழ்த்து**

கும்ப கோணத்தின் தெய்வம் கும்ப லிங்கத்தைப் போற்றி
நம்பனே நல்கா யென்று நவின்றமா மாலை வாழ்க

செம்பொருள் போலத் தோன்றும் தேவனாம் நாகநாதன்
அம்புய பாதம் போற்றும் அணிமாலை யடிதிறந்தே"

**குறிப்பு** : 'நாகநாதன் திருமாலை' என்னும் பெயரினை உடையது இதன்கண்ணே தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த கும்பகோணத்தில் கோயில் கொண்டிலங்கும் நாகநாதனின் பெருமை கூறப்பட்டுள்ளது. பூமி நாயகன் என்றும் வேதநாயகன் என்றும் பாராட்டப்படுகின்றான் அவ்விறைவனின் அருள் வேண்டி எப்பொழுது இரங்குவாயோ? என்று ஏங்கி இறைஞ்சும் நிலையில் எழுதப்பட்டுள்ளது இயற்றியவர் திரு. நா. கனகராசன் எம்.ஏ முழுவதும் உள்ளது.

## R. 8572

## திருவிடை மருதூர் மகாலிங்கமாலை

## THIRUVIDAIMARUTHUR MAHALINGAMALAI

Pages 233-239, Lines 30 on a page
Extent 150 granthas

**COMPLETE**

Every song of this treatise sings the glory of god Mahalingam of Thiruvidaimarudur. Credit goes to N. Kanagaraja Iyer, author.

**தொடக்கம்**

**காப்பு**

"இடைமருதூர் கோயில்கொளும் எம்பெருமாள் மாலை
நடைமருவு பைந்தமிழால் நாட்டத் - தொடைமருவு
பூந்தமிழை நல்கு என்று போற்றுகின்ற மேரம்ப
வேந்தனையே வேண்டியடி வீழ்ந்து

**பிரபந்தம்**

உருவுடை மருதவாணன் ஒப்பிலா ஆற்றல் உள்ளான்
அருவுடை யருளின் மூர்த்தி அருமறை யகத்தே உள்ளான்
கருவிடை மயங்கா நின்ற கணங்களைக் கரைசேர்க்கும்
திருவிடை மருதூர் வாழும் தேவனைப் போற்றுவோமே" (க)

முடிவு

"தேவதே வாதிதேவ தெய்வமே தெளியச் செய்வாய்
மூவரே பாடும் முக்கண் மூர்த்தியே முகத்தைக் காட்டாய்
யாவதே தேடினாலும் இறைவனாய் எதிரே நிற்பாய்
சீவகோ டிகளே தேடும் திருவிடை மருதூரானே (ரு0)

**வாழ்த்து**

திருவிடை மருதூர்த் தெய்வம் திருமகா லிங்கம் வாழ்க
திருவிடை மருதூர்க் கோயில் திசையெலாம் சிறப்ப வாழ்க
திருவிடை மருதூர்க் கொண்ட தேவராம் வேதம் வாழ்க
திருவிடை மருதூர் மாலை சிவனருள் பொருந்தி வாழ்க"

**குறிப்பு** : இந்நூல் 'திருவிடை மருதூர் மகாலிங்கன் மாலை' என்னும் பெயரினை உடையது இதன்கண்ணே சோழநாட்டில் தேடிய செல்வ மாகும் திருவிடைமருதூரில் கோயில் கொண்டிலங்கும் மகாலிங்கனின் பெருமை கூறப்பட்டுள்ளது. தேனரு கொன்றை சூடியவன் என்றும் தேடினால் முன்னே நிற்பவன் என்றும், தேவரே பரவும் தெய்வம் என்றும், ஞானமே பாலாற்பெற்ற நற்றிருப் பிள்ளைப் பாட்டிற்கு உரிய வன என்றும் இறைவனைப் பாடப்பட்டுள்ளது. இயற்றியவர் நா. கனகரா..ர 51 பாடல்கள் உள்ளன. முற்றுப்பெற்றுள்ளது.

## R. 8573

## திருபுவன நாதன் மாலை
## THIRUPUVANA NATHAN MALAI

Pages 240-247, Lines 30 on a page
Extent 150 granthas

**COMPLETE**

An exaltation, poetically, on god Mahadevan of Thirubhuvanam in the chola country; Executed by N. Kanagaraja Iyer in 55 Tamil Verses

**தொடக்கம்**

**காப்பு**

"செந்தமிழ்வாழ் சோழத் திருபுவன மாநகரில்
அந்தணரே போற்ற அமர்ந்திருக்கும் - அந்தணனை

**தொடக்கம்**

**காப்பு**

"திருத்தணிகை வாழும் சிவகுமர தேவன்
உருத்தணிகை கொண்ட உளத்தேன் - கருத்தணிகை
உள்ள தமிழ்மாலை ஓத விநாயக
வள்ளலை வாழ்த்தும் மனம்.

**பிரபந்தம்**

பொன்மலியு நாட்டிலே பூமலியு மலைகளே
பொற்புமலி கோயி லாகப்
போந்துவாழ் தெய்வமே சாந்துதாழ் மார்பினாய்
பொருவற்ற மகளி ரிருவர்

நென்மலியும் வாழ்வுலகு பெறவேண்டு மென்றருள்
நிறைகின்ற மனமுளா ராய்
மணநாளை நேர்ந்து சூட்டினர் அல்லரோ
நின்னையே தேடிதன் மனமாலை

கண்மலியும் மோதிரம் கணையாழி யாரமே
கவின்மலிய வேந்தி வருவார்
கற்கச் சோலைதரு பெண்ணையும் வள்ளிமலை
காட்டு பெண்ணையும் மணந்தாய்

தென்மொழியும் வடமொழியும் நன்கறியு நெஞ்சினாய்
திருவளருள் தொண்டை நாட்டில்
திருத்தணிகை மலை மீது வாழ்ந்தருளு முருகனே
திருவருள் விளக்கி யருளே" (க)

**முடிவு**

'அப்பனே யென்னவோ ஐயனே என்னவோ
அரன்மகி மதலை யெனவோ
ஆறுமக வேலனே நீறுமுக மேறி யெழில்
அமைகின்ற திருவாணனே

அப்பரே சம்பந்தர் சுந்தரர் பாட்டெலாம்
ஆய்ந்துபொருள் தேற்று குரவா

அருள்வாத ஆரடிகள் திருவாச கத்தினையும்
அடியேங்கள் பெறவருளினாய்

செப்பரே யிலரென்று யாமோத வுரியவர்
ஒருவரையு முணர்கி லேமே
உவமையணி நின்னருகு வரமன நடுங்குமே
ஓதரிய நாத மயமே
செப்பரோ பொருளென்று சிறியேனும் வேண்டேமே
செப்பிலவை அறித வெளிதோ
திருத்தணிகை மலைமீது வாழ்ந்தருளு முருகனே
திருவருள் விளக்கி யருளே.

**வாழ்த்து**

வாழியோ வாழியோ திருத்தணிகை மலைமீது
வாழ்ந்தருளு முருக னடிகள்
வாழியோ வள்ளி நாயகி யென்ற தேவியர்
மலர் வென்ற திருவடிகளே

வாழியோ தெய்வானை திருவடித் துணையென்று
மனமார வாழ்த்து கின்றாய்
வாழியோ திருப்பரங் குன்றம் வாழ் முருகனே
வாழிசீ ரலைவாய்க் கென

வாழியோ திருவா வினன்குடிப் பழனிமலை
வாழ்ந்தருளு முருக சரணம்
வாழியோ திருவேரகத்திலுள்ள முருகனது
வன்மைதெளி யன்பர் மனமே

வாழியோ குன்றுதோ றாடுக வள்ளலே
வாழிபழ முதிர் சோலையான்
வாழியோ முருகனருள் வேண்டுதமிழ் மாலையே
வள்ளிதிரு வருளினையே"

**பின்னணியுரை** : சௌமிய வருடம் பங்குனி மாதம் மூன்றாம் நாள் திங்கட் கிழமை பிற்பகல் 3.30 மணி

சாதிகுல மில்லானைச் சார்ந்துபுகழ் மாலையை
ஆதிகண நாதனருள் ஆம்

**பிரபந்தம்**

திரிபுவன சக்கரவர்த்தி தென்னாட்டுச் சோழமன்னன்
திருபுவன நாயகனும் திருப்பெயரை இருவித்த
திரிபுவன நாயகனே சிவசரபம் காட்சிதரும்
திரிபுவன நகரமுள தேவர்பிரான் திருவருளே.

**முடிவு**

பற்றுகவே பற்றற்றான் பற்றையிரு பற்றறவே
ஏற்றுகவே பிறதொடர்பை எனவிசைத்தார் புலவர்பலர்
முற்றுகவோ அவனரனை மூழ்குகவோ அவனருளில்
செற்றுயர்க பற்றினத்தும் திரிபுவன னருளாலே

**வாழ்த்து**

வாழியவே திரிபுவன மகாதேவன் திருவருளே
வாழியவே திரிபுவன மன்னனது திருப்பணியே
வாழியவே திரிபுவன மகாசக்தி திருப்பதமே
வாழியவே திரிபுவன மாலையென வாழ்த்துவமே.

**குறிப்பு** : இந்நூல் திருபுவன நாதன் மாலை என்னும் பெயரினைக் கொண்டது. திருவளர் நாளாம் சோழநாட்டில் உள்ள திருபுவனத்தில் இறைவன் விரும்பி கோயில் கொண்டு அருள் வழங்குகின்றான். அவ்விறைவனின் அருட்பெருமையும்செயற்கரிய செயல்களையும் பாராட்டி இந்நூல் பாடப்பட்டுள்ளது. 5 பாடல்கள் உள்ளன. இயற்றியவர் நா. களகராசன் முழுவதும் உள்ளது.

## R. 8574

## இரத்தின கிரீசன் மாலை

## THIRUPUVANA NATHAN MALAI

Pages 248-254, Lines 30 on a page
Extent 150 granthas

**COMPLETE**

A delineation on chokkanatha of Rathinagiri, a hill shrine, penned by N. Kangaraja Iyer in 51 verses

தொடக்கம்

## காப்பு

வாட்போக்கி வத்தினகிரி மாணிக்க நாயகன்றன்
தாட்போக்க வந்த தமிழ்மாலை - கேடுபோர்க்கும்
இன்பம் பயக்க இபமுகத்துப் பிள்ளையருள்
அன்பின் அடைவேன் அணிந்து.

## பிரபந்தம்

காவிரிக் கரையில் வாழும் கடம்பனைப் பணிந்த பின்பு
காவிரி திருநீராடிக் காவிரி மஞ்சள் வேண்டும்
தூவிரி கிரியான் மேல்வாழ் சொக்கனை மாணிக்கை
நாவுரித் தமிழாற் பாட நான்மனம் துணிகின்றேனே (க)

இரத்தின கிரிவாழ் தேவ இணையிலா அருள்வெள் ளத்தாய்
வரத்தனை யருள்வதற்கே மாணிக்க மலைமேல் உள்ளாய்
உரத்தினால் உயர்வாட் போக்கி உறுந்தல மென்றுகொண்டாய்
சுரத்தினை இசைக்க வோரேன் சொக்கனே அருள்செய் வாயே
(2)

முடிவு

"ஒரு மூன்று தலங்கள் தம்மை ஒருநாளில் வணங்கும் பேறும்
இருமூன்று முகங்கொள் வேலன் இணையடி வழுத்தும் வாக்கும்
பெருமூன்று வேதமோதும் பெரியார்க்கும் எளிதில் வாயா
ஒரு மூன்று தமிழாற் பெற்ற உள்ளத்துச் செல்வ மன்றே

## வாழ்த்து

காவிரிக் கரையில் வாழும் கடம்பனெம் பெருமான் வாழ்க
தேவிரி திருவாட் போக்கிச் சிகரமா ணிக்கம் வாழ்க
பாவிரி யீங்கோய்க் குன்றிற் பரமன்மெய் யருளும் வாழ்க
தூவிரி மூவர் தாளிற் சொல்லிய மாலை வாழ்க".

**குறிப்பு** : இந்நூல் 'இரத்தினகிரீசன் மாலை' என்னும் பெயரினைத் தாங்கியுள்ளது. இதன்கண்ணே இரத்தினகிரியின் கண்ணே கோயில் கொண்டருள் வழங்கும் சொக்கநாதனின் பெருமை பாடப்பட்டுள்ளது. இந்நூலில் 'வாட்போக்கி மல்லமேல்வாழும் மாணிக்கச் சொக்கநாதா, இரத்தின கிரியு நீயே, இதயவாட் போக்கி நீயே, மாணிக்க மலையே, ஆணிப்பொன் லிங்கமான அழகிய லிங்கமே." என இவ்வாறெல்லாம் இறைவன் பாடப்படுகின்றான். பல பூராணக் கதைகளும் ஆங்காங்கே பொதியவைக்கப் பட்டுள்ளன. 'தேறிய தமிழைத் தந்த தெய்வத்தை மறக்கமாட்டேன்' என ஆசிரியர் பாடுவதினின்றும் அவரது தமிழ்ப்புலமையும், தமிழ்ப்பற்றும் நமக்குத் தெரிகின்றது இயற்றியவர் திரு நா. கனகராசன், எம்.ஏ. முழுவதும் உள்ளது. 51 பாடல்கள் உள்ளன.

## R.8575

## ஈங்கோய் மலையான் மாலை

Pages, 255-264; 30 lines on a page. Extent 200 granthas

**COMPLETE**

Here is an example of the style of N. Kanagaraja Iyer wherein he has sung on the god 'Ingoi malayan' in 71 stanzas

**தொடக்கம்**

**காப்பு**

"ஈங்கோய் மலையாற் கொழுபது பாடலை
யாங்கோ மறைந்துறையு மேழையேன் - பாங்போடு
பாடி யவன்பாதம் பற்றோடு சேர்க்க நெஞ்சே
தேடி விநாயகனைச் சேர்

**பிரபந்தம்**

செவ்வானத்து நிறம்போலும் சிவந்த மேனிகொளும் தேவ
துவ்வா மனித்தர் பலர்வாழும் துயரக் கால மிதன்கண்ணே
செவ்வாய் திறந்து மனம் கனிந்து சிவனே யீங்கோய் மலையரசே
எவ்வா றிசைப்பேன் நின்பெருமை ஈங்கோய் மலையை
மறந்தேனே (க)

பொல்லா வறுமைப் பிணியாலே புலவர் குலமே வருந்துவதை
நல்லார் அறிந்தே நடுங்குவதை நம்பநீயும் அறியாயே
கொல்லா அமணர் காலத்தே கொடுமை பலவும் விளைந்ததுண்டு
எல்லா நலமும் குறையாமை ஈங்கோய் மலையாய் அருள்வாய்" (2)

முடிவு

"ஒரு நாள் இரவுபக லெல்லாம் உணர்வோ டிறைவன் திருவருளே
ஒருவா திருக்கத் தவம்பூணும் உணர்ச்சி பெருந்தப் பெற்றாயே
திருநாள் சிவனார் நிசியினிலே சிவத்தின் பெயரை உரைத்தாயே
இருநாள் வருமே என்கின்றான் ஈங்கோய் மலையெம்
பெருமானே (எ.)

**வாழ்த்து**

இருக்கு மறையே வாழ்வுறுக எசுமா மறையே வாழ்வுறுக
உருக்கு சாமம் வாழ்வுறுக உயரும் அதர்வம் வாழ்வுறுக
பெருக்கு பொருளின் தேவராம் பெருமாள் விழைய வாழ்வுறுக
எருக்கு மலரே நிகர்க்க வந்த எளிய மாலை வாழியவே" (எக)

**பின்னணியுரை** : இப்பிரபந்தம் எழுபதுபாட்டு. முன்இருபது உலகத்துக்கு. பின் ஐம்பது இறைவனுக்கு.

**குறிப்பு** : இந்நூல் 'ஈங்கோய் மலையான் மாலை' என்னும் பெயரினை உடையது. இதன்கண் திருவீங்கோய் மலையில் வாழும் இறைவனின் திருவருள் சிறப்பிக்கப்பட்டுள்ளது. உலகியலைப்பற்றி இருபது பாடல்களும், இறைவனைப்பற்றி 50 பாடல்களும் இடம்பெற்றிருப்பதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். பல்வேறு வகைத் தொழில்களைப் புரிவாரும் தங்களுக்குள் ஒற்றுமையில்லாமல் வாழ்கின்ற உலகம் இது என்று ஆசிரியர் சாடுகின்றார். நீரேசுமக்கும் வேணியினாய் என்றும் வேதம்புகழும் பெருமானே என்றும் இறைவனைப் பாடுகின்றார் இவ்விறைவனின் அருள் வேண்டி நெஞ்சம் உருகும் வண்ணம் பலபாடல்களைப் பாடியுள்ளார். இயற்றியவர் நா. கனகராசன், முழுவதும் உள்ளது

## R.8576
## கடம்பன் திருமாலை
## KADAMPAN THIRUMALAI

Pages, 265-271 Lines 30 on a page
Extent : 150 granthas

**COMPLETE**

A Saiva literature wherein has been lauded the god Kadamba situated on the bank of Kaveri river. Laudation runs in 52 verses. Author, N. Kanagaraja Iyer of 20th Century.

**தொடக்கம்**

**காப்பு**

"பொன்னிக் கரைவாழ் புராதன மூர்த்திமலைக்
கன்னிக் குரிய கடம்பேசன் - என்னிதயம்
வீற்றிருந்து நன்மாலை வேண்டுதலால் வேழமுகன்
ஏற்றதுணை நல்கும் இனிது

**பிரபந்தம்**

காவிரிக் கரையில் வாழும் கடம்பனே கடம்பன் தந்தாய்
பூவிரிச் சோலை சூழும் புண்ணிய பூமி வாழ்வே
தூவிரித் தமிழின் மாலை சூடவே விருப்பம் கொண்டாய்
தேவிரிச் செல்வ நல்கி சிறியெனைப் புரப்பாய் தேவே (க)

அன்பிலே யூறும் நெஞ்சால் ஐந்தெழுத்தோது நெஞ்சர்
பொன்பிலே நெடுநாட் சென்ற புண்ணிய முத்து சாமி
அன்பரே துணையா யென்னை ஆற்றினூ டழைத்து வந்தார்
நின்பதம் பணியப் பெற்றேன் நிறையருட் கடம்ப னேயோ (உ)

**முடிவு**

"உடம்படும் வாழ்க்கை வேண்டும் உடம்படா வாழ்க்கை தானே
குடம்படு பாம்பினோடு கூடியே வாழ்தல் போலும்
இடம்படு முலகத்துள்ளே இருமையே யொழிய வேண்டின்
கடம்பனை மனத்தால் வாழ்த்தி கரம்கூப்ப வேண்டுமென்றே
(சகூ)

ஆரிய வேத மோரேன் அருந்தமிழ் மறையும் தேரேன்
நாரியர் மனத்தே வாழ்ந்து நம்பனை மறந்து கெட்டேன்
ஆரிய வணிகர் தீர்த்தம் ஆளவே வருங்கார் போற்றும்
சீரிய கடம்பன் பாதம் சிந்தையி லேற்றி னேனே (ருO)

வாழ்த்து

வாழிய கடம்பன் பாதம் வாழிய சொக்கன் பாதம்
வாழிய ஈங்கோய் நாதன் மலர்ப்பதம் உலகம் வாழ
வாழிய தீர்த்த சேவை வாழிய வணிகர் தொண்டு
வாழிய தேவன் மும்மை வழுத்திய மாலை தானே"

**குறிப்பு** :'கடம்பன் திருமாலை' என்னும் பெயரினை இந்நூல் பெற்றுள்ளது. பொன்னிக் கரையில் வாழும் புனிதனாம் கடம்பேசனைக் கவிஞர் போற்றியுள்ள பாடல்கள் இந்நூலில் பொருந்தியுள்ளன. காவிரியைப்பற்றிய பெருமைகளும் கவிதையில் இடம் பெற்றுள்ளன. திருநீறுதிமிர்ந்த மேனித் தெய்வமே போற்றி என்றும் திருநீறு நாயேன் நெற்றி சேர்க்கவே தெறித்தாய் போற்றி என்றும் இறைவனைப் பாராட்டுகின்றார் இயற்றியவர் நா. கனகராசன் மழுவதும் உள்ளது.

## R 8577

## குழித்தண்டலையாள் மாலை
## KULITHANDALAIYAN MALAI

Pages, 272-278, Lines 30 on a page
Extent : 150 granthas

**COMPLETE**

The present name Kuzhittalai ( a town) has come from Kuzhittandalai; God of this shrine is Kuzhittandalayam on whom has been sung this piece by N. Kanagaraja Iyer soliciting graces. We have 51 stanzas here to ponder.

**தொடக்கம்**

காப்பு

"குழித்தண் டலையகத்தே கோயில்கொளும் நாதன்
வழித்தண் டமிழ்சாத்தும் வண்ணம் - பழித்த பண்பு
பற்பல உள்ளேற்கும் பாதம்தலைவைத்தான்
கற்பக விநாயகனே கண்டு

## பிரபந்தம்

மொழித்தண் டமிழால் முறையே பணிந்து முழுமுதல்வன்
வழித்தண் டமிழின் பணியே பொருத்த மனமிசைந்தேன்
இழித்தன் பிலையென் றுரையான் எனவே இதயமுள்ளீர்
குழித்தண் டலையான் திருவடிப் போதினைக் கூடினனே (க)

திருவடிப் போது குழித்தண் டலைவாழ் சிவபெருமான்
திருவடிப் போந்து முனிவர்க்கருளிய தத்துவம் போல்
கருவடிப் போதா வகையருள் செய்து கடைக்கணித்தான்
மருவடித் தொண்டர் திருக்கூட்டம் சேர்ந்தனள் மாண்புறவே (2)

**முடிவு**

"எண்ணுவ தீசற் கியல்பிலை யேனும் இழிவுளத்தால்
உண்ணுவ தோடு முறங்குவ தொன்றே யுணருமவர்
பண்ணுவ தென்னை குழித்தன் டலையான் பதம்பணிய
நண்ணுவ ராயின் நலம்பெறுமாறு நவிலுவனே (சகூ)

நவில்லன் தன்மை நவிற்சி யுயர்வு நவிற்சியிலை
தவலருந் தொல்கேள்வி யுள்ளார் மன்தாற் றருபொருளே
சுவல்மிசை நீங்கிக் குழித்தண் டலையான் அருள்புனைவான்
கவல்புகு தாத மன்பெறு வேண்டுதும் கைகுவித்தே" (ரு0)

**பின்னணியுரை** : கனகலட்சுமி இராமநகர் கோட்டையூர் நா. கனகராசன் 10.3.70 பிற்பகல் 2 மணி

**குறிப்பு** : இந்நூல் 'குழித்தண்டலையான் மாலை' என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே, குழித்தண்டலையகத்தே கோயில் கொளும் இறைவனின் பெருமை பாடப்படுகிறது. குழித்தண்டலையைக் குழித்தலை என்று வழங்குவர். அவ்வூரில் அருள்வழங்கும் இறைவனைக் குழித்தண்டலையான் என்றே வழங்குவார். இந்நூலில் நிலையாமை உடைய உலகியல் பற்றியும் நிலைபெற்ற இறை உணர்வு பற்றியும் பாடல்கள் உள்ளன. இறைவனின் அருள்வேண்டி அடிபணியும் மக்களின்

இயலைபும் வேண்டுகோளும் விளக்கமாகப் பாடப்பட்டுள்ளன. இயற்றியவர் நா. கனகராசன் 50 பாடல்கள் உள்ளன. முற்றுப்பெற்றுள்ளது.

## R.8578

# சுகவனநாதன் திருமாலை

# SUGAVANANATHAN THIRUMALAI

Pages 279-286 Lines 30 on a page
Extent 150 granthas

**COMPLETE**

God Sugavanatha of Salem town has been extolled here in lucid style by N, Kanagaraja Iyer. 51 songs are here to enjoy.

**தொடக்கம்**

**காப்பு**

"சொன்னாம் பிகைநாத தொல்சேல மாநகராய்
தென்னா சுகவனத்துத் தேவனே - மன்னாத
வாழ்க்கையைப் போக்கியருள் மாலையினை யேற்றருள்க
ஆழ்க்கையை மாற்றி யருள்

**விநாயக வணக்கம்**

ஆறுமுகத் தையனே ஆனைமுகத் தாற்கிளயால்
சோறுபுனல் ஓங்கும் சுகவனத்தான் - பேறுதவி
ஓதுதிரு மாலைக் குதவி புரியாயே
காதுதியே திருவினையின் கட்டு".

**முடிவு**

"சுகவனம் வேண்டிய மாந்தர் மதியார் துறக்கத்தையே
அகவனம் நன்றே அமையப் பெறுவார் அவன்புகவே
இகவனம் வேறோ பரவனம் வேறோ இலையிலையே
சகவனம் எங்கும் சுகவனம் வாழ்வது சத்தியமே

வாழ்த்து

சுகவன நாயகன் பாதகமலம் தொழுவரும்
சுகவன நாயகி சொன்னாம் பிகையைத் தொழுபவரும்
சுகவனம் வேறில் யென்றே மனத்தால் துணிபவரும்
சுகவனம் ஆக வுலகத்தில் வாழச் சுருதியுண்டே

**குறிப்பு** : இந்நூல் 'சுகவனநாதன் திருமாலை' என்னும் பெயரினை உடையது இதன்கண்ணே, சேலம் மாநகரில் கோயில் கொண்டு அருள்வழங்கும் சுகவனநாதனின் பெருமை பாடப்பட்டுள்ளது. சுகவனத் தேவரை வேண்டி வனவாழ்க்கை வாழும் துறவியரும் இனவாழ்க்கை வேண்டார். தனவாழ்க்கைவேண்டில் சுவணத்துநாயகிதன் தாண்மலரை எண்ணுவர் என இவைபோன்ற செய்திகள் அதிகம் எடுத்தாளப் பட்டுள்ளன. காணற்கரிய காட்சிச் செல்வம் பொன்னையும் விழையாது இறைவனைப் பூசனை செய்வார், என்று இறைவனின் சிறப்புகள் எடுத்துரைக்கப்பட்டள்ளன. இயற்றியவர் நா. கனகராசன், எம்.ஏ, முழுவதும் உள்ளது. 51 பாடல்கள் உள்ளன.

## R.8579

# திருப்பேரூர்ச் சிவபிரான்மாலை
# THIRUPERUR SIVAPIRANMALAI

Pages, 287-293 Lines 30 on a page
Extent 175 granthas

**COMPLETE**

Here flows from the pen of N. Kanagaraja Iyer the sentiment of saivism by way of praising Siva of Tirupporur. We have 52 stanzas in this line.

**தொடக்கம்**

"திருப்பேரூர் கோயில் கொளும் சிற்றம் பலவன்
திருப்பாதம் நெஞ்சகத்தே சேர்த்து - விருப்பூரப்

பாடும் திருமாலை பார்த்து மனமகிழ்வான்
நாடும் கயமகவன் நன்கு

## பிரபந்தம்

சீரூர் கோயில் உடையோனே சிதாகா சத்து இருக்கின்றார்
காரூர் காற்றூர் கலந்தானே கயமா முகனைத் தந்தவனும்
பேரூர் உறைந்த பெருமானே பிறப்பை யொழிக்கும் பெருமானே (க)
கருப்பே ரூரே புகுதாமற் காத்துவீடு தருவாண் சரண்
உருப்பே ரூரன் உருவங்கள் உள்ளத்துள்ளே ஒளிருவன
அருப்பே ரூரன் திருவருளோ அளவை கடந்து சிறப்பினதே
திருப்பே ரூரோன் இருக்கு நிலம் திருவார் கயிலை எனலாமே" (2)

### முடிவு

" அண்ணால் கயிலைத் தலைவாயோ ஆரூர்த்தலைவா அவிநாசி
விண்ணார் துறக்க மதியாதார் வீடுபெறவே யருள்பேரூர்
அண்ணா மலையே அருளாளா அவையிற் குளிக்கும்
சிதம்பரனே
பெண்ணா லிடத்தை யிழந்தவனே பேரூரிர்ப பெருமான்
அருள்வாயே (ரு0)

## வாழ்த்து

பேரூர்ப் பெருமான் வாழியவே பேரூர் இறைவி வாழியவே
ஆரூர்ப் பெருமான் அவிநாசி ஐயா றுடையான் பூவணத்தான்
சீரூர்ப் பொன்ம பலத்தேவன் திருவாழ் ஆல வாய்த்தலைவன்
ஊரூர் தோறும் உவந்தபிரான் உலகம் வாழ வாழியவே"

**குறிப்பு** : இந்நூல் திருப்பேரூர்ச் சிவபிரான் மாலை என்னும் பெயரினை உடையது. திருப்பேரூரில் கோயில் கொண்டு அருள்வழங்கும் இறைவனின் அருட்சிறப்புப் பாடப்பட்டுள்ளது. மறக்க இயலாத திருவருளை உடையவன் என்றும் மனிதகுலத்தின் பெரும் பேறு என்றும் வருணிக்கபடுகின்றான். வேதம் முழங்கும் திருப்பேரூர் என்று

திருப்பேரூர் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இயற்றியவர் நா. கனகராசன் மழுவதும் உள்ளது 51 பாடல்கள் உள்ளன.

## R.8580

# வடக்குநாதன் திருமாலை

# VADAKKUNATHAN THIRUMALAI

Pages 294 - 30. Lines, 30 on a page
Extent 175 granthas

**COMPLETE**

Eulogising the god vadakkunatha of Peru (Coimbatore Dt.), the poet N. Kanagaraja Iyer seeks his graces. 52 songs are available here to eulogise

**தொடக்கம்**

"வடக்குத் திசைநோக்கி மக்களையே வாழ்த்தும்
இடக்கண் அமரும் இறைவன்
கிடக்கின்ற பேரூர்ப் பெருமை பிறழா துரைப்பதற்கு
நாரூர் நெஞ்சிய் நமக்கு

உருச்சிவ மயமே யாக உருகிய நெய்யே போர்த்துத்
திருச்சிவ பேரூர் வாழும் தெய்வத்தை வணங்கு கின்றோம்
அருச்சிவ மென்ற உண்மை அவன்மேனி காணார் கூற
மருச்சிவ மாகக் காணும் மனமுளார் சிளருண்டன்றே (க)

**முடிவு**

"அரனுக்கே அடிமை யானார் அரியினை யிகழ மாட்டார்
அரனுக்கே பழிப்புச் சாத்தி அரியினை வணங்க மாட்டார்
அரனுக்கு மரிக்டும் வேதம் அகத்திலே கொள்ள மாநகர்
திரமிக்க மலையாளத்தாய் திருச்சிவ பேரூர்த் தேவே (ருO)

**வாழ்த்து**

'மலையாள நாடு வாழ்க மலையாள மொழியும் வாழ்க
மலையாள மனமும்வாழ்க மலையாள பக்தி வாழ்க
மலையாள நாடு கொண்ட மாதவன் சிவனே வாழ்க
மலையாள திருச்சூர்க் கோயில் மரபுளி வாழ்க வாழ்க

**குறிப்பு** : 'வடக்குநாதன் திருமாலை' என்னும் பெயரினைக் கொண்டிலங்குகின்றது. இந்நூல் இவ்விறைவன் கோயில் கொண்டிருக்கும் திருப்பதி. திருச்சிவபேரூர் ஆகும். இப்பேரூர் கோவை மாவட்டத்தைச் சார்ந்துள்ளது. கேரளநாட்டின் எல்லையாகவும் தமிழகத்தைச் சார்ந்ததாகவும் அமைந்துள்ளது. மலையாள மொழி பேசும் மக்களும் வணங்கும் சிறப்பினை இவ்விறைவன் தாங்கியமையால் இவ்வூர் பெறுகிறது. இதனை "மலையாள மொழியே வாழும் வளம் பொலி நாட்டின் கண்ணே' என்று ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார் சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய திருத்தலங்களில் இதுவும் ஒன்றென்று தலபுராணம் புகழும். இயற்றியவர் நா. கனகராசன் முழுவதும் உள்ளது.

## R.8581

## குருவாயூரப்பன் மாலை

## GURUVAYURAPPAN MALAI

Pages 301-314, Lines, 32 on a page

Extent 250 granthas

**COMPLETE**

Guruvayurappan (Kerala) is the god elevated here; N. Kanagaraja Iyer is the author. 1970 is the date of this work.

**தொடக்கம்**

'குருவாயூ ரப்பன் குணக்கடலில் மூழ்கும்
திருவாளர் கூட்டத்தே சேரும் - பெருவாற்ற
நாயடியே னெய்த நயக்கும் பெருமானை
தூயநெஞ்சே சென்று தொழு

## வேண்டுகோள்

'விநாயகனை வேண்டுவது வேண்டும் நெஞ்சம்
விண்டுவன்றோ கண்ணனென விளிக்கு மான்மா
அநாயகனா மானந்தன் அபூர்வ மூர்த்தி
ஆலயத்தை ஒரு முறையே அடைந்தேன் போற்றி

சநாதனமாம் தருமத்தைத் தாங்கும் தேவன்
தன்மயமாய் எனையுருக்கச் சற்றே நின்றேன்
மனுதிகளாய் அணுகரிய வாசு தேவன்
வருககுரு வாயூரே வருனென் றுனே.

ஒரே நாளில் ஒருமுறையே உருகிநோக்கி
உள்ளத்தைப் பறிகொடுத்தேன் ஒப்பில் கண்ணா
திருநாளும் பெருநாளும் சேவித்தில் வேன்
திருப்புகழை பாய்வதற்கும் சிந்தை யில்லேன்

ஒருவாறு பிரிந்துவந்தேன் உளத்தி னீங்கப்
உனைநினைந்து மறுமுறையும் ஊர்க்கே வந்து
திருவாயில் மொழிகளையும் செவியிற் சேர்ப்பேன்
திருவாழும் குருவாயூர்த் தேவ தேவே"

முடிவு

"அப்பாநீ மனம்வைத்தல் ஆகா துண்டோ
ஆங்கிருந்தே ஈங்கெனக்குன் அருளைக்காட்ட
முப்பாரும் அளந்தறிந்த முளரிப் பாத
முகுந்தகோ பாலநின்னால் முடியா தேயோ

இப்பாலென் இதயத்தே இருக்க வேண்டும்
என்றுமுன தடிமையென ஏற்க வேண்டும்
குப்பாயம் வேண்டுகிலேன் கூரை வேண்டேன்
குருவாயூர்ப் பெருமானே குணத்தின் குன்றே (ரும்)

**வாழ்த்து**

காலமெலாம் அன்பு செயும் கணங்கள் வாழ்க
கண்ணனையே நினைக்கின்ற கருத்து வாழக
ஞாலமெலாம் கண்ணபக்தி நன்கு வாழ்க
நன்மக்கள் மனக்கோயில் நாதன் வாழ்க

சீலமுள பக்தசனம் சித்தத் துள்ளே
சீதரன் கோ விந்தன்வந்து சிறப்ப வாழ்க
கோலமலி யுருவமொரு கோமான் வாழ்க
குருவாயூர்க் கண்ணபிரான் கோயில் வாழ்க"

**பின்னணியுரை:** குருவாயூரப்பனை ஒருமுறை தரசித்து மனம் பறிகொடுத்துப் பிள்ளைத் தமிழ் பாடினேன். அப்பிரபந்தம் அரசாங்கத்துப் புத்தகசாலையில் உள்ளது. இப்பிரபந்தமாலை இப்பிரபந்தம் அளவு. நடராசன் இல்லத்தில் எழுதப்பட்டன இன்று மதுரைபோக இருப்பதால்மற்றலை எங்கு இயலுமோ? நா கனகராசன் 14.3.70

**குறிப்பு** : இந்நூல் 'குருவாயூரப்பன் மாலை' என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே, கேரளநாட்டின் கண்ணுள்ள குருவாயூரப்பனைப் பற்றிய பெருமைப்படத்தக்கச் செய்திகள் பாடப்பட்டுள்ளன. சிலபூராணக் கருத்துக்கள் குருவாயூரப்பன் அருளைப் சிறப்பிக்க எடுத்தாளப்பட்டுள்ளன. 'மேல் புத்தூர் மலையாளவித்தைச் செல்வன் குணத்தின் குன்று' என்றெல்லாம் இறைவன் வருணிக்கப் பட்டடுள்ளான். இயற்றியவர் நா. கனகராசன் முழுவதும் உள்ளது.

## R. 8582

# அனந்தபதும நாபன் மாலை
# ANANTHA PADMANABAN MALAI

Pages 315-322; Lines 30 on a page
Extent : 125 granthas

**COMPLETE**

God Ananthapadmanabha of Trivandrum has been talked at length i.e. in 51 songs. Requisition for graces is the theme.

**தொடக்கம்**

காப்பு

"திருவனந்த மாநகரிற சீரார் கடலும்
கருவனந்தம் கண்ட கனரும் - உருவனந்தம்
உள்ளமுறம் கொள்ள உறங்கும் பெருமானைக்
கள்ளமறு நெஞ்சமே காண்

எவ்வுயிர்க்கும் காப்பருளும் எம்பெருமான் மாலைக்கே
எவ்வுருவக் காப்பை யிசைப்பேனே - அவ்வுருவம்
எல்லாம் அவனென்றே எண்ணி வணங்குகின்றேன்
சொல்லார்ல் இசைக்கத் துணிந்து".

**முடிவு**

"என்னையான் டருளுவதற் கிதயமுள பதுமேச
நின்னையான் கண்டுருக நெஞ்சமலர் அமைத்தாயே
பொன்னையான் வேண்டுகிலேன் பூகழையான் மதியேனே
தன்னையே வேண்டுகின்றேன் தாள்மலரைத் தலைவையே (ரு0)

**வாழ்த்து**

வாழிதிரு வனந்தபுரம் வாழிதிரு வனந்தன் காரு
ஆழியரு களைந்துள்ள அனந்தநிலை வாழியவே
ஏழியலும் யாழிசையில் இதயமுளான் வாழியவே
நாழியற மருவாத நம்பியதுரைவர் வாழி "

**பின்னணியுரை** : சௌமிய பங்குனி க.சனிக்கிழமை பிற்பகல் 1 மணி இப்பிரபந்தம் கனகலட்சுமி என்ற புதிய இல்லத்தில் இன்று காலை தொடங்கி இன்று பிற்பகல் பூர்த்தியாயிற்று.

**குறிப்பு** : இந்நூல் 'அனந்த பத்மநாபன்மாலை' என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே, திருவனந்தபுரத்தில் கோயில் கொண்டு அருள் வழங்கும் இறைவனின் பெருமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அத்தி ருமாலின் அருளால் மருள் நீங்கப் பெறல் வேண்டுமென்று இறைஞ்சும் பாடல்கள் உள்ளன. 'என்னிடம் கள்ளமில்லை'. எனக்கருள வேண்டும் நீ என்று முறையிட்டுக் கொள்ளும் முறையிலும் பாடல்கள் அமைந்துள்ளன. திருவனந்தபுரத்தின் வளமையும் அழகும் பாராட்டப்பட்டுள்ளன. இயற்றியவர் திரு நா. கனகராசன். முழுவதும் உள்ளது 51 பாடல்கள் உள்ளன.

## R.8583
## வைக்கம் மகாதேவ மாலை
## VAIKKAM MAHADEVAMALI

Pages 323 - 329 ; Lines 30 on a page
Extent : 150 granthas

**COMPLETE**

Flourished at Madura, but on Mahadeva of Vaikham (Kerala). Garland runs in 51 songs.

**தொடக்கம்**

காப்பு

"வையகமே போற்றிவரும் வைக்கம் மகாதேவன்
செய்யதிரு வடிமேற் சேரவே - செப்புவாய்
யாக்கும் தமிழ்மாலைக் கேரம்பன் இன்னருளே
பூக்கும் பொருளும் புகன்று.

பிரபந்தம்

உள்ளத்தைக் கொள்ளை கொண்டே யுயிர்க்கண மெல்லா மாளும்
கள்ளத்தை யன்றிவேறு கபடமே யறியாத் தெய்வம்
வள்ளத்தை யூர்ந்து மக்கள் வருமாறு வைக்கம் வாழும்
மள்ளர்க்கும் நல்வாழ் வீயும் மகாதேவன் பாதம் வாழ்க (க)

முடிவு

"எனக்குநின் காட்சி வேண்டும் இணையடிப் பேறுவேண்டும்
நினக்குநான் அடிமை யென்ற நிலையுல கறிய வேண்டும்
மனக்குளே நீபுகுந்து வாழ்வதே வேண்டா நின்றேன்
வனக்குவை வேண்ட மாட்டேன் மகாதேவ வைக்கத் தேவே (ருO)

வாழ்த்து

வைக்கம் வாழ் அப்பனாரும் மகாதேவன் பாதம் வாழ்க
முக்கணால் அருளே நல்கும் முதல்வனே நெஞ்சுள் வாழ்க
எக்கணும் இருக்கும் தெய்வ இறுதியில் வாழ்வு நல்க
வைக்கணும் உலகம் போலக் காண்பரே சிவத்தின் வாழ்வே"

**பின்னணியுரை :**

சௌமிய பங்குனி உ

ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 2 மணி

மதுரை சங்கர நாராயணர் கிருகத்தில் இப்பிரபந்தம் யாக்கப்பெற்றது.

குறிப்பு : இந்நூல் 'வைக்கம் மகாதேவமாலை' என்னும் பெயரினை உடையது இதன்கண்ணே வைக்கத்தில் கோயில் கொண்டிருக்கும் மகாதேவனின் பெருமை கூறப்பட்டுள்ளது. "அரவணை வளரும் தேவன், அலர்மிசை மறைதேர் தேவன், என்றெல்லாம் பாராட்டும் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. வரலாற்றுச் சிறப்பு மிக்க வைக்கத்தின் பெருமைகளும் இடம்பெற்றுள்ளன. 51 பாடல்கள் உள்ளன இயற்றியவர் நா. கனகராசன். முழுவதும் உள்ளது.

## R.8584

## திருத்தணிகை மாலை
## THIRUTTHANIGAI MALI

Pages 330-352; Lines, 36 on a page
Extent : 250 granthas

**COMPLETE**

Lord Muruga of Thiruttani Hill is the god celebrated here; Celebration has been executed with 51 verses. All by N. Kanagaraja Iyer who has done it in 1970.

மதுரையில் சங்கரர் இருக்கும் குட்ஷெட்தெரு 279 எண் வீட்டில் அவர் குடியிருக்கும் மாடிமேல் எழுதி முடிந்தது.

சிவசுப்பிரமணியன் என்ற இவன் கலியானத்துக்குத் தெற்கு ஆவணி மூலவீதி போய்வர நேர்ந்ததால் 17.18.19.20 என்ற நான்கு நாட்களில் பெரும்பகுதி ஒரு செய்யுள்கூட எழுதாமலே கழிந்தது 20.3.70 வெள்ளிக்கிழமை மாலை 4.30க்கு நீராடி மீனாட்சியைத் தரிசிக்கச் சென்று மீண்டுவந்து சுந்தர நகரத்தில் இருக்கிறேன். பிறபகல் செய்யுள் எழுதப பெறவேண்டும்.

**குறிப்பு** : இந்நூல் திருத்தணிகை மாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண் ஆறுமுகனின் அருட்சிறப்பும் அருஞ்செயலும் பாடப் பட்டுள்ளன. வள்ளியை மணந்த செய்தியும் பல புராணக் கதைகளும் குறிப்பிடப்படுகின்றன. கண்டவரும் இல்லையே கேட்டவரும் இல்லையே கற்பனை கடநத பொருளே என்று இறைவனை வாழ்த்துகின்றார் திருத்தணிகைமலை மீது வாழ்ந்துருளும் முருகனே திருவருள் விளங்கியருளே என்று ஒவ்வொரு பாடலும் முடிகிறது. இயற்றியவர் நா. கனகராசன் மொத்தப் பாடல்கள் 51 முழுவதும் உள்ளது.

## R 8585
## திருப்பதி ஆண்டவன் மாலை
## THIRUPPATHI ANDAVAN MALAI

Pages 353 - 359 Lines 30 on a page
Extent 150 granthas

**COMPLETE**

Tirupathi Andavar is none other than god Vishnu: on this god has been composed this treatise by N. Kanagaraja Iyer. This literature which runs in 51 stazas touches many Puranic anecdotes here and there.

தொடக்கம்

"திருப்பதி நூற்றெட்டுத் தேவர்பிரான் வாழ்வான்
திருப்பதி வேங்கடமாச் சேர்ந்தான் - விருப்பதிகம்
கொண்டவனைப் போற்றியே கூறுதமிழ் நம்மாழ்வார்
கண்டதமிழ் கொண்டுவரும் காண்.

புணைதற் கரிய பொலிவுடையாய் புகழ்தற் கரிய புகழ்க்கடலே
நினைதற் கரிய நிலையிலுளாய் நேயத் தொழும்பர் மனத்துள்ளாய்
வனைதற் குரிமை தருவாயோ வாக்கிற் புகுந்து வருவாயோ
இனைதற் கெமையும் விடுவாயோ எழில்வேங் கடத்தெம் பெருமானே
உருப்புக் கிருந்தாய் உருவிப்பாய் ஒன்றாய்ப் பலவும் வருவித்தாய்
கருப்புக் குழலும் சிறுமையினேம் கருத்தைத் திருத்தும் கருணையினாய்
விருப்புக் கிடந்தத் துதவாதாய் வெறுப்புக் கப்பல் உளபரனே
திருப்புக் கோணியும் திருமார்பா திருவேங் கடத்தெம் பெருமானே"

## முடிவு

"பாடத் தெரிந்தார் பலர்பிறந்த பழமைத் தமிழ நிலத்தகத்தே
நாடத் தெரியா அடிநாயேன் நம்பா நினையே நாடிவந்தேன்
ஓடத் தெரியா அடித்தொண்டன் உளத்தைத் தனியா யேற்றருள்க
வீடத் தகுந்த உயிர்வாழ்வு வேண்டேன் திருவேங்கடத்திறையே (ரு0)

## வாழ்த்து

வாழி திருவேங் கடமலையே வாழிதமிழின் வடவெல்லை
வாழி திருவேங் கடமுடையான் மலர்போற் பொலிந்த திருவடியே
வாழி அலர்மேல் மங்கையெனும் மாதர்க் கரசி திருவருளே
வாழி திருவேங் கடமுடையான் மாலையாய தமிழ்மொழியே"

**பின்னணியுரை** : சுந்தரநகரம் மதுரை மீனாட்சிசுந்தரம் உறையுள் நா. கனகராசன் 20.3.70 மாலை 4 மணி

**குறிப்பு** : திருப்பதி ஆண்டவன் மாலை' என்னும் பெயரினை உடையது இதன் கண் திருப்பதியில் உள்ள ஆண்டவன் மீது அருள்வேண்டிப் பாடப்பட்டுள்ள பாடல்கள் இடம் பெற்றுள்ளன. 'அறிவுக்கறிவே வேங்கடவா, அருளின் கடலே வேங்கடவா செறிவுட் செறிவே வேங்கடவா என்றெல்லாம் பாராட்டப்பட்டுள்ளான் 'பிரகலாதன் தந்தை மு[illegible] பேசும் மொழியை மெய்ப்பிக்க பிரகலாத மாளிகையிற்பெரிய தூணைன் றிறங்கினையே என்று பிரகலாதன் கதையையும், இதுபோன்ற வேறுசில புராணக் கதைகளையும், கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டுள்ளது. இயற்றியவர் நா. கனகராசன் முழுவதும் உள்ளது

# R.8586
# கடிகாசல மாலை
# KADIKASALA MALAI

Pages, 360-367 Lines 30 on a page
Extent 150 granthas

**COMPLETE**

Solasingapuram is known as kadikasalam. God of this shrine namely Narasingamurthy has been extolled in 51 verses in a cogent manner by the author N. Kanagaraja Iyer.

**தொடக்கம்**

**காப்பு**

'கடிகை அசலமெனும் காரணப்பேர் பூண்ட
வடிவம் சிறந்த மலைமேல் - அடிபொருந்தி
வீற்றிருக்கும் நரசிங்கம் விண்டுபுகழ் பாடுகின்றோம்
ஊற்றிருக்கும் நெஞ்சால் உவந்து

**அவையடக்கம்**

நரசிங்கன் எங்கள்குல நாயகனும் ஆதலால்
திரசிங்கம் சேர்ந்தரியாச் சிற்றறிவேன் - சாரசங்கம்
போற்றும் திருக்குருகைப் பூண்ணியர்தான் போற்றியே
சாற்றுவன் மாலைத் தமிழ்.

**நிலத்திருமால்**

மலைமேல் நரசிங்க மாயவனைப் போற்ற
நிலமேல் இருந்ததுகை நீட்டும் - தலைவன்
வரமெல்லாம் நல்கும் மறைமேலான் பாதம்
சிரமெல்லாம் வைப்பாம் செறித்து".

**முடிவு**

'திருமகள் கோயில்கொள வரு சோழிய சிங்கபுரம்
மருமகள் பாடலைக் கேட்க வருந்திரு மாயப்பிரான்
அருமைகள் சிங்கா சலத்தும் கவின்கார் அகோபிலத்தும்
பெருமைகொள் கோயிற்கடிகா சகத்துப் பிறங்குமன்றே

**வாழ்த்து**

வாழ்க திருநர சிங்கப் பெயர்கொளு மாயவனே
வாழ்க அகோபிலம் சிங்கவேள் குன்றம் மகிதலத்தே
வாழ்க சிம்மாசலம் சீகடி காசலம் வாழ் பதமே
வாழ்க கடிகா சலமாலை யாக வருதமிழே"

**பின்னணியுரை** : சௌமிய பங்குனி அ. சனிக்கிழமை காலை 6 மணிக்குப் பூர்த்தியானது

**குறிப்பு** : இந்நூல் 'கடிகாசல மாலை' என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே. கடிகாசலம் என்னும் சோழ சிங்கபுரத்திலுள்ள நரசிங்கமூர்த்தியின் பெருமை போற்றப் பட்டுள்ளது. இங்குள்ள இராம தூதனாகிய அனுமார் சக்தி மிக்கவராகக் கருதப்படுகிறார். 'எப்போதும் யாதும் புகலற்கு அரிய எம்மிறைவன்' என்று ஆசிரியர் பாராட்டுகின்றார் சில பூராணக் கருத்துகளும் இடம் பெற்றுள்ளன. இயற்றியவர் நா. கனகராசன். முழுவதும் உள்ளது. மொத்தம் 51 பாடல்கள் உள்ளன.

## R.8587

## சிங்கவேள் குன்றமாலை

## SINGAVEL KUNRRAMALAI

Pages, 368-381, Lines, 32 on a Page
Exten 225 granthas

**COMPLETE**

"It is nice and beneficial to worship god Narasingam at Shobilam"- so says N. Kanagaraja Iyer in verse medium in this piece

**தொடக்கம்**

"சிங்கவேள் குன்றமெனும் சீரார் அகோபிலத்தே
தங்கவே வந்த தயாமூர்த்தி - சங்கமே
ஆழியே தாங்கும் அகோபில நரசிங்கன்
வாழியென வாழ்த்தும் மணம்

ஆழ்வார் பதின்மர் அவருட் குருகூரர்
வாழ்வார் தமிழ்மறைகள் வாழ்த்திட - கேழ்வாமே

நரசிங்க மாலை நலியத்' துணிகின்றேன்
சாரசங்கம் வாய்த்த தவத்து"

**முடிவு**

'பழமையினாய்ப் புதுமையினாய் இளமையெழில்
கொழிக்கின்றாய் பதுமபாதர்
கிழமையினால் ஆரியங் கார்க்குதவி அமயத்தே
கிடைக்கச் செய்தாய்

கிழமையுளே சனி விழைந்தாய் பொழுதி லந்தி
விழைந்தனையே கீர்த்தி மிக்காய்
அழகமையும் நாரசிங்க அகோபிலத்தென்
பெருமானே அருள்க நன்றே

**வாழ்த்து**

நிலமுள்ள காலமெலாம் நீர்நிறையும்
அகவையெலாம் நேயம் வாழ்க
புலமுள்ள உளத்திலெலாம் நரசிங்கத்
திருமூர்த்தி புகுந்து வாழ்க

நலமுள்ள அகோபிலமாம் சிங்கவேள்
குன்றத்தே நாதன் வாழ்க
குலமுள்ள நரசிங்க மூர்த்தி திரு மாலை நன்கு
குலவி வாழ்க

**பின்னணியுரை** : சௌமிய பங்குனி அ. சனிக்கிழமை மாலை 5 மணிக்கு நிறைவேறியது

**குறிப்பு** : சிங்கவேள் குன்றமாலை' என்னும் பெயரினை உடையது. அகோபிலம் என்று வழங்கும் சிங்கவேள் குன்றத்தில் கோயில் கொண்டுள்ள திருமாலின் பெருமைபற்றிய பாடல்கள் இதன்கண் உள்ளன. தரணிமிக்க துயரடைந்த நிலைதெளிந்து மாளிகையில் தம்பத்துற்றே பரணிபெற்ற நரசிங்கப் பெருமானை அகோபிலத்தே பணிதல் வேண்டுமென்று பாடியுள்ளபாடல்களும் இடம் பெற்றுள்ளன. இயற்றியவர் நா. கனகராசன்முழுவதும் உள்ளது.

# R.8588
# பார்த்தசாரதி மாலை
# PARTHASARATHY MALAI

Pages, 382 - 395 Lines 32 on a page
Extent, 225 granthas

**COMPLETE**

A literary garland consisting of 51 songs tells the glory of Parthasarathy of Triplicane (Madras-5). Maker of this garland, N. Kanagaraja Iyer.

**தொடக்கம்**

"பார்த்தனுக்குச் சாரதியாய்ப் பாரத்தே பூரணனாய்
ஆர்த்தமறை தேடுபத அம்புயனாய்த் தீர்த்தரினச்
சென்னியின்மேல் வீற்றிருக்கும் சீதரனைப் போற்றுவது
நன்னிலைமை யெய்துகவே நா.

சேனை முதலியார் திருக்குருகூர் ஆழ்வார்
ஆனை முகத்தானே ஆதியோர் - தானையினைப்
போற்றுகின்றேன் பார்த்தற்குப் பூரணத்தைப் பாரதத்தே
சாற்றுமவன் பாலை தர".

**முடிவு**

"அறிய வேண்டிய பொருள்கள் ஆயிரமுள
அறிவரும் பலருள்ளார்
நெறியில் நேயமா நெகிழ்வுறு மனத்தொடு
நீளிடை செய்கில்லேம்

உறியில்லாய்நவ நீதத்தை உண்டவன்
உரைதிருச் செல்வத்தைச்
செறிய வேண்டிய திருவல்லிக் கேணியைத்
தேடினம் வருவேமே (ருO)

வாழியோ குருகுலப்பெருஞ் சமரிலே
வாவுமான் தேரோட்டி
வாழியோ சமர்க் களத்திலே கீதையாம் மறைமுடிசெவியேற்றான்
வாழியோ அல்லிக் கேணியில் வாழ்வுற மாயவன் மடிமீதே"

**குறிப்பு** : 'பார்த்த சாரதி மாலை' என்னும் பெயரினை உடையது. சென்னையைச் சேர்ந்த திருவல்விக்கேணியில் கோயில் கொண்டுள்ளார். இவ்விறைவன் கீதையைத் தந்த கதையும் வெண்ணெய் திருடியுண்ட விளையாடலும் போன்ற செய்திகள் குறிப்பிடப் படுகின்றன. மேலும் திரு அல்லிக் கேணியின் சிறப்பும் இடையிடையே பாடப்பட்டுள்ளது. இயற்றியவர் நா. கனகராசன். முழுவதும் உள்ளது. 51 பாடல்கள் உள்ளன.

## R.8589
## கபாலீசன் மாலை
## KAPALIESAN MALAI

Pages 396 - 402; Lines 30 on a page
Extent : 150 granthas

**COMPLETE**

Prepared in 1970 by the poet N.Kanagaraja Iyer. with a view to magnify the name of Kapaleesan of Mylapore (Madras - 4)

**தொடக்கம்**

"அநாயக னான அருள்வள்ளல் முக்கண்
சுநாயகன் மாலை சொலவே - விநாயகனை
வேண்டிக் கபாலி விழைமாலை யாடுவேம்
பூண்டிக்கு வாய்க்கும் பொருள்

மூலப் பரம்பொருள் முக்கண் படைத்த முழுமுதல்வன்
ஆலக் களத்தினன் ஞானசம் பந்தர் அருள் மொழியற்
சாலப் புகுந்தவன் பூங்கோதை வாழ்வு தழைவித்தவன்
காலக் கடவுள் மயிலா புரியாத கபாலி யன்றே (க)

உரவிற் பெரியான் உயிர்க்கு ளுயிராய் ஒளிர்பரமன்
அருவிற் கிளர்பவள் ஐம்பூத மாக அமர்தலைவன்
திருவிற் சிறந்தெழும் பூங்கோதை வாழ்வு சிறப்பித்தவன்

கருவிற் புகாமை யருளு மயிலைக் கபாலியன்றே.

**முடிவு**

கற்பக நாதன் கபாலீசன் சீத கலாநிதியான்
பொற்பக நாயகன் ஞானசம் பந்தர் புகன்றவனம்
அற்பக மாகிய பூம்பாவை தன்னை எழுப்புமிறை
வெற்பக நீங்கித் திருமயிலாபுரிமேவினனே

**வாழ்த்து**

பாம்பா பரணத் திருமயிலாபுரிப் பண்ணவனும்
காம்பாய தோளோ டவனைத் தழுவிய கற்பகமும்
தேம்பாவை போது திருஞான சம்பந்தர் சேவடியும்
பூம்பாவை சீறாய் பொளக பொளக பொளக நன்றே.

**பின்னணியுரை** : சௌமிய பங்குனிய காலை 5 மணிக்கு பிரபந்தம் பூர்த்தி 23.3.70 சோமவாரம் பங்குனி உத்தரம் சுந்தரநகரம் மதுரை

**குறிப்பு** : கபாலீசன் மாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே மயிலாப்பூர் என இக்காலத்தில் வழங்கும் திருமயிலையில் அமர்ந்து அடியார்க்கும் கருணை பொழிகின்ற கபாலியின் சிறப்பு பாடப்பட்டுள்ளது. ஆலைக்கரும்பிடைமுத்தாய் முளைத்த அருளழகன், சோலைச்சிறப்பின் புன்னையால் கானலிற் தோன்றுபவன் என்றும் பாராட்டப்படுகின்றான்.

## R.8590

## திருவேட்டீசுரன் மாலை
## THIRUVETTISURAN MALAI

Pages 403 - 409; Lines 30 on a page
Extent : 150 granthas

**COMPLETE**

Thiruvettsuwaran Pettah is a point in Madras city. This piece sings the glory of Eswaran senshrined at this pettai. Author N. Kanagarajan Iyer. We have 50 Stanzas here.

**தொடக்கம்**

கருவேட்ட வாழ்க்கை கசடனேன் சார்ந்தேன்
திருவேட்ட தேவன் திசையே - உருவேட்டு

இனிப்பிறவா வண்ணமவன் ஏற்றனேன் வழத்
தனிப்பிறவி தந்த தயை.

முனியாத மூர்த்தி முனிவர் கணம்பணி முக்கணினான்
தனியாய மூர்த்தி வடமொழி தேடிய தாண்மலரால்
பனிதாய மாமலைத் தேவி விழைந்துறு பாதியினான்
இனிதாய் வாழ்வு பெருக்குவன் திரு வேட்டீசனே

முடிவு

செம்மல் சிவமே சிவலோக நாயகத் தெய்வதமே
அம்மான் அடியேம் அறிய வருநர் அமைவிலையோ
மைம்மால் திருக்கோயில் சென்று வணங்கும் வழக்கினரும்
எம்மான் நினைப்பழி யிரோ திருவேட்டி கீசுரனே.

ஆராய் மனத்துட் புகவிரும் பாத அறமுளதோ
பூராய் மாக வுணர்த்திய நூல்கள் புகழ்குணங்கள்
நேராய் விளங்கத் திருவேட்டி னீச நியமத்திலே
பாரார் வணங்க வமர்ந்தனை யீதவர் பாக்கியமே

**பின்னணியுரை** : சௌமிய பங்குனி கக செவ்வாய்க்கிழமை காலை 7.30 மணி

**குறிப்பு** : இந்நூல் திருவேட்டீசுரன் மாலை என்னும் பெயரினை உடையது. இதன்கண் சென்னையைச் சேர்ந்த திருவேட்டீசுரன் பேட்டையைக் கோட்டையாகக் கொண்டமர்ந்துள்ள ஈசுரனின் பெருமைகள் பாசுரங்களாக்கப் பட்டிருக்கின்றன. ஐந்தெழுத்தை ஓதி அடைந்தாரைக் காக்கும் அருளரசன் என்று பாராட்டுகின்றார். இயற்றியவர் நா. கனகராசன். முழுவதும் உள்ளது. 50 பாடல்கள் உள்ளன.

## R.8591

## திருவொற்றியூர் சிவபிரான் மாலை

## THIRUVORRIYUR SIVAPIRAN MALAI

Pages 410 - 416 Lines; 30 on a page
Extent : 150 granthas

**COMPLETE**

A Literary garland on Siva temple at Thiruvorriyur. Composer, N. Kanagaraja Iyer. 5i Stanzas are available to enjoy.

**தொடக்கம்**

வெற்றியூர் வேறொன்றும் வேண்டா தருளாலே
ஒற்றியூர் வாழும் ஒருவனைப் - பற்றியே
மாலை யிசைக்க மதகரியின் மாமுகத்தால்
காலை வணங்குமென் கை.

**பிரபந்தம்**

கற்றியூர் தோறுமெனைக் காண்டியெனக் கற்பித்தாய்
பற்றியூர் இருவகைய பற்றினையும் களைகென்றாய்
வெற்றியூர் வேறில்லை வெள்ளிமலை யென்கின்றாய்
ஒற்றியூர் கோயில்கொளும் ஒருமைநிலப் பெருமானே

ஆலால களத்தாயே அசலமிசை பணிபூண்ட
ஆலால சுந்தரரை அவனிமிசை வருவித்தாய்
சீலால வேணியினாய் கெடுத்தனைகண் கொடுத்தனையே
ஞாலா லயங்களியே நலஞ்சான்ற ஒற்றியனே.

**முடிவு**

அச்சமெனும் மிகச்சிறிய அவலமை யணாகுவதோ
எச்சமுற வுலகுயிருக் கெலாமவனே தாய்தந்தை
உச்சமவன் வேண்டுகிலான் ஒருபோதும் கீழ்டையுருள்
பிச்சனவ னென்றாலும் பெரியதிரு வொற்றியனே.

**வாழ்த்து**

வாழ்த்துகின்றேன் தியாகேச வள்ளலையே மனமார
வாழ்த்துகினறேன் முடிதாழ்த்தி மலைமகளைத் தலைவியினை
வாழ்த்துகின்றேன் திருவொற்றி மாநகரத் திறைவனையே
வாழ்த்துகின்றேன் அவனடிமை மரபுவரு மாந்தரையே

குறிப்பு : திருவொற்றியூர் சிவபிரான்மாலை என்னும் பெயரினைப் பெற்றுள்ளது இந்நூல். திருவொற்றியூரில் வீற்றிருந்து அருள்வழங்கும் இறைவனின் பெருமை பாடப்பட்டுள்ளது., சுந்தரருக்காக ஆரூர்

வீதிகளில் தூதாச் சென்றமையும் சங்கியார் திருமணச் செய்திகளும் பட்டினத்தார் பற்றிய செய்திகளும் பாடலில் இடம் பெற்றுள்ளன. திருத்தொண்டர் அந்தாதி பாடத்துணிந்த நம்பியாண்டார் நம்பி பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன. இயற்றியவர் நா. கனகராசன். முழுவதும் உள்ளது. 51 பாடல்கள் உள்ளன

## R.8592

## திருவாரூர் சிவபிரான் மாலை

## THIRUVARUR MALAI

Pages 417 - 430; Lines 30 on a page
Extent :150 granthas

**COMPLETE**

Thyagaraya of Thiruvarur is important for Shiva devottees. This treatise speaks about Thyagaraya of Thiruvarur speaking his glories. N. Kanagaraja Iyer another hints at many literary anecdotes. Piece runs to 51 songs.

**தொடக்கம்**

மருவாரூர் நோக்கம்நுதல் பள்ளிவிழி கொண்ட
திருவாரூர் வன்மீகத் தேவன் - திருவார்
தியாகன் திருமாலை செப்ப நினைப்பேம்
தியாகன் திருவருளே சேர்ந்து

விநாயகன் ஆறுமுகன் வேதமே தேடும்
அநாயகன் ஆரூர் அரனே - சுநாயகனாய்
உள்ளத் துறவே யுரைக்கும் தமிழ்மாலை
வெள்ளத் துறவே விழும்.

வன்மீக நாதனையே வாழ்த்துமனம் கொண்டாலும்
சென்மானும் வன்மைத் தியாகேசன் - தன்மானம்
காக்கும் கருணையான் கால்மலரை நெஞ்சகமே
பூக்கும் தமிழ்க்கருளப் போற்று".

**முடிவு**

"திருவாரூர் இதயநலம் தேவ தேவ
சிறியேனு மிதயமலர் சோர நின்றேன்

க ருவாரூர் இனிவரவே கருத மாட்டேன்
கடமலைகம லாலயத்தே காண்பே னின்னை

மருநவாரூர் சிரித்தழித்த மறையின் மூர்த்தி
மன றப்புற்றில் வாழ்ந்தருளும் வள்ளல் நின்னை
ஒருவாதே வாழ்வுபெற உதவ வேண்டும்
உனையன்றி நானில்லை உலகத் துள்ளே (ருO)

**வாழ்த்து**

வாழியவே திருவாரூர் வளரும் கோயில்
வாழியவே மறைப்புற்றில் வாழும் தேவன்
வாழிய கமலையென மாதர்த் தேவி
வாழியவே தியாகேச வள்ளல் தெய்வம்

வாழியவே சுந்தரர்தம் வாக்கின் செல்வம்
வாழியவே திருத்தொண்டர் வாழும் மன்றம்
வாழிகம லாலமரம் வளஞ்சால் தீர்த்தம்
வாழிகம லாலயமாம் வாழ்வு தானே"

**பின்னணியுரை** : சௌமிய வருஷம் பங்குனி மாதம் 12 ஆம் நாள் புதன்கிழமை சித்திரை நட்சத்திரத்தில் பிரபந்தம் பூர்த்தியானது

**குறிப்பு** : இந்நூல் திருவாரூர் மாலை என்னும் பெயரினைப் பெற்றுள்ளது இதன்கண்ணே, தஞ்சை மாவட்டத்தின தன்னேரிலா நகர் திருவாரூரின் சிறப்பும், அவ்வூரில் கோயில்கொண்டு அருள்வழங்கும் வன்மீக நாதனின் பெருமையும் பாடப்படுகின்றன. ஆரூரனின் அருட்சிறப்பும் தியாகமும், புராணக் கருத்துக்களும் இடம் பெறுகின்றன 'வன்மீக நாதனையே வணங்கும் சென்னி மற்றொருவன் முன்சென்று வணங்க வேண்டா வன்மீக நாதவென வழுத்தும் வாக்கு மனிதரையும் பாடுகின்ற வறுமையெய்தா என்று குறிப்பிடும் பாடல் வரிகள் கவிஞரின் திடசிந்தனையைக் காட்டுகின்றன. இயற்றியவர் நா. கனகராசன் முழுவதும் உள்ளது. 51 பாடல்கள் உள்ளன.

## R.8593

## காலடிச் சங்கரமாலை

## KALADI CHANKARAMALAI

Pages 431-437; Lines, 30 on a page

Extent, 150 granthas

**IN COMPLETE**

On Sankara Guru of Kaladi (Kerala) by N. Kanagaraja Iyer. 51 Stanzas talk about Sankara.

தொடக்கம்

"தவநிலைத்த காலடியிற் சங்கரராய் முன்னா
அவதரித்த சங்கரனை அன்னை - சிவநிலைத்த
ஆரிய அம்மை அருளாலே போற்றுகின்றோம்.
நேரிய மார்க்கம் நினைத்து

**பிரபந்தம்**

ஆலடியன் பெருநால்வர் பெறும்பொருள் அருளிய
சிவபெருமான்
நூலடி யாய்ந்தன வேதம் மறைந்தன நுவல்லது கருதினனா
மாலடி பற்றிய மரபினிலொரு குருவரனென வந்தருள
காலடி குருவர மூர்த்தியை யெய்திய கதையை நிரப்புவாம்

முடிவு

"சங்கர சங்கர சங்கர நாம சகத்திர மோதுவமே
சங்கர தோத்திர வாக்கிய வாரிதி தாண்டவு முயலுவமே
சங்கர பாடிய சங்கதி தெளிவுறு சக்தியு மெய்துவமே
சங்கர குருவர பாதுகை சென்னியில் சார்புறு பேதுறவே.

தத்துவ மகியெனும் வாக்கிய வுள்ளுறை சாற்றியபரமகுரு
சத்துவ சக்தி மனத்திடை யெய்துற சாந்தி யளித்த குரு
வத்துவை யீதென நன்கு விளக்கிய வாக்குள தத்துவனார்
சித்து விளைத்தருள் சங்கர குருவார் சேவடி சேருவமே".

குறிப்பு : 'காலடிச் சங்கர குருவரமாலை' என்னும் பெயரினை உடையது. இதன்கண் சங்கரரின் பெருமையும் அருள்வழங்கும் மாட்சியும் பாடப்பட்டுள்ளன 'சங்கர குருவர மூர்த்தியெனப் பெறு சத்திய மூர்த்தி பிரான்' என்றும் 'உருவமு முளதிலை அருவமு முளதிலை உருவரு முளதிலயே' என்றும் சங்கரரைப் பாராட்டுகின்றார் இயற்றியவர் நா. கனகராாசன் முற்றுப்பெறவில்லை 51 பாடல்கள் உள்ளன.

## R.8594
## குருபாதுகா சகஸ்ர மாலிகை
## GURUPADHUKA SAKASRAMALIKAI

Pages 438 - 474 lines, 30 on a page
Extent 150 granthas
**IN COMPLETE**

All these 275 Stanzas are sung in praise of the feet of Sankara of Kaladi (Kerala). Worshipper, N. Kanagaraja Iyer.

**தொடக்கம்**

"குருவரர் சங்கரன் கொள்கை மதிக்கக்
கருது மனமே கதியைத் - தருகின்ற
பாதுகையை ஆயிரம் பாட்டாலே பாடுக
சாதுகை யுள்ளே தழைத்து

**பிரபந்தம்**

சீரிய நூனெறி சென்று சிறப்புறு சித்திறரும்
நாரிய மாயம் அகன்று கரைசேறு நன்மைதரும்
காரியம் ஓர்ந்து புரியும் திறமும் கனிந்தருளும்
ஆரிய சங்கரர் பாதுகை யாரும் அடிநிலையே (க)

இன்புறு வாழ்வு நாலங்களை மேன்மேல் ஈந்தருளும்
அன்புறு நெஞ்சினை ஞானமார்க் கத்தில் அழைத்தருளும்
பொன்பெறு ஞானத்தின் பேறும் சிறப்பப் பொருத்திவிடும்
அன்பறி சங்கரர் பாதுகை யாடும் அடிநிலையே" (2)

**முடிவு**

"காலடியாம் பெயர்தலத்தின் கருத்தனைத்தும் விளக்குவதே
மாலடியார் சிவனடியர் மலைமகளார் குலத்தொழும்பர்
நூலடியே தெளிபொருளை நுவன்றருளும் குருவரனூர்
ஆலடியி லிருந்தவரே அடிநிலையாம் தொழுவோமே (உஎச)

சொல்லளவாப் பொருள்புகன்ற தூயமனக் குருவரரை
இல்லளவா நிறுத்துவதற் கெத்தாயும் வலளாகான்
கல்லளவாக் குடைபிடித்தான் காட்டுநெறி விளக்கவந்தார்
எல்லாளவாம் பாதுகையை இறஞ்சுவதெம் தருமமன்றே" (உஎரு)

குறிப்பு : இந்நூல் 'காலடி குருபாதுகா சகஸ்ரமாலிகை' என்னும் பெயரின் உடையது இதன்கண் காலடி தோன்று கருவரர் சங்கரர் காண்மலரில் ஆலடிபோல அமர்திருப்பெற்ற அடிநிலை பாடப்பட்டுள்ளது 'ஒன்று புகன்றுலகாளும் உத்தமரைக் குருமூர்த்தி என்றுகொளுந மிதயத்தேம்" என்று வணங்கும் நிலையை நமக்குக் காட்டுகின்றார் கவிஞர். இயற்றியவர் நா. கனகராசன். 275 பாடல்கள் உள்ளன முற்றப்பெறவில்லை.

## R.8595
## SANGARA PRAPANDHAVALI GURUPADHA DHOOLI

Pages, 3-283; Lines, 28 on a page
Extent; Tamil; new; ;good

## R.8595
## காலடி சங்கர குருவர மாலை
## KALADI SANGARA GURUVARA MALAI

Pages 3-10, Lines 28 on a page
Extent 175 granthas

**COMPLETE**

Same work as that described under R.No. 8593

**குறிப்பு** : இந்நூல் ஆர். எண் 8593 இல் குறிப்பிடப்பட்டிருக்கும் நூலைப் போன்றதே. ஆனால் இதுமுற்றுப்பெற்றுள்ளது. அதனைவிடச் சிலபாடல்களும் அதிகமாக இடம் பெற்றுள்ளன.

## R.8596
## சங்கர குருவர பாதுகா சகஸ்ர மாலிகை
## SANKARA GURUVARA PADHUKA SAKASRA MALIGAI

Pages, 11-198 Lines; 28 on a page
Extent, 3700 granthas

Complete Same work as that described under R.No. 8594.

குறிப்பு : ஆர். எண் 8594 இல் வருணிக்கப்பட்டுள்ள நூலைப் போன்றதே இந்நூல் ஆனால் அதனைவிட அதிகமான பாடல்கள் பெற்று முற்றுப் பெற்றுள்ளது. மொத்தப் பாடல்கள் 1008.

## R.8597

## நெஞ்சுவிடுதூது

## NENJUVIDUTUDU

Pages 199-211; Lines 34 on a page
Exten 260 granthas

**COMPLETE**

The poet sends his message to Sankara noting his longing for graces This tutor is a separate literary genre in Tamil. Author, N. Kanagaraja Iyer.

**தொடக்கம்**

"பேரின்பம் நல்கும் பெருங்குரவர் சங்கரர்தம்
சீரின்பம் நேர்ந்த திருவடிக்கே - ஓரன்பம்
நெஞ்சுவிடு தூது நிகழ்த்த விநாயகனே
வஞ்சமற வாக்கருளும் வந்து

பிறப்பென்ற பேதைமைப் பித்தொழிய வேண்டிற்
சிறப்பென்ற செம்பொருளே தேர்க - இறப்பென்ற
துன்பம் தொடராத தோற்றமறை வற்றயர்வில்
இன்பம் கிளருநிலை எய்தவே - அன்பும்
அறிவு' தொடர்ந்துதவி யாற்றத் தெளிவும்
செறிவும் பொருந்திய தேட்டம்

**முடிவு**

"யாதே யியம்பினை யேகென் றிசைப்பாரோ
தீறாத வினையாது தேயமெலாம் - மோதாதே
மீண்டு விரைந்து வந்து வேண்டுவ கூறுதற்கே
ஈண்டு வருகென்றி யம்புகின்றேன் யாண்டும்

எவர்க்கும் எனது செயல் யாதும் இயம்பேன்
அவர்க்கும் எனக்கும் அகத்தே - கவர்க்கும்
கருத்தில்லை மெய்ம்மையவர் காட்டுவர் கேட்டே

விருத்தமிலா ஞான விளக்கம் - பொருத்தவே

நஞ்சமுண்ட நாயகனே ஞானமுனி ஆதலால்
நெஞ்சமே வாக்குனக்கு நேர்ந்துளேன் - பஞ்சவரை
வெல்ல விழைந்துளேன் வேகமுறத் தூதுரைத்த
வல்லா உரைகொண்டு வா"

**பின்னணியுரை** . இராமநகரம். கோட்டையூர் நா. கனகராசன்

**குறிப்பு** : இந்நூல் "நெஞ்சுவிடுதூது' என்னும் பெயரினை உடையது. இறைவனின் பெருமைகளை எடுத்தியம்பி அருள் வேண்டி அவன்பால் நெஞ்சினைத் தூதாக விடுத்துப் பாடிய கண்ணிகள் இதன் கண்ணே இடம் பெற்றுள்ளன. வேதவிளக்கமாய், மெய்ப்பொருளாய் ஞானமலிந்த தலமாக வுள்ள கோயிலிடைச் சென்று வா என்று நெஞ்சினைத் தூது விடுத்துப் பாடியுள்ள பிரபந்த நூல் இதுவாகும் இயற்றியவர் நா. கனகராசன். முழுவதும் உள்ளது

## R.8598

## குருவருள் மாலை

## GURUVARUL MALAI

Pages 212 - 239; Lines 32 on a page
Extent : 425 granthas

**COMPLETE**

These 109 songs form a poetic garland meant for his 'guru'. Author, N. Kanagaraja Iyer.

**தொடக்கம்**

"திருவருள் வேட்கை சிறிதுண்மை யாலே
குருவருள் மாலை கொடுப்பேன் - மருவருளிற்
காலடி வந்த கருணாகர மூர்த்தி
காலடியே காப்பாகக் கண்டு

**பிரபந்தம்**

திருவருள் விளக்கம் விளங்குவ தெளிதோ
சிவபிரான் விழிதிறந் திலனேல்
மருவருள் நெறிக்கே யுறுதியாய் நடக்க
மனமலர் பயிற்சிபெற் றிலதே

தருவருள் சிறப்பின் மிகுந்ததை யருளித்
தாண்மலர் நிழலிலே செறிக்கும்
குருவருள் பொருந்தக் காலடித் தலத்தே
குரவர்மெய்ப் படிவமே தொழுவாம்" (க)

**முடிவு**

"எடுத்த பணியை எழிலுற முடித்தாய்
ஈரிரு திருமட மமைத்தாய்
கொடுத்த மெய்ப்பொருளின் பெருமைநன் கறிந்தார்
குவலயத்தினில் பலரிருப்பர்

அடுத்தது அவத்தா னத்தினை யடைதல்
ஆமென அவர்புகன் றருள
விடுத்தது துறவு வேடமென் றுயரும்
வெள்ளிவெற் படைந்தது சிவமே (கருஅ)

**வாழ்த்து**

வாழிய தரும மர்த்ரும காம
வகைசில முக்தியும் வாழ்க
வாழிய ஒருமை நெறியினை உலகம்
மதித்துற வரளிய மடமே

வாழிய குரவர் சங்கரர் புகழே
மகித்தலம் வானுள அளவும்
வாழிய குறவர் மரபிலே வளர்ந்த
மாதவர் நால்வரின் மரபே"

**குறிப்பு** : 'குருவருள் மாலை' என்னும் பெயரின் இந்நூல் பெற்றிலங்குகின்றனது. இதன்கண்இ இறைவனின் திருவருள் வேண்டி அவர்தம் குருவருளைப் பாராட்டிப் பாடப்பட்டுள்ளது. உலகில் பெரியன வற்றுள் எல்லாம் பெரிதாக இருப்பதும் அரிதாக இருப்பதும், சிறப்புடையதுவும் குருவருள் தான் என்று உணர்ந்து பாடப்பட்டுள்ளது இயற்றியவர் நா கனகராசன் முழுவதும் உள்ளது. 109 பாடல்கள் உள்ளன.

## R.8599
## அறிவர் ஆற்றுப்படை
## ARIVAR ARRUPPADAI

Pages, 240 - 255. Lines, 34 on a page
Extent, 275 granthas

**COMPLETE**

Poet N. Kanagaraja Iyer guides persons towards Adi Sankara, his guru. All 524 lines speak at length the glory of Sanakaracharya of Kaladi.

**தொடக்கம்**

**வேண்டுகோள்**

"அறிவர் இனத்துக் கரசாம் குரவர்
செறிவு தெளிவு சிறந்த - நெறிவகுத்தார்
ஆரிய சங்கரர்பால் ஆற்றுப் படுத்துகின்றேன்
சீரிய மெய்யறிவர்த் தேர்ந்து
அறிவிலே னெனினும் அணுகிலே லெனினும்
அறிவிலே அறிவதற் குரிய
அரும்பொருள் சிறந்த பெரியருட் பெரியர்
ஆரிய சங்கரர் எனவே
அறிவிலே துணிந்தேன் அவரருள் துணையா
அறிவருள் மிகச்சிறந் தவரை
அறிவதை யறியும் நெறியிலே நடத்தும்
அவாவுற இஃதியற் றுவனே".

**முடிவு**

"எவ்வணம் ஆயினும் இருப்பேன் எழேனே
மெய்ப்பே துறுக வேதமே மறைந்த
அப்பே றுறுகென அடங்கின வைனே
அடங்கி யிருந்த உடம்பி லிருந்தே

தெளிந்த தெளிவினைச் செப்புதல் அறியாள் (ருகரு)
இதுவே பரம்பொருள் இதுவே பெருநிலை
இதுவே துறப்பாய் எய்தும் பெரும்பயன்
இதுவே குரவருள் ஈந்தருள் தத்துவம்
இதுவே எங்கும் யாவுமா யிருப்பது
இதுவே முடிபென் றெய்தின் வைனே (ரு20)
அறிவர் பெருமான் அருளால் அமைந்த
அறிவர் நெறியன் அருமை - செறிகின்ற
ஆற்றுப் படையை அவர்க்கே அளிக்கின்றேன்
தேற்றும் பொருளைத் தெளிந்து"

பின்னணியுரை : 28.7.70 இது முதற்பிரதி இங்கு முடிகிறது நா. கனகராசன் சாதாரண ஆடி. கஉ

குறிப்பு : இந்நூல் 'அறிவர் ஆற்றுப்படை' என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. தன்னைப்போல் மற்றவர்களும் பலன் பெற வேண்டுமென்று விழைந்து உரிய இடத்திற்கு ஆற்றுப்படுத்துதல் ஆற்றுப்படையாகும் அறிவரை அறிவரிடம் ஆற்றுப் படுத்துகின்றார் ஆசிரியர் நா. கனகராசன். முழுவதும் உள்ளது. 524 வரிகள் உள்ளன.

## R.8600
## பிரம்மானந்தக்கும்மி
## BRAMMANANDAKKUMMI

Pages 256 - 278. Lines, 28 on a page
Extent 400 granthas

**COMPLETE**

Poet N. Kanagaraja Iyer expresses his pleasure on attainment of the knowledge of Badman in the form of Kummi songs. This has been written in 1970.

**தொடக்கம்**

## காப்பு

"கும்மி யிசைநடையிற் கொள்கைத் தலைப்பொருளை
கும்மி யடித்தே குறிப்பிப்பேன் - அம்மை
கலைமகளும் மாமகளும் கைகொடுக்க வேண்டும்
மலைமகளின் கூடவே வந்து.

கும்மி யடியுங்கள் கும்மி யடியுங்கள்
கூடிக் கும்மி யடியுங்களே - மெய்யினை
நாடிக் கும்மி யடியுங்களே
அம்மையும் அப்பனும் ஆனபரம்பொருள்
ஆலயம் தோறும் இருப்பதனால்
இம்மையும் அன்மையும் வீடும் பெறுவது
எமக்கும் எளிதென்றே கூறுகின்றோம் கும்மி"

**முடிவு**

"கண்ணன் விசுவ ரூபம் காட்டிய ஆனந்தன்
கண்டார் விசயன் களத்தினிலே
கண்ணன் காவியன் மீது நடிக்கையில்
கண்டது மானந்த எல்லை யன்றோ.

எந்த உருவத் திருந்தாலு மென்னையே
எல்லா உருவமும் ஓர் பொருளே
அந்த மறையில் அடங்கிய அப்பொருள்
ஆனந்த மன்றிப் பிறிதிலையே

## வாழ்த்து

வாழி பிரம்மானந்த வல்லி விளக்கிய
வாக்குக் கடங்காத ஆனந்தமே
வாழி ஆனந்த மின்னதென் றோதிய
மாதவ சங்கரர் மாமரமே"

**பின்னணியுரை** : 30.7.70 வெள்ளிக்கிழமை மாலை 5. மணி பூர்த்தி

# R.8601
# ஆனந்தக் களிப்பு
# ANANDAKKALIPPU

Pages 279-283 Lines, 28 on a page
Extent, 100 granthas

**COMPLETE**

Thinking of god will give happiness to life; this is the message by N. Kanagaraja Iyer here.

**தொடக்கம்**

"ஆனந்தம் ஆனந்தம் ஆடினேன் - பரம
ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தம் மூழ்கினேன்
தானந்தம் இல்லாத தத்துவம் தந்தருள
சங்கர பாத சாரோகம் போற்றினேன் (ஆ)

அகரத்தில் நானுளேன் என்றதாம் - பிரம
ஆனந்த தத்துவம் அகில வியாபகம்
முகரத் தகுந்ததும் இல்லை - நாவால்
மொழியத் தகுந்த மொழிப் பொருள் இல்லையே"

**முடிவு**

"இன்னல் வருவதால் நெஞ்சம் - அந்தோ
இழிந்த நிலைமைக் கிழிவது "இதனால்
நன்னலம் வந்ததும் அதுவே இங்கு
நானே பெரியவன் என்பதும் அதனால்

**வாழ்த்து**

வாழிய குரவர் கழலே - அவர்
வாக்கினால் அருளிய வாய்மையே வாழ்க
யாழிசை வாழிய சிவனே - குரு
என்பதை எளியவர் நன்குணர் பவரே

வாழிய ஆனந்தக் களிப்பே - காலடி
வந்த குருவார் வைத்த புதையல்
வாழிய அதனையே அறியும் - மனமும்
வாழ்வும் படைத்தவர் வாழியமிகவே"

குறிப்பு : இந்நூல் 'ஆனந்தக் களிப்பு' என்னும் பெயரினை உடையது. இதன் கண்ணே, இறைவனின் அருள்பெற்ற மகிழ்ச்சியை ஆனந்தக் களிப்பாகப் பாடப்பட்டுள்ளன. சிறு இன்பத்தில் வீழாமல் பேரின்பத்தை நாடுகநெஞ்சமே. நீ பெற்றிடுவாய் மன இன்பமே என்று ஆனந்தக் களிப்பால் ஆடிப்பாடுகின்ற முறையில் பாடல்கள் அமைந்துள்ளன. இயற்றியவர் நா. கனகராசன் முழுவதும் உள்ளது.

## R.8602

## மாதவ வைபவம்
## MADHAVA VAIBAVAM

Paper 32 cm x 20 cm. Pages 1-306, Lines, 28 on a page
Tamil; New; Good; Extent, 6500 granthas

**COMPLETE**

These 1656 songs are for the life sketch of Lord Madhava otherwise known as 'Thirumal', in Tamil. Sung by N. Kanagaraja Iyer.

**தொடக்கம்**

**பாயிரம்**

**பரத்துவம்**

"பரம்பொரு ளெனவு மெய்ம்மைப் பரமமா பிரமமென்றும்,
உரம்பெறு முயிரின் கூட்டம் உள்ளுணர்ந் துணர்த்தலான
வரம்பெறு நிலைமை பூண்டு வைகுந்த சதனம் வாழும்
சிரம்பெறு மருளின் மூர்த்தி திருவுருச் சிந்திப் போமே.

**வியூகம்**

ஒருமையை நான்மை யாக்கி யொளியுருப் புனையுந் தேவன்
அருமையில் படைத்தல் காத்தல் அழித்தலு மமைந்த நாதன்
பெருமைப் பாலாழிக்கட் பிரிவனு மனந்தப் பாயல்
வருமொரு திருமால் பாத மலர்களை வழுத்து வோமே". (கருலை)

**வாழ்த்து**

வாழி நாரணன் வாழிய நான்முகன்
வாழி ஞானியர் மாமர பென்றுமே
வாழி வியாச மாமுனி தாண்மலர்
வாழி ஞான மகோததி ஞாலத்தே"

குறிப்பு : இந்நூல் 'மாதவ வைபவம்' என்னும் பெயரினை உடையது இதன்கண்ணே, திருமாலின் அவதாரச் சரிதங்கள் பாடப்பட்டுள்ளன. இந்நூல், பரமபதப்படலம். மச்சாவதாரப்படலம், கூர்மாவதாரப்படலம். அயக்கிரீவ அவதாரப்படலம், வராகாவதாரப்படலம். நரசிங்காவதாரப்படலம். வாமணாவதாரப்படலம், கஜேந்திர மோட்சப்படலம். துருவசரிதப்படலம், பிருது சரிதப்படலம். கபில சரித்திரப்படலம். தத்தரேய அவதாரப்படலம், பரசுராம அவதாரப்படலம் இராமாவதாரப் படலம். வியாச அவதாரப்படலம் என 15 படலங்கள் உள்ளன. அப்பெயர்தாங்கிய படலம் அது பற்றிய செய்திகளைப்பற்றிய பாடல்களைக் கொண்டுள்ளது இயற்றியவர் நா. கனகராசன் முழுவதும் உள்ளது. 1656 பாடல்கள் உள்ளன.

## R.8612
## One Codex
## R. 8603

**Paper** : 29. 5 c.M. x 18.5. C.m. Pages, 1-186, Lines 30 on a page
Tamil ; New: Good

## R.8603
## அப்பர் திருவாக்கமுது
## APPAR THIRUVAKKAMUTHU

Pages 1-17; Lines 28 on a Page
Extent 250 Granthas

**COMPLETE**

We have 109 verses; all on Thirunavukkarasu who is also known as Appar, one of 63 'Nayanmars'. This book has been composed in 1971by N. Kanagaraja Iyer

**தொடக்கம்**

**காப்பு**

அப்பர் திருவாக் கமுதுசுவைத் துள்ளத்தே
வைப்பென வைத்த வயனத்தைச் - செப்பமுற
ஓதத் துணிவேன் ஒருகொம் பெழுத்தாணி
ஆதற் கமைவோன் அருள்

**பிரபந்தம்**

நாவுத் கரசென்று நம்பெருமான் சூட்டுபெயர்
பாவுத் கரசரான பண்பாளர் - தேவுக்

கியற்று திருப்பணியால் எய்தியது கண்டும்
மயற்றான் விழுமோ மனம்.

முடிவு

வீசுபொருள் ஒன்றில்லை வேதமே யோதுநிலை
கூசுநிலை கொண்டே குறைந்தாயே - பாசமயம்
போகவருள் வாகீசர் பொன்மொழியே தேறுவதால்
ஆகமுறும் நாவுக் கரசு

**வாழ்த்து**

வாழியரோ நாவரசர் வாழ்த்தும் திருவடிகள்
வாழியரோ நாவரவன் வாக்கமுதம் வாழயரோ
சத்தசிவ மென்றடைந்த பத்திறத் தத்துவமே
முத்திநெறி நல்க முனைந்து

**பின்னணியுரை** : இப்பிரபந்தம் கோட்டையூர் இராமநகரத்தில் தொடங்கி மதுரையில் வந்து இன்று காலை பூர்த்தி யாகிறது. இராமகிருஷ்ணன் மாமனார் அகத்தில் இரண்டுநாள்.

விரோதிகிருது மார்கழி க0. சனிக்கிழமை காலை 5.மணி 25.12.71

**குறிப்பு** : இந்நூல் 'அப்பர் திருவாக்கமுது' என்னும் பெயரினை உடையது இதன்கண்ணே, அப்பரின் வாக்குவன்மையும், இறைவன் அருள் வழங்கிய பெருமையும், பாடலின் பெருமையும் பாடப்பட்டுள்ளது சிவபெருமானைச் சேர்வதற்கு முன்னர் அவர் அடைந்த சோதனைகளையும் தொல்லைகளையும், குறிப்பிட்டுள்ளர். அவற்றை யெல்லாம். இறைவன் அருளால் கடந்து வந்தமையையும் காட்டுகின்றார் தேவாரம் பற்றிய பெருமையையும் சுட்டியுள்ளார். இயற்றியவர் நா. கனகராசன் முழுவதும் உள்ளது. 109 பாடல்கள் உள்ளன.

## R.8604
## சுந்தரர் செந்தமிழ் மாலை
## SUNDHARAR SENTHAMIL MALAI

Pages, 18-45, Lines, 30 on a page
Extent 450 granthas
**COMPLETE**

On Sundarar, a nayanar' By N. Kanagaraja Iyer, we have 101 verses

**தொடக்கம்**

**காப்பு**

'செந்தமிழ் மாலை திருவாரூர் நம்பிக்கே
சந்தமுற வாக்கும் தமிழ்ப்பணிக்கே - பந்தமெடுத்
தின்பொருளு நன்கமைய வேரம்பன் நல்குமென
அன்புகெழு நாயேன் அகம்.

**நூல்**

நம்பி யாரூர் தம்பிரான் றோழர்
நலம்பொலி கயிலைவாழ் வுடையார்
செம்பினா லியன்ற சிலைகளும் சிலம்பின்
சிலைகளும் சிவத்தையே விளக்க

அம்பினால் நிரம்பு தமிழகத் திடையே
அநேகமாம் அற்புதம் புரிந்த
கம்பியா மணத்தேன் சுந்தர மூர்த்தி
கழல்மலர் தலைக்கணி குவமே'

**முடிவு**

'பொருளிலே மனமே மயங்குறீஇத் திரிந்தாய்
புண்ணிய கருமமே மறைந்தாய்
இருளிலே கிடந்தாய் அழுவதற் கறியாய்
இதயமே நினக்குளே இருக்கும்

அருளிலே சிறந்த திருவுருப் படைத்த
அசலனை விளக்கு தேவாரம்
பொருளிலே பிறங்க அருளுசுந்தரரைப்
போற்றுக வாழ்கபல் லாண்டே (க.)

**வாழ்த்து**

நாற்பொரு ளுணர்த்தும் நான்குமா மறைகள்
நல்கிய நால்வருள் ஒருவர்
பாற்படு முலக மயக்கினை யொழித்துப்
பரமனைச் சார்நெறி விளக்கும்

நூற்படு மறிவின் நுண்மையிற் சிறந்த
நோன் ·)மசால் நம்பியா ரூரர்
காற்படு பெரும்பேறு அருளினா லுறுவார்
காசினி யகத்துவா ழியவே"

**குறிப்பு** : இந்நூல் 'சுந்தரர் செந்தமிழ் மாலை' என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே சைவசமயக் குரவர்களில் ஒருவராகிய சுந்தரர் மீது பாடப்பட்ட பாடல்கள் உள்ளன. சுந்தரருக்குத் தமிழ்ப்பாமாலை சூட்டிமகிழ்கின்றார் இதன் ஆசிரியர் நா. கனகராசன். ஆரூரன் தோழரென்றும். தேவராத்தைத் தந்த திருமகன் என்றும் பாராட்டப்படுகின்றார் பெரியபுராணக் கதைகளும். கருத்துக்களும் இடம்பெற்றுள்ளன. முழுவதும் உள்ளது. 101 பாடல்கள் உள்ளன

## R.8605
## சண்டேசுர மாலை.
## SANDESURA MALAI

Pages, 46-71, Lines, 32 on a page
Extent, 250 granthas

**COMPLETE**

Speaks about Chandeswara nayanar in 100 stanzas. Author, N. Kanagaraja Iyer

**தொடக்கம்**

"தம்பிரான் கூவினத் தாரேந்து மேற்குநில
உம்பரார் போற்றும் உயர்வினார் - நம்பியார்
சண்டீசர் பாதசரோ கெம்போற்று கவிக்கு
உண்டீசன் மைந்தனருள் ஒன்று

**பிரபந்தம்**

ஓதிய மறையின் பொருளினைத் தெளிய
உளங்கொளீகி ஒருபிறப் படைந்து
வேதிய நெறியின் தகவெலா மறிந்தும்
விருப்பினா லானிரை புரந்து
சோதியி னிலைத்த மனத்தவர் விசார
சொ।ரூபமே யாகிய வருணி

பாதிவெண் மதிபூண சடையினார்க் குரிய
பத்தரைப் பணிவது தவமே" (க)

முடிவு

"பெரியமா தவத்தார் பெற்றகளும் திருவைப்
பிள்ளைமைப் பருவத்தே மணலால்
அரியதோர் இலிங்கம் பிடித்தெதிர் நிறுத்தி
ஆனிரை அமுதமே பொழிய

உரியதாம் வழியா ருளமுற வியற்றி
உயர்வர அயர்நிலை யடைந்த
பெரியவர் சண்ட வீசரர் எனயாம்
பேசினால் முத்தியெய் துவமே
வாழிய சண்ட வீசர பதமே
வாழிய சிவத்தின் மடிதிறந் தழுதம்
வழங்கிய கோக்கலின் குருவே
வாழிய வலம்வரும் மரபே
வாழிய சண்ட வீசுரர் திருமுன்
வந்தது தேர்க்குமா தவமே"

குறிப்பு : இந்நூல் 'சண்டேசுரா மாலை' என்னும் பெயரினை உடையது இதன்கண் இறைவனின் தொண்டர்களுள் ஒருவரான சண்டேசுவரரின் பெருமை பாடப்பட்டுள்ளது. 'ஆற்றுநீர் இடையே ஆனிரை நடத்தி அருகுள பற்றினை மேய்த்தவர் என்றும் ஆப்பயன் கொண்டு ஆண்டவன் அருள் அடைந்தவர் என்றும் பாராட்டப்படுகின்றார் பெரிய புராணக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. இய்றறியவர் நா கனகராசன் முழுவதும் உள்ளது.

## R.8606

## சூடிக்கொடுத்த சுடர்க்கொடி மாலை
## SOODIKKODUTHTHA SUDARKODI MALAI

Pages, 72-87, Lines 28 a page
Extent, 400 granthas
**COMPLETE**

101 Stanzas sing here the glory of Andal who is known as 'Soodikkodutha Sudarkkodi' in Tamil literature. Composer of the stanzas, N. Kanagaraja Iyer. Composed in 1972.

**தொடக்கம்**

**காப்பு**

"ஆனைமுக னாதியரோ டானந்த பூமியிலே
சேனைமுத லாகத் திருப்பணிபூண் - கோனைமழை
மேனியுளான் தொண்டரருள் வேண்டிவில்லி புத்தூரின்
மானினையே போற்றுமென் வாக்கு

**பிரபந்தம்**

கோதைதகு பூங்கோதை கோத்தமிழ்ப் பாவையினை
ஆதரவால் எம்பெருமான் ஆய்ந்துருகச் சாத்துமகன்
சீதைநிகர் பிறப்புடைய தேவிதிரு வடிமலரை
ஓதையிரு மறைபுகன்றே உள்ளுருகப் போற்றுதுமே (க)

போற்றுமனம் பொருந்தியபின் பொருள்தேட வேண்டுவதே
சாற்றுமுறை தெளிந்தபினர்த் தமிழ்மொழியும் முன்வருமே
ஆற்றுநெறி யறிந்தமலன் அகம்புகவே ஆண்டாரைப்
போற்றினையே பெறுந்தேவி பெயரோதி வாழுவமே" (2)

**முடிவு**

'ஓதாம லுணர்ந்தானை ஓங்காரம் தெளிந்தானைப்
பாதார விந்தமுறப் பரமனையே பணிந்தானை
சீதார வந்தறியர் திருமுகத்தால் தமிழ்ப்பாடல்
கோதாடு நமக்கென்றே கொடுத்த தெய்வம் கோதையன்றே (க00)

**வாழ்த்து**

வாழ்த்துகின்றோம் துழாய் மாலை மாயவற்கே சூட்டினனை
வாழ்த்துகின்றோம் திருப்பாவை மனமுருக விசைத்தானை
வாழ்த்துகின்றோம் பெரியாழ்வார் மகளாய தெயவத்தை
வாழ்த்துகின்றோம் தமிழணங்கை வரம்பெற்றாய் நீயென்றே"

**பின்னணியுரை** : விரோதிகிருது மார்கழி 27 மங்களவாரம் காலை 5.30 மணி இப்பிரபந்தம் பூர்த்தி ஆண்டாள் திருவருள் 11..72 கனகலட்சுமி ஸ்ரீ ராமநகர். கோட்டையூர்

**குறிப்பு** : இந்நூல் 'சூடிக் கொடுத்த சுடர்கொடி மாலை என்னும் பெயரினை உடையது சூடிக்கொடுத்த சுடர்க்கொடி என்று அழைக்கப்பெறும் ஆண்டாளின் பெருமையினைக் கூறுவது இந்நூற்கருத்தாகும் ஆண்டாளைப்பற்றிய கதைகளும். செய்திகளும். இறைவனை அடைந்த சிறப்பும் விரிவாகப் பாடப்படுகின்றன 'ஆண்டாளைப் பரவுதற்கு அகம் வேண்டும் புறம்வேண்டும் என்று ஆசிரியர் நா. கனகராசன் அன்பொழுகப் பாடுகின்றார். முழுவதும் உள்ளது 101 பாடல்கள் உள்ளன

## R.8607
## புனிதவதியார் திருமாலை
## PUNITHAVATHIYAR THIRUMALAI

Pages, 88-113. Lines 32 on a page
Extent 425 granthas
**COMPLETE**

A poetical garland on Punitha vathiyar also called as Karaikkal ammaiyar in verse medium. Composer, N.Kanagaraja Iyer. This has flourished in 1972.

**தொடக்கம்**

'புனிதவதி நாமம் பொறுத்த தவச்செல்வி
மனிதகுலம் வாழ வகுத்த - அளிதா
சாதா ரணமாய சாத்திரத்தை யேரம்பன்
பாதார விந்தம் பகர்.

**காப்பு**

புனிதவதி நாமம் பொறுத்ததவச் செல்வி
மனிதகுலம் வாழ்த்துதிரு மங்கை இனிதாய
காரைக்கா லம்மையெனக் கண்ணுதலே வாழ்த்திய
சீரைகத்தான் ஏரம்ப செப்பு

முடிவு

நறவு பூணும் பொ[illegible]பேறு சுருதி முதல்வர் அருளன்றோ
உறவு பூணும் உரிமையினை உலகமனைத்தும் பெறுமன்றே
பிறவு முனைந்துப் பயனென்னை பிறந்தாள் இறந்தாள் பூம்பாவை
அறவு [illegible]த்தேன் அவலத்தால் அமலன் அருளே விளங்கின்றே [illegible]
நீடு வாழ்க கவுணியர்கோன் நிரம்பி வாழ்க தேவாரம்
பீடு வாழ்க தமிழ கத்தே பிறப்பும் இறப்பும் வென்றமகன்
ஈடு மெருப்பும் இலாத்துறவின் இருக்கத் துணிந்த மறுபிறவி
ஓடு பிடித்து வாழியவே உலகம் புகழ வாழியவே"

குறிப்பு : இந்நூல் 'பூம்பாவை தவச்சிறப்பு மாலை' என்னும் பெயரினைக் கொண்டுள்ளது. இதனுள் சம்பந்தர். அரவுதீண்டிய பூம்பாவையை மீண்டும் உயிர்ப்பிக்கச் செய்த நிகழ்ச்சிகள் இடம்பெற்றுள்ளன. சிவநேசச் செட்டியாரின் சிவபக்தியும். சம்பந்தரின் அருள் நிலையும் போற்றப்படுகின்றன. பூம்பாவையின் தவச்சிறப்பும் போற்றப்படுகிறது. இயற்றியவர் நா. கனகராசன். முழுவதும் உள்ளது.

## R.8607
## அரிபர இணைமணிமாலை
## ARIPARA INAIMANIMALAI

Pages 130-161; Lines, 28 on a page
Extent, 575 granthas

**COMPLETE**

All these 172 songs are for the glory of Vishnu templed at vadarinath (Badrinath). Glorified by N. Kanagaraja Iyer. Inaimani Malai is a literary type.

தொடக்கம்

காப்பு

'அரியாய அரனும் அருள்விளக்கும் தெய்வம்
விரிவாய் உலகில் விளங்கும் உரியார்
நிலைக்க வருளும் நிலையிற்றேன் றோதி
விலைக்கும் கொடுப்பாம் விடை

## பிரபந்தம்

நாரா யணனாய் நரனாய் வதரியிலே
நேராய் நிமிரும் நிமலனை
பேராய ஒன்றென்று பற்றி உருகும் மனத்தகமே
நின்றன்று முற்றி நிலை.
முத்தி நிலைமை யளிக்க யுரியவன் முக்கணனே
பத்தி நெறியே படுக வென்றது மண்டைமறை
சத்தி சிவமென மறைமே லுறையும் தனிமையென உத்தி
தெளிந்தவர் கூறுவர் உள்ளத்தி னுள்ளனயே" (2)

**முடிவுரை**

"செப்பும் வினாவும் தெளியா மனத்துச் சிறுமையினேம்
உப்பும் பருப்பும் அரிசியும் தேடி யுழன்று நின்றேம்
அப்புன் மிகுந்த திருப்பாற் கடலில் அரவணையாய்
நைப்பும் நயப்பும் சிவமய மாக்கிய நாரருளே.

## வாழ்த்து

நாரணன் பாத நளினம் மனம் பொலிக
பூரண ஆனந்தம் போதருக - காரண
மூர்த்தி யவனருளை மூவுல மும்பெறுக
சீர்த்தி வளர்ச் சிறப்பு

ஐந்து தொழில்புரி மாதேவன் பூங்கழல் ஆட்சிவெல்க
ஐந்து முகமுள தேவாதி தேவன் அருள் மலிக
ஐந்து பொருந்தும் எழுத்துள மந்திரம் ஆள்வுறுக
ஐந்து வகைபெறு பூதமும் வாழ்க அருள்மலிந்தே"

குறிப்பு : இந்நூல் 'அரிபர இணைமணிமாலை' என்னும் பெயரினைப் பெற்றுள்ளது இதன்கண்ணே வதரியிலே (பத்ரிநாத்) நேராய் நிற்கும் நிமலனைப்பற்றிய பாடல்கள் இடம் பெற்றுள்ளன. 'செப்பும் வினாவும் தெளிவில்லா மாந்தர்க்கு வைப்பும் விளக்குமுமாம் மாயவன்' என்று அத்திருமாலின் பெருமையினை எடுத்துக்கூறி அருள்வேண்டுகின்றார் ஆசிரியர் நா. கனகராசன். வதரியின் பெருமையும் அழகும் போற்றப் பட்டுள்ளன. முழுவதும் உள்ளது மொத்தம் 172 பாடல்கள் உள்ளன.

'அம்மையே யெனக்கயிலை நாயகனே
மலைமகள்முன் அழைத்த செல்வி
இம்மையே மறுமையே மதியாத
பெருந்தவமே இயல்பா யுள்ளாள்

செம்மையே யொழுக்கமெனக் கொளும்வணிகா
குலமீன்ற தெய்வக் காட்சி
வெம்மையே யறியாத இதயத்தாள்
திருவடிமேல் வீழ்வோம் யாமே" (க)

முடிவு

'புனிதவதி சிவகதியே தவகதியே
பக்திகதி போக்கா மென்றீர்
மனிதகதி சிவத்தகமே யெடுங்குவதேன்
றளந்தருளும் வாக்கைப் பெற்றீர்

தனிதகதி யிருகயிலை வரைமுடிமேற்
சார்வரிய சார்பு பெற்றீர்
புனிதவதி மறைந்தெழுந்த பேயாரே
இறையொளியிற் புகுந்தீர் நீரே (க00)

**வாழ்த்து**

நாவே நீ வாழ்த்துவோ காரைக்காற்
புனிதவதி நாமம் தன்னை
பாவேநீ பரவுகவோ பேயுருவம்
பூண்டெழுந்த பக்தி தன்னை

தேவேநீ அம்மையென வெமக்குரை
தெய்வத்தைச் சிந்தை செய்வார்
பூவேவான் உளவளவும் வாழ்கவென
மனமுருகிப் புகனுவோமே."

**பிண்ணனியுரை** : விரோகிருதி மார்கழி உ வியாழக்கிழமை காலை 6 மணிக்கு பிரபந்தபூர்த்தி ஸ்ரீ ராமநகர் 13.172 கோட்டையூர் இராமநாதபுரம்.

**குறிப்பு** : இந்நூல் 'புனிதவதியார் திருமாலை' என்னும் பெயரினை உடையது இதன்கண், காரைக்காலம்மையாரின் பெருமை

பாடப்பட்டுள்ளது. புனிதவதி மனம் புனிதம், செயல்புனிதம், வாக்குமிகு புனிதமாகும் என்று அவரது சிறப்பியல்புகளைப் பாடலாக இந்நூலில் அமைத்துள்ளார் ஆசிரியர் நா. கனகராசன். பெருவணிகர் குலத்துத் தோன்றிய தன்மையும் மாங்கனி பற்றிய கதைகளும் இடம் பெற்றுள்ளன இயற்றியவர் நா கனகராசன் முழுவதும் உள்ளது

## R.8608

## பூம்பாவை தவச்சிறப்பு மாலை
## POOMPAVAI THAVACHIRAPPU MALAI

Pages 114-129. Lines 28 on a page
Extent : 375 granthas

**COMPLETE**

Poombavai, daughter of Sivanesan. Chettiar was stung by a snake; but Sambandar, a this spoken here at length by N. Kanagaraja Iyer in 100 stanzes.

**தொடக்கம்**

**காப்பு**

என்புருவம் பெற்ற எழில்மலியும் பூம்பாவை
அன்புருவம் பூண்டே அரணபணியில் - நன்புருவம்
தேர்ந்த திருமாலை செல்வ விநாயகன் சேரல்
ஓர்ந்தருவத் தோன்றும் உயிர்த்து

**பிரபந்தம்**

மன்னர்குலத்தே பல்லவரே வாழ்ந்து வளர்ந்த நிலத்தினிலே
தென்னர் தமிழும் வடமொழியும் சிறப்ப வெழுந்த திருமயிலை
பொன்ன மணியே செம்மணியே பூவியே வணங்கும் திருமகளே
என்ன நினைத்த சிவநேசர் இயற்று தவமே பலித்ததுவே

செட்டி குலத்துச் சிவநேசர் சிவத்துக் கன்றி தலைபணியார்
வட்டி வளரும் பொருளாளர் வாழ்வு சிறந்த பேறுள்ளார்
ஒட்டி யுறவாம் மனைவியோடு உருவம் சிவமாம் பொருளாவாய்
கட்டி கனகம் எமைதீர்க்கும் கன்னி தனையே பெற்றனரே

முடிவு

துறவு பூணும் பெரும்பேறு சுருதி முதல்வர் அருளன்றோ
உறவு பூணும் உரிமையினை உலகமனைத்தும் பெறுமன்றே
பிறவு முரைத்ததுப் பயனென்னை பிறந்தாள் இறந்தாள் பூம்பாவை
அறவு மிளத்தேன் அவலத்தால் அமலன் அருளே விளங்கின்றே (க00)
நீடு வாழ்க கவுணியர்கோன் நிரம்பி வாழ்க தேவாரம்
பீடு வாழ்க தமிழ கத்தே பிறப்பும் இறப்பும் வென்றமகன்
ஈடு மெருப்பும் இலாத்துறவின் இருக்கத் துணிந்த மறுபிறவி
ஒடு பிடித்து வாழியவே உலகம் புகழ வாழியவே"

**குறிப்பு** : இந்நூல் 'பூம்பாவை தவச்சிறப்பு மாலை' என்னும் பெயரினைக் கொண்டுள்ளது. இதனுள் சம்பந்தர், அரவுதீண்டிய பூம்பாவையை மீண்டும் உயிர்ப்பிக்கச் செய்த நிகழ்ச்சிகள் இடம்பெற்றுள்ளன. சிவநேசச் செட்டியாரின் சிவபக்தியும், சம்பந்தரின் அருள் நிலையும் போற்றப்படுகின்றன. பூம்பாவையின் தவச்சிறப்பும் போற்றப்படுகிறது. இயற்றியவர் நா. கனகராசன். முழுவதும் உள்ளது.

## R.8609
## அரிபர இணைமணிமாலை
## ARIPARA INAIMANIMALAI

**Pages 130-161. Lines, 28 on a page**
**Extent, 575 granthas**

**COMPLETE**

All these 172 songs are for the glory of Vishnu templed at vadarinath (Badrinath). Glorified by N. Kanagaraja Iyer. Inaimani Malai is a literary type.

**தொடக்கம்**

காப்பு

'அரியாய அரனும் அருள்விளக்கும் தெய்வம்
விரிவாய் உலகில் விளங்கும் உரியார்
நிலைக்க வருளும் நிலையிற்றேன் றோதி
விலைக்கும் கொடுப்பாம் விடை

## பிரபந்தம்

நாரா யணனாய் நரனாய் வதரியிலே
நேரய் நிமிரும் நிமலனை
வேராய ஒன்றென்று பற்றி உருகும் மனத்தகமே
நின்றன்று முற்றி நிலை.
முத்தி நிலைமை யளிக்க யுரியவன் முக்கணனே
பத்தி நெறியே படடுக வென்றது மண்டைமறை
சத்தி சிவமென மறைமே லுறையும் தனிமையென உத்தி
தெளிந்தவர் கூறுவர் உள்ளத்தி னுள்ளனயே" (2)

**முடிவுரை**

"செப்பும் வினாவும் தெளியா மனத்துச் சிறுமையினேம்
உப்பும் பருப்பும் அரிசியும் தேடி யுழன்று நின்றேம்
அப்புன் மிகுந்த திருப்பாற் கடலில் அரவணையாய்
நைப்பும் நயப்பும் சிவமய மாக்கிய நாரருளே.

## வாழ்த்து

நாரணன் பாத நளினம் மனம் பொலிக
பூரண ஆனந்தம் போதருக - காரண
மூர்த்தி யவனருளை மூவுல மும்பெறுக
சீர்த்தி வளர்ச் சிறப்பு

ஐந்து தொழில்புரி மாதேவன் பூங்கழல் ஆட்சிவெல்க
ஐந்து முகமுள தேவாதி தேவன் அருள் மலிக
ஐந்து பொருந்தும் எழுத்துள மந்திரம் ஆள்வுறுக
ஐந்து வகைபெறு பூதமும் வாழ்க அருள்மலிந்தே"

குறிப்பு : இந்நூல் 'அரிபர இணைமணிமாலை' என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இதன்கண்ணே வதரியிலே (பத்ரிநாத்) நேராய் நிற்கும் நிமலனைப்பற்றிய பாடல்கள் இடம் பெற்றுள்ளன. 'செப்பும் வினாவும் தெளிகில்லா மாந்தர்க்கு வைப்பும் விளக்குமுமாம் மாயவன்' என்று அத்திருமாலின் பெருமையினை எடுத்துக்கூறி அருள்வேண்டுகின்றார் ஆசிரியர் நா. கனகராசன். வதரியின் பெருமையும் அழகும் போற்றப் பட்டுள்ளன. முழுவதும் உள்ளது. மொத்தம் 172 பாடல்கள் உள்ளன.

# R.8610

# மும்மூர்த்தி மும்மணிக்கோவை

# MUMMURTTHY MUMMANIKKOVAI

Pages 162-173, Lines 32 on a Page
Extent, 200 granthas

**COMPLETE**

30 Stanzas here have formed a literary genre known as Mummani K Kovai. This is on the three celebrated gods namely Vishnu Siva and Brahma.

**தொடக்கம்**

**காப்பு**

**விநாயகன்**

'மும்மூர்த்தி யேற்றருள மும்மணி மாலை சொல
அம்மூர்த்தி மும்மை அருள்புரிக - செம்மூர்த்தி
பெற்ற விநாயகன் பிள்ளை யருள்புரிக
நற்றமிழின் நாக்கு நயந்து.
இசைமகளே நாமகளே எட்டுவிழி கொண்ட
திசைமுகன் நான்முகன் தேவி - பசைமலிய
மூவரையும் போற்றுகின்ற மும்மணி மாலைக்குக்
காவவென நிற்பாய் கனிந்து

**பிரபந்தம்**

இசைமகளை நாக்கோயில் ஏத்திய தேவ
திசைமுகனே நான்முகனே சித்தம் - அசைவரீஇய
வேதத்தை யோதும் விபுதர்க்குத் தெய்வதமே
போதத்தை நல்குக போந்து.

**முடிவு**

'அருளுக கேசவ அருளுக நாரண
அருளுக நான்முக அருளுக திசைமுக
அருளுக முக்கண அருளுக உமாபதி
அருளுக கயிலையாய் அருளுக சபாபதி

எப்பெய ருரைத்தே எப்படி வேண்டிலும்
அப்பொழு தவரவர்க் கருள்வதே கருத்தாய்
வெண்மை செம்மை வியத்தகு கருமை
பெண்மை சிறப்புறப் பெற்ற விறைவி

உண்மை முன்னின் றுரைக்கக் கேட்டும்
அண்மை வாமத் தகத்தே யுரைக்க
அகமுக மலர அருளால் அறிந்தும்
பகவனே யுலகம் படைத்தாய் காத்தாய்

மிகவும் அழித்தாய் மேலும் மயக்கினை
ஆயினும் அருளினை அடியரு களைழத்தான்
தாயினும் மிகுந்த தயாவுரு வுடையாய்
ஆயிரத் திங்களும் தீயுமே விழியாய்

அணுகுவார்க் கணியை அகல்வார்க் ககலுதி
நுணுகுவார் மனத்தே நுண்பொரு ளெழுதி
நினையத் தகுந்த நிலைபே றுடையய்
புனையத் தகுந்த பொலிவு பொருந்தினை
வாழத் தகுந்த வள்ளால்
வினையைக் கழற்ற விட்டினை யிசையே" (ஙஉ)

குறிப்பு : இந்நூல் 'மும்மூர்த்தி மும்மணிமாலை' என்னும் பெயரினைக் கொண்டு இலங்குகின்றது. இதன்கண் மும் மூர்த்திகளின் பெருமையும் மூன்றுவகைப் பாக்களால் பாடபெற்றுள்ளன 'உண்டே பரம்பொருள் ஒன்றே யதுவெனக் கண்டேயுரைத்தார்' எனும் கருத்தினை ஏற்றுக் கொண்டவர் ஆசிரியர் என்றாலும் மூம்மூர்தத்திகளாக மூன்று பெயர்களையும் தொழில்களையும் உடைய கடவுள்களை ஒரே நூலில் புகழ்ந்து பாடியுள்ளார். மூவருக்கும் தனித்தனி நூல் யாக்காமல். ஒரேநூலில் பாடியுள்ளமையால் மூவரும் ஒருவரே என்னும் கருத்தை வலியுறுத்துகின்றார் இயற்றியவர் நா. கனகராசன் 30 பாடல்கள் உள்ளன முற்றுப்பெற்றுள்ளது

# R.8611

# திருவானைக்கா பஞ்சகலிங்கம் திருவருள் மாலை

## THIRUVANAIKKA PANCHAMUKALINGAM THIRUVARUL MALAI

Pages 174-179, Lines 32 on a page
Extent, 75 granthas
**COMPLETE**

Eulogises the panchamukha linga of Thiruvanaikkaval in 10 songs. N. Kanagaraja Iyer achieved this in 1972.

**தொடக்கம்**

**காப்பு**

"திருவானைக் காவகத்தே தேவி திருமுன்
உருவான வேழமுகன் உள்ளத் - தருளாலே
பார்த்திருக்கு மாதலால் பஞ்சமுக லிங்கத்தின்
சீர்த்தி சொல லாகும் சிறிது.

**பிரபந்தம்**

அமிழ்தமொடு மவியுண்ட அமரருக் கரிதாய
அருள்பொழிய அவனி மகளே
அன்னையே அகிலாண்ட நாயகி நின்கோயில்
அருகிலுள் சங்கர மடம்

தமிழ்தழையுநாடுபெறு பேறென்று வாழ்வதைச்
சான்றாக நின்று காப்பாய்
சந்திர சேகர விந்திர சரசுவதி நாமமுகா
சச்சிதா னந்த மூர்த்தி

குமிழ்புரையு நாசியுள தேவேசி நின்னருகு
கோயில் கொளு நீரிளங்கம்
குவலயப் பெறநல்கு குடந்தை மட மதனுளே
கோயிலென் றாங்கமைத்தே

தமிழ்மறையும் வடமொழியின் மறையுநன் கோங்கவே
தானுற்ற பஞ்சாங்கம்
தண்ணருளை மண்ணவரும் விண்ணவரும் முண்ணவே
தந்தருள்க தந்தருள்கவே' (க)

முடிவு

'மாடங்கள் ஒருநாளும் மாறாத வேதத்தை
பால பருவத்திலோதி
பயனுற்ற சாத்திரமு நன்கோதி ஞானமுல
படரவே துறவி யாகி

ஏடங்கை யேந்தியே பிரத்தான முட்டைக்கும்
இனியவுரை தந்த சூரவா
எவ்வுலகும் வாழ்வுபெற காட்டிய மடத்திலே
இறைமைபெறு முனிவ ருள்ளே

மாடங்கள் எழுகாஞ்சி மாமடத் ததிராமர்
மாதவர்தம் மரபில் வந்தே
மறைபோற்று நெறியேய சந்திரசேகர முனியாக
வழுத்துமகி லாண்ட வல்லி

தாடங்க மெய்தவே கண்டபின் கண்டுபணி
தாதுற்ற பஞ்ச லிங்கம்
தண்ணருளை மண்ணகமும் விண்ணகமு முள்ளவே
தந்தருள்க தந்தருள்கவே (க.)

**வாழ்த்து**

வாழிய சம்புக வீசுர ணாகிய மறைமுதல் நாயகனே
வாழிய சீரகி லாண்டமு மாங்கிவை மாமறை வாழ்வுறவே
வாழிய சந்திர சேகர இந்திரர் வாழ்த்திய ஐம்முகனே
வாழிய சக்கரர் குருவரர் மரபுறு மாதவர் யாவருமே"

**பின்னணியுரை** : நா கனகராசன் விரோதிகிருதி தைங சோமவாரம் பிரபந்தம் பூர்த்தி கனகலட்சமி, ஸ்ரீராமநகரம், கோட்டையூர் 17172

**குறிப்பு** : இந்நூல் திருவானைக்கா பஞ்சமுக லிங்கம் திருவருள் மாலை என்னும் பெயரினை உடையது. இதனுள் ஐந்து முகங்களை உடைய இலிங்கம் திருவானைக்காவில் இருப்பதுபற்றிய செய்திகளும் தேவி அகிலாண்ட நாயகியின் திருவருள் பெருமையுடன் பாடப்பட்டுள்ளன சிவனுக்கு ஐந்து முகங்கள் உண்டு என்பதை உட்பொருளாகக் கொண்டு, சிவலிங்கத்தின் பெருமையைக் கூறியுள்ளார் ஆசிரியர் இயற்றியவர் நா கனகராசன் 10, பாடல்கள் உள்ளன முற்றுப்பெற்றுள்ளது

# R. 8612

# காயத்திரி திருமாலை

# KAYATHIRI THIRUMALAI

Pages 180-186, Lines, 32 on a page
Extent 105 granthas

**COMPLETE**

These 12 stanzas, all composed in 1972 sing the fame of Gayathri devi. Singer, N. Kanagaraja Iyer.

**தொடக்கம்**

'காயகனைக் காத்தருளும் காயத் திரிபந்தீர
நாயகியைப் போற்றி நலம்பெறவே - நாயகனாய்
வேதம் விளக்கும் விநாயக மூர்த்தியின்
பாதம் தொழுவாம் பணிந்து

அநந்தமென அறிஞர்கணம் ஓதுமறை யுள்ளுறையை
அதிகாரி யணுக வுதவும்
அருமைபொலி சக்தியுள காயத்திரி மந்திரம்
ஆவதென் மூன்றெழுத் தாய்

அனந்தகுண கலியாண மூர்த்தியாம் பிரமத்தை
அனுபூதிக் குதவு மதுவே
அஃதறிந்த தனறுமுத லின்றளவு பிரமத்தின்
அரியஉப் தேச மார்க்கம்

அனந்தகண மாகவளர் அகிலத்தின் நிலவரையில்
அந்தண குலத்தி னுள்ளே
அத்தகைய காயத்ஷதிரி யுபதேச மாகவே
ஆதரித் தேற்று வருவோம்

அனந்தமுனி வாகுமது முறையென்னவோ - திரும்
அம்மந்திரத் தேவதை
ஆனந்த பூமி ஸகாயத்திரி தேவியென
அகமுருகி யேத்து வோமே. (க)

**முடிவு**

ஔவிய மிலாத மனம் வேண்டுமே· கடவுளருள்
அடையு நெறிநிலவ வேண்டும்
அதற்குரிய மார்க்கமோ முன்னோர் வகுத்தவகை
ஆரணத் துறைநீற்றலே

செவ்விய வெழுந்திடும் அரும்பெரும் பேறுதரு
திவ்விய மந்திர மென்னவே
தேய மெல்லாம் பரவு காயத்திரி மந்திரம்
சிறுபருவ முதலேதியே

பவ்விய பயத்தோடு பகழியொடு காலை யகல
படுகதிரின் மாலை யிலுமே
பண்டையர் விதித்தபடி மந்திரசப நீரதாரப்ப
பாலகணம் வாழவேண்டும்

அவ்வியலை யேனையவர் அவருக் குணர்த்துவதை
அறமென மதிக்க வேண்டும்
ஆனந்த பூமிபுர காயத்திரி தேவியென
அகமுருகி யேத்து வோமே (கஉ)

**வாழ்த்து**

காயத்திரி தேவி கருணைப் பிரவாகத்தே
ஆயத்த மாகி அடைசெல்வர் - நாயத்தான்
நல்வாழ்வு வாழ்கவென நாவாரப் போற்றுகின்றோம்
வெல்வாழ்வு புல்ல விதித்து"

**பின்னணியுரை** : கனகலட்சுமி. ஸ்ரீராமநகர். கோட்டையூர் 18.12.92 நா. கனகராசன். விரோதிகிருது. தை. செவ்வாய், ஸ்ரீராம நகர். ஸ்ரீபந்த பூர்த்தி.

**குறிப்பு** : "காயத்திரி திருமாலை" என்னும் பெயரினை உடையது. இதன்கண், காயத்திரி தேவியின் கருணைச் சிறப்பும், மந்திரத்தின் பெருமையும் கூறப்படுகின்றது. 'ஈகையால் ஒப்புயர்வால் இருக்குமுதலாய மறை எம்மனோர்க் ` கீந்தபொருளுள் இணையற்றதொன்றாகும். காயத்திரி மந்திரம் இதயமுற வேற்று மகிழ்வோம்'. என்று அம் மந்திரத்தின் பெருமையை விரிவாகப் பாடியுள்ளார் ஆசிரியர். இயற்றியவர் நா. கனகராசன். முற்றுப் பெற்றுள்ளது. 12 பாடல்கள் உள்ளன.

## R. 8613

# யூகி முனிவர் முதற் காண்டம்

Paper : 34 c.m. x 25 c.m., Pages 1 - 230, Lines 34 on a page.
Tamil : Old, Verymuch injured.
Extent : 4000 granthas
**COMPLETE**

1001 stanzas are available here. All speak about medical practices associated to Yugi, a sage.

**தொடக்கம்**

"சிவன்தானும் வடமொழியில் மொழிந்த மார்க்கம்
சிறப்பாக இரண்டு லட்சம் கிரந்தங்கள்.
கவன்தானும் அஞ்சாம் வேதத்தில் சொன்ன
கருணைபெற உமையவளும் தமிழில் செய்து
ப்வன்தானும் நந்திக்குச் சொன்ன போது
பார்த்தவரும் நந்திதன் மந்திரிக்குச் சொன்னார்.
தவன்தானும் தன்மந்திரி அஸ்வனிக்குச் சொல்ல
தகைபெறவே அஸ்வனியும் விசுவனிக்குச் சொன்னான் (1)
சொன்னதொரு விசுவனியும் அகத்தியமா முனிக்குச் சொல்ல
சொற்பெரிய அகத்தியரும் புலத்தியருக் குச்சொல்ல
கன்னதொரு புலத்தியரும் தேரருக்குச் சொல்ல
கருணைபெற தேரருமே யூகிக்குச் சொல்
வன்னதொரு யூகிமுனி பார்த்து வாதம்
வைத்தியமும் கைமுறையும் கண்டு தேறி
பன்னதொரு வுலகத்தோர் பிழைக்க யென்று
பதிவாக இன்நூலை வுரைசெய் தேனே". (2)

**முடிவு**

"தெளிந்திட்ட மகாராஜா யோகம் பெற்று
தொல்லுலகில் ரசவாதம் செய்து கொண்டு
வளிந்திட்ட ஞானங்கள் மிகவும் பார்த்து
வடிவான வைத்தியமும் முனையாய் பார்த்து
கனிந்திட்ட களிகூர்ந்து யெண்ணைப் போலே
காரியமா யிருந்துமே வாசியேநீ
சுளிந்திட்டு நல்லவனா யிருக்கச் சொன்னேன்
சுருதியைநீ ஆராய்ந்து வாழ்வீர் கானே". (1001)

**பின்னணியுரை** : யூகிமா முனிவர் முதற்காண்டம் முற்றிற்று

**குறிப்பு** : இந்நூல், 'யூகி முனிவர். முதற்காண்டம்' என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இதன்கண்ணே, வைத்தியமுறைகளைப் பற்றிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன. புடம் போல், பஸ்பம் செய்தல் போன்றவை பற்றிய செய்திகளும் விரிவாகப் பாடப்பட்டுள்ளன. சிவன் வடமொழியில் கூறிய இவ்வைத்திய முறைகள் வாய்மொழியால் பலரிடம் பரவி இறுதியில் யூகி முனிவருக்குக் கூறப்பட்டதாக முதற்பாடல் அறிவிக்கின்றது இந்நூலைத் தான் யார்யாருக்காகச் செய்தேன் என்பதைப் பற்றியும். யார்யார் படிக்கக்கூடாது என்பதுபற்றியும் பட்டியல் தருகின்ற பாடல்களும் இடம்பெற்றுள்ளன. வெள்ளிவித்ன போன்ற செய்திகளும் விரிவாக இடம்பெற்றுள்ளன. முழுவதும் உள்ளது. இயற்றியவர் யூகி முனிவர் மொத்தம் 1001 பாடல்கள் உள்ளன. முற்றுப் பெற்றுள்ளது

## R. 8614

## POTHIGAI MUNIVAR ARULICHEYTHA MEGA RAJANGA ENNAI

Paper : 28.5 x 22.5 cm., Pages 1 - 20, Lines 24 on a page.
Tamil : Old. Injured
Extent 225 granthas.

**COMPLETE**

Ascribing to Pothigai sage this medical treatise describes the preparation of one Mega Rajanga Oil. Hundred couplets flow for this oil.

தொடக்கம்

"மூவுலகும் தாள்பணியு மூலக் கணபதியின்
சேவடிகள் போற்றிச் செய்து சேவித்து - மூவுலகுந்
தானாய் வயங்கியிடுங் சாவித்திரியடிகள்
தேனார் மலர்தூவிச் சிந்தித்துத் - தேனருங்
கற்பத்தி னீழல்பெற காமுறுநல் லிந்திரற்கு
வெற்பகத்தை வென்றீந்த வேலவர்தாள் - முற்பணிந்து
வாலை புவனையொடு வாழும் திரிபுரையைக்
காலை பகலந்திக் காலத்தில் - மாலைகொடு
தோத்தரித்து யாண்பணிந்து சொற்கெட்டா வேதாந்தப்
பாத்திரஞ்சேர் சின்மயத்தைப் பாவித்தும் - சாத்திரமாம்
பொதிகை குறுமுனிவர் போதித்த நான்முறையை
மதிநூல் வைத்தியருக்கு வாய்ப்பச்" -

முடிவு

வடிவுங் கனகமதாம் வையத் தோர்க்கெல்லாம்
படியிலிந்த யெண்ணெய்தனைப் பண்ணும் வடிவ
வைத்தியர்க்கு நல்ல வரிசைபல பூஷணமுஞ்
சைத்தியவுப காரமெலாந் தந்து - கைத்திறமாய்ப்
பாகமோ நாவிலொன்று பட்சமுடி னீந்து
மாக - மகிழப் பொருளீந்து - சோகமறப்
பாகப் பணிவிடைகள் பண்ணியறுச் கையினாலே
தோகாய்நீ எண்ணெய் கொள்ளச் சொல்லும் - வேகமாய்ச்
சொன்னபடி பத்தியத்திற் கோணா திருந்துண்டால்
மண்ணும் பலநோயு மாயுமெனப் - பன்னிப்
பாடினார் மானிடர்க்காய் பார வருள்கூர்ந்து
தேடினார் மூலியெலாஞ் சேர்த்து - நாடிப்
பணிமொழியின் மாதே பண்ணும் பொரிகை
முனிவ ருரைசெய்தார் முன்".

**பின்னணியுரை** : பொதிகை முனிவர் அருளிச்செய்த மேகராஜாங்க எண்ணெய் 100 கண்ணி முற்றும்.

**குறிப்பு** : இந்நூல், பொதிகை முனிவர் அருளிச்செய்த மேக ராஜாங்க எண்ணெய், என்னும் பெயரினை உடையது. அகத்தியர் அருளிச்செய்த வைத்திய முறைபற்றிக் கூறுவதாக நூலின் தொடக்கத்தில்

உணர்த்தப்படுகிறது. பல்வேறு வேர்களும், இலைகளும் இன்னும் சில மூலிகைகளையும் கூட்டி எண்ணெய் எடுப்பது பற்றியும் அதன் பயனாகத் தீரும் நோய் பற்றியும் இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன 100 கண்ணிகள் உள்ளன. முற்றுப் பெற்றுள்ளது. பரிபாஷை எனப்படும். குழூக்குறி போன்று கூறாமல் பல இடங்களில் வெளிப்படையாக செடிகளின் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன.

## R. 8615

## கமலமுனி இந்திர ஜாலத் திரட்டு - 500

## KAMALAMUNI INDIRAJALATHIRATTU - 500

Paper : 20.5 x 16.5 c.m., Pages 95,
Lines 32 on a page, Tamil; Old; Injured.
Extent : 2100 granthas.
**COMPLETE**

We have 500 stanzas All are for the account of medical practices and purification of metals. This medical book has been ascribed to Kamalamuni.

**தொடக்கம்**

"விரைந்துபார் மெஞ்ஞானக் கிரிகை போன்று
விளம்புகின்ற னுளமகிழ்ந்து பதிந்து நன்னாய்க் கேளு
உரைந்துபார் தசநாதத் தோடே ஒன்று ஒமென்று
வரைந்து நீயும் நீதியுடன் (108) நூத்தெட்டு
திசையே மாறி யிறைந்துபார் குமிழிபாயும்
இன்பமுற்று பீங்கானில் வாங்கி நன்கே
வாங்கியதில். மூன்றுண்டும் விட்டுக் கொண்டு
.... .. முதல்வா வெனவே நடுவைமாறி நாங்கதியாய்
....... சுழினை நோக்கி நாநீன்ற பதிநோக்கி தொன்னே
பார்த்து ஆஸ்கதிக் கொண்டறிவேறி அறிவின் நின்று
............ முதலாகக் கொண்டு பீங்கானில் இருந்ததை
நீ சிரேஷ்டம் செய்ய பேசுகிறேன் நீயறிவாய்
பேசக் கேளடா முக்காலும் பேசப் பேச
கே................ பேச்சாலமோ"

**முடிவு**

"சாற்றிடா - யென்று சொன்ன - இந்திரனே - நீருஞ்
சங்கற்ப - விகற்பமறச் - சொல்லக் கேளு

கோத்திரமே மூலவர்கங் காலாங்கிபிள்ளை.
குறுமுனிதன் பொதிகைவுச்சி - வதையின். மீது
நாற்றிசையுந் திக்கெட்டுங் கைக்குள் ளாக
நாலெட்டு முப்பத்து ரெண்டு ரெட்டி
சேற்றிரமா இருபத்தி யேழில் சித்தும்
சித்தாதி சித்தர்மெய்க்க யிருந்தான் கேளே (502)
கேளுநீ யிந்திரனே அம்புலியின் - கதிரோன்
கீழ்முகத்தோ டாதிமுத லெட்டுங் கொண்டு
நாளுநீ நானெனவே மண்ணும் விண்ணும்
நகரபதி பூபதியும் பாதா ளத்தோடு
யேழுநீ நான்பாத்தா லேழை யேழை
யெதுத்தாரை யெட்டாக்கிக் கொன்று தின்பேன்
தாழுநீ தாழ்ந்தவரை வாழ்விப் பேனன்று
சங்கற்பம் பொதிகையுச்சி வரையில் தானே" (503)

**குறிப்பு** : இச்சுவடி, 'கமல முனி இந்திர ஜாலத் திரட்டு' என்னும் பெயரினை உடையது. இச்சுவடி மிகவும் பழுதடைந்துள்ளது. இதனைப் பார்த்து எடுக்கப்பட்ட படி இருக்கிறது. 'கமலமுனி' என்பவரால் அருளப் பெற்ற செய்திகளைத் தாங்கி இச்சுவடி வாழ்கிறது. வைத்தியங்களைப் பற்றியும், நோய்களைப் பற்றியும் புடம் போன்ற செய்திகளைப் பற்றியும் விரிவாக இதன்கண் கூறப்பெற்றுள்ளன. 503 பாடல்கள் உள்ளன. முழுவதும் உள்ளது.

## R. 8616

## குழிமாற்று
## KULIMARRU

Paper : Pages , 1-14, Lines 26 on a page.
Tamil : New; Good.
Extent : 100 granthas

**COMPLETE**

Restored in 1972 of the manuscript described under R. No. 8363

குறிப்பு : இந்நூல் ஆர்.எண். 8363 லிருந்து படியெடுக்கப்பட்டதாகும்.

## R. 8617
## கோள்நிலை ஆரூடம்
## KOLNILAIYARUDAM

Paper : Pages : 28, Lines 26 on a page.
Tamil : New; Good.
Extent : 275 granthas

**COMPLETE**

Restored in 1972 of the manuscript described under R.No. 8364.

குறிப்பு : இந்நூல் ஆர். 8364 ஆம் எண்ணிலுள்ள சுவடியினின்றும் படியெடுக்கப்பட்டதாகும்.

## R. 8618
## உடையவர் நியமனப்படி
## UDAIYAVAR NIYAMANAPPADI

Pages 1-42, Lines 26 on a page; Tamil and grantha : New ; Good.
Extent : 600 granthas.

**COMPLETE**

Restored in 1973 from the manuscript described under R. No. 1103

குறிப்பு : இந்நூல் டி.எண் 1103ல் இருந்து குறிப்பிடப்பட்டு இருக்கும் சுவடியினின்றும் படியெடுக்கப்பட்டதாகும்.

## R. 8619
## இடங்கை வலங்கை புராணம்
## IDANGAI VALANGAI PURANAM

Paper : Pages , 1-39, Lines 26 on a page.
Tamil : New; Good.
Extent : 600 granthas.

**COMPLETE**

Restored in 1973 from the manuscript described under D. No. 2793.

குறிப்பு : இந்நூல் டி. 2793 லிருந்து பார்த்தெழுதப்பட்டதாகும்.

## R. 8620

## பொதிகை முனிவர் அருளிச் செய்த
## மேக ராஜாங்க எண்ணெய்

Paper : Pages , 1-9, Lines 26 on a page.
Tamil : New; Good.
Extent : 125 granthas.

**COMPLETE**

Restored in 1973 form the manuscript described under R. No. 8614.

குறிப்பு : இந்நூல் ஆர்.எண். 8614 லிருந்து பார்த்தெழுதப்பட்டதாகும்.

## R. 8621

## இந்திரஜாலத் திரட்டு
## INDIRAJALATIRATTU

Paper : Pages , 1-136, Lines 26 on a page.
Tamil : New; Good.
Extent : 2100 granthas.

**COMPLETE**

Restored in 1973 - 74 from the manuscript described under R. No. 8615.

குறிப்பு: இந்நூல் ஆர்.எண். 8615 ஆம் எண்ணில் குறிப்பிடப்பட்டிருக்கும். சுவடியினின்றும் படிஎடுத்ததாகும் அதன் குறிப்பும் காண்க.

## R. 8622

## யூகி மாமுனிவர் முதற்காண்டம்

## YUKI MUNIVAR MUTHARKANDAM.

Paper : Pages , 1-339, Lines 26 on a page.
Tamil : New; Good.
Extent : 4000 granthas.

**COMPLETE**

Restored in 1973-74 from the manuscript described under R. No. 8613

குறிப்பு : இந்நூல் ஆர்.எண். 8613 எண்ணில் வந்திருக்கும். சுவடியைப் பார்த்து எழுதப்பெற்றதாகும். அதன் குறிப்பும் காண்க.

## R. 8623

## நாலு மந்திரி கதை

## NALU MANDIRI KATAI

Palm-leaf : 40 x 3 cm. Foll. 1-70
Lines 6 on a page. Tamil ; Fair.
Old; Extent; 1365 grantha$

Presented by Thiru. **N.S. Kuppuswamy,** M.A., Pollachi in 1973 - 74.

**COMPLETE ; PRINTED**

A Palmleaf evidence for the printed story namely Naalu Manthiri Kathai (Story of four ministers). These four ministers were the ministers to Madurendran, a king who latter became ministers to Alagendran, King of Alagapuri. This is in prose.

**தொடக்கம்**

அழகாபுரியென்றொரு பட்டணமுண்டு. அந்தப் பட்டணத்திலே அழகேந்திரன் என்றொரு ராசா உண்டு. அந்த ராசாவினுடைய கோட்டையெப்படியென்றால், ஒரு பனைப் பிரமாணம் கருங்கல் கோட்டை - இரும்புக் கோட்டை, செம்புக் கோட்டையும். இந்தப் படிக்கு மூன்று சுத்துக்கோட்டையும் முப்பத்திரண்டு வாசல்களுமுண்டு.

முடிவு

ராசாவானவர் போதவாதித்தன் போத சந்திரன், போத வியாகன், போதவிபூஷணன் இவர்கள் நாலுபேரையும் இராச்சிய பரிபாலஞ் செய்துகொண்டு தான் தர்மம் யீயவுயிலக்கந் தயவு தாட்சணை நீதியாய் நடத்திவிச்சுக்கொண்டு சுகமே இருங்களென்று முத்திரை மோதிரமுங்கொடுத்துச் சுகமேயிருங்களென்றார்.

**பின்னணியுரை** : அந்த நாலு மந்திரிமாருடைய ஆதரமொருத்தர் எழுதிப் படித்தவரும் யின்பமாகக் கேட்டோரும் புத்தியும் ஆண்மையுங் கல்வியும் பெறுவார்கள். அம்பாளுடைய கடாட்சத்தினாலே சுகமாயிருப்பார்கள். பின்னும் பதினாறும் பெற்றுப் பெருவாழ்வும் வாழ்ந்து வீரசொர்கங்கதிமோட்சம் பெறுவார்கள்.

நாலு மந்திரிகதை யெழுதிமுகிந்தது முற்றும்.

**குறிப்பு** : மதுராபுரி என்னும் பட்டணத்தையாண்ட மதுரேந்திரன் என்பவனின் அரண்மனையிலிருந்து அமைச்சர்கள் நால்வரின் திறமறிந்த அழகாபுரி மன்னன் அழகேந்திரன் அவர்களைத் தன்னிடத்தில் அமைச்சர்களாக அமர்த்திக்கொண்டதும் அவர்களது புத்தி நுட்பச் செயல்களும் கதை வடிவில் அமைத்து எழுதப்பட்டது இந்நூல் D424, D3740 ஆகிய சுவடிகளில் கூறப்படும் கதையேயாயினும் நடைசிறிது மாற்றமுடையது. ஆசிரியர்பெயர் முதலியன அறிய இயலவில்லை. பொள்ளாச்சியைச் சேர்ந்த திரு. என். குப்புசாமி அவர்களால் 1973-72ல் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது.

## R. 8624

## முந்திரி இலக்க எண் சுவடி

## MUNDIRI ILAKKA ENSUVADI

Palm-leaf : 38 x 2.5 cm.
Foll. 1-6; Lines 5 on a page. Tamil; Good.
New ; Extent 90 granthas

Presented by Thiru. **N.S. Kuppuswamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE ; PRINTED**

A valuable palm leaf on the knowledge of mathematics of our ancient Tamils Old mathematical symbols are available here.

**தொடக்கம்**

முந்திரி லக்கம் முறையுடன் படிக்கத்
தந்தி முகனது தாளே சரணம்
கண்ணன் மருகன் கணபதி கழல்தொழ
எண்ணிய லக்கம் எளிதாய் வருமே.

**முடிவு**

கோடி முந்திரிலக்கம் முற்றிற்று.

**பின்னணியுரை**: விரோதிஶ்ரீ. பங்குனி மீ யஉ எழுதிமுடிந்தது. வியாழக் கிழமை ந.வெ.பெ. கு.வெ. அலமேலு அம்மாள் முந்திரிலக்கம் எண் சுவடி அடக்கம்.

**குறிப்பு** : தமிழ் எண்களாக வுழக்காற்றிலிருந்த எண்களில் தொடங்கி நூறு நூறாயிரம் என்னும் எண்வரை எண் முறைகளை எழுதி கோடி முந்திரிலக்கம் முற்றும் என்று முடிக்கப் பெற்றுள்ளது. "கெட்டிஎண்சுவடி' என்ற பெரியல் இவ்வெண்கள் அச்சாகியுள்ளன அலமேலு அம்மாள் என்பவர்கள் எழுதி பயன்படுத்திய சுவடியென்று தெரிகிறது. பொள்ளாச் சியைச் சேர்ந்த திரு.என்.எஸ். குப்புசாமி அவர்களால் 1973 - 74ல் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது.

## R. 8625

## முந்திரி இலக்க எண்சுவடி

## MUNDIRI ILAKKA ENSUVADI

Palm-leaf : 37 x 2.5 cm. Foll. 1-7
Lines 5 on a page. Tamil ; Fair.
Old ; Extent 90 granthas

Presented by Thiru. **N.S. Kuppuswamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE ; PRINTED**

Furnishes old Tamil symbols for numerals and other mathematical tables.

**தொடக்கம்**

ந.ச.வெ.சி. பழனிசாமி என்பவர் எழுதிப் பயன்படுத்தியதாக அறியவரும் இச்சுவடி ஆர். 8624 ஆம் எண்ணில் உள்ள சுவடிபோன்றதே. இச்சுவடியில் இறுதி நூறு நூறாயிரம்'என்பது என்ற எண்ணால் தவறின்றி குறிக்கப்பட்டுள்ளது. பிறமுன்' சுவடியினும் மாற்றமேதுமில்லை. திரு. என். எஸ். குப்புசாமி, பொள்ளாச்சி அவர்களால் 1973 - 74ல் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது.

## R. 8626 & 8627 (One Bundle)

Palm-leaf : 40.5 x 2.5 cm. Foll. 1-64 Lines 5 on a page. Tamil; Fair. Old ; Extent 1200 granthas.

Presented by Thiru. **N.S. Kuppuswamy,** M.A., Pollachi, in 1973 - 74.

## R. 8626
## சித்திரபுத்திரன் கதை
## CHITTIRAPUTTIRAN KATHAI

Foll 1-45; Extent 850 granthas

**COMPLETE; PRINTED**

A story of Chitra Putran. Herein is explained the 'importance' of the Puja of Chitraputra. Slightly differs from that of the printed story

**தொடக்கம்**

சித்திரனார் புத்திரனார் சிவனார் பெருங்கணக்கன் உத்தமர் பதிவேந்தன் உலகுக் கதிபதியான் நன்மை பெரிதாக நம்மனார் பெறுங்கணக்கன் நாட்டுக் கணக்கன் நமனார் பெருங்கணக்கன் அஸ்தகிரி நாட்டுக்கு அரணார் கணக்கெழுதி முத்திக்கு நாட்டுக்கு முயன்று கணக்கெழுதும் ஈரே ழுலோகம் எழுதிவரும் கணக்கன்.

முடிவு

ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரூன்றி மூங்கில்போல் சுற்ற முசியாமல் வாழியதே ஆழி மிகவாழி அம்பலவர் தான்வாழி வாழி மிகவாழி அம்பலவர் தாள் வாழி தேவேந்திரனும் செங்கோலு கான் வாழி மாலு மயனு. மறையோர்கள் கான்வாழி.

சித்திரபுத்திரன் கதை எழுதி முடிந்தது.

முற்றிற்று.

**குறிப்பு** - குழந்தைப் பேறு குறித்துத் தவம் செய்கிறான் இந்திரன். பரமன் கண்டு வள்ளுவனை அழைத்து - காராம்பசுவின் வழி இந்திரனுக்கு மகவாகப் பிறக்குமாறு பணிக்கிறான். பெற்ற மகனைப் பாராட்டி வளர்க்கிறாள் இந்திராணி. சித்திரபுத்திரன் என்று பெயர் அணிவிக்கிறார்கள். எமதர்மனிடம் கணக்கு எழுதும் பணியில் சிறக்கிறான் சித்திரபுத்திரன். சிறந்த தருமம் செய்துவருபவள் அமராவதி. அவளைப் பிடித்துத் துன்புறுத்துகின்றனர் எமதூதுவர்கள். சித்திர புத்திர பூசை செய்யாமையைக் காரணம் காட்டுகின்றனர். சித்திரா பரணியில் உரிய பூசை நடத்துமாறு பணிக்கிறார்கள். எல்லாத் தருமங்களினும் அப்பூசையே சிறப்புடையதாகக் கற்பிக்கிறார்கள். அமராவதி பெற்ற அறிவுரை அனைவரும் பெறுமாறு அமைகிறது.

திரு. என்.எஸ். குப்புசாமி அவர்கள் அன்பளிப்பாக அளித்த இந்நூல் அச்சுநூலினும் சிறிது மாறுபட்டு நடைமுழுமையும் வேறாக அமைந்துள்ளது.

## R. 8627
## மூவரம்மானை
## MUVARAMMANAI

Foll. 46 - 64 Extent 350 granthas.
Begins on Foll. 46 of the Ms. described under No. R. 8626.

**INCOMPLETE, PRINTED**

A typical ammanai in the metre Kaliththazhisai. This sings the glory of Siva, Parvathi, Vishnu etc. Gods.

இந்நூல். 'அம்மானை' என்னும் பாட்டு வடிவம் பெற்றது. கலித்தாழிசை களாலானது. சிவன் உமை. திருமால் போன்றோர் சிறப்பியல்புகளைக் கூறுவது. பாக்கள் பலநூல்களினின்றும் தேர்ந்து தொகுக்கப்பெற்றவை என்பது புலனாகிறது.

"மூவரம்மானை' என்னும் நூல் நூறு பாடல்களோடு வெளியிடப் பெற்றுள்ளது. இச்சுவடியுள் 85 பாடல்களே உள்ளன. டி 1811. 1812 ஆகிய எண்களில் உள்ள சுவடிகளும் இச்சுவடி போன்றவையே. 1973-74ல் பொள்ளாச்சி. திரு என்.எஸ். குப்புசாமி. எம்.ஏ. அவர்களால் அன்பளிப் பாகக் கொடுக்கப்பட்டது.

## R. 8628
## இரணகள வீரம்
## ERANAKALA VEERAM

Palm Leaf : 26.5 x 2.5 c.m. foll. 1-14
Lines 4 on a page. Tamil; Good; New
Exten ; 85 granthas
Purchased from Thiru. **N. S. Kuppuswamy,** M.A., Pollachi, in 1973-74.

An interesting genre; In a battle held in early 19th Century, wins hero of this treatise nemaly Kuppazhappatcha. Running in verse form, this speaks about the greatness of Vishnu.

**தொடக்கம்**

தென்பாங்கதிரித் திருமலைக்குப்பழன் மேல்
அன்பாய் ரணகள வீரம்பாட - மின்பாயும்
மெய்த்திகிரி கைக்குடையான் மிக்கதிகிரிக்குடையான்
கைத்திகிரி யச்சுதனே காப்பு.

இவை நூற்றியெட்டுத் திருப்பதி போன்று விருப்பாட்சி பாளையப்பட்டு - குப்பழப்பாச்சா அவர்கள் பேரில் ரண விசையம் என்னும் பிரபந்தம்

பூமேவும் வல்லிப் புயத்தோன் செயத்துடையோன்
மாமேவும் விற்குடி மகாமுனிவன் - றாமேவு
மல்லனைய கோதைவிருந் தாதேவிக் காசைகொண்டு

குல்லையென மார்பிலணி கோவிந்தன் - யெல்லவனோர்
தஞ்சக்க ராயுதத்தாற் றாவழத்தை யேபுரந்து
வஞ்சக்க ராவின்மணி வாயிடந்தோன் - விஞ்சையர்மால்.

**குறிப்பு** :- சாலிவாகன சகாப்தம் 1738 - செயவருடம், வைகாசித்திங்கள் 27ல் நால்வகைப் படையுடன் சென்று பகைவரை முறியடித்ததாகக் கூறப்பெறும் இந்நூலின் பாட்டுடைத் தலைவன், திருமலைக்குப்பழச் சின்னேந்திரமால் என்பதாகக் கூறப்படுகிறது. திருமாலை வணங்கும் அடியவன் என்பதை விளக்குமாற்றால் திருமாலின் சிறப்புக்கள் கூறப்படும்பகுதி நன்றாக இருக்கிறது. பாட்டுடைத் தலைவனது குலச்சிறப்பும் பிற சிறப்புக்களும் கூறி அவனது வீரமும் போற்றப்படுகிறது. கட்டளைக் கலித்துறை போன்ற கண்ணிகளால் அமைந்துள்ளது. நடை நன்றாக இருக்கிறது. அச்சானதாகத் தெரியவில்லை. பொள்ளாச்சி, திரு. என்.எஸ். குப்புசாமி அவர்களிடமிருந்து விலைக்கு வாங்கப்பட்டது.

## R. 8629

## சைவ புராணம் திருமலைச் சருக்கம்

## SAIVA PURANAM - THIRUMALAI-CARUKKAM

Palm leaf - 38 x 3 c.m. Foll. 29 (33 - 61)
Lines 8 on a page. Tamil; Fair
Extent 900 granthes

Presented by Thiru **N.S. Kuppusamy,** M.A., Pollachi in 1973 - 74.

**INCOMPLETE**

A portion of Siva Purana ; goes in both verse and prose medium.style of the verses is charming

### தொடக்கம்

பேறாகிய முத்தி கிடைக்கிறது அரிதோ
வென்று சொன்னார் நந்திகேசுவரர் என்றவாறு (ரு)
... லம் கன்றியே யெமக்குமுன் டதிகஞ்
சோகமோகங்கள் தவிர்பல னோருபரஞ் சுடரா
மாகமுட்டுற வளர்ந்தது மாலயற் காகப்
யோகலிங்கமொன் றானது மொருவகை புகல்வேன்

(எ-து) ஆகையினாலே மார்க்கண்ட மாமுனியே கேழ்க்கப்பட்ட உம்மைப் பார்க்கிலும் சொல்லப்பட்ட வெமக்கு மதிகபலனுண்டு அதினாலே சொல்லக்கேளும். சோக மோகமுந்தவிர்க்கப்பட்ட சிவ னொரு பரஞ்சுடரா யக்கினி சுரூப மலையா யாகாச மூடுருவி மாலாகிய மகாவிஷ்ட் டுணுவுக்கு மயனாகிய பிரம்மாவுக்குமாக வளர்ந்ததும் பின்பு யோகலிங்கமுமாய்த் தன்மார்த்த காம மோட்சங்களைக் கொடுக்கத்தக்க கர்த்தா வானது மொருபடியறிந்த மாத்திரஞ் சொல்லுகிறோமென்று நந்திகேசுபரர் சொல்லுகிறா ரென்றவாறு (ச)

## முடிவு

அரியயனு மளவிடுதற் கரியமலை நிலையுரைக்க வரிதென் றாலுந்
........................ சிறிதுரைத்தே னினியுரைக்குந் திறமே தென்றான்
வரிசைபெறு மார்க்கண்ட முனிமகிழ்ந்து பணி............
யுரியசிவ னுடன் கலந்த கதையுமுரைத் தருளுமென
உரைப்பதானான்

(எ.து) **நந்திகேசுபரர்** ........................
பார்வதா தேவியம்மன் மலையரசனிடத்திலே பிறந்ததும் பரமேசுவரர் திருமணஞ் செய்துகொண்டது மடியேனுக்குக் கிருபையாய்த் திருவுளஞ் செய்தருள........ படியே நந்தி கேசுவார் அனுக்கிரகங் செய்தாரென்றவாறு. ( அ அ )
திருமலைச் சருக்கம் - திருவிருத்தம்.

தன்மார்த்த காம மோட்சங்களைக் கொடுக்கத் தக்கவன் இறைவன், அவனுடைய செய்தியைச் சொல்லுகிறேன் என்று தொடங்குகிறார் நந்திகேசுவரர். சர்வ சங்காரகாலம், பஞ்சபூதங்கள் முதலான யாவும் அடங்கத் தானே தானாய் நின்றனன் பரசிவன், அவன் நினைக்க - பராசக்தி முதலாக உயிர்கள் பலவும் தோன்றின என்பன போன்ற செய்திகளைப் பலபட விரித்துரைக்கின்றார் நந்திகேசுவரர். இவ்வாறு சைவ சமயச் செய்திகளைக் கூறும் இச்சுவடி - மூன்றாம் பாடலின் இறுதியடியையுடைய 33ஆம் ஏடு தொடங்கி 61ஆம் ஏடுமுடிய காணப்படுகிறது. திருவாளர் என்.எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களிடமிருந்து 1973-74ல் அன்பளிப்பாகப் பெறப்பட்டது. பாட்டு நடையும் உரையும் நன்றாக இருப்பது ஆய்விற்குரிய ஒன்று.

## R. 8630

# புத்தூர் குமரேச சதகம்

# PUTTUR KUMARESA SATAKAM

Palm-leaf : 37.5 x 3. c.m. Foll. 71
Lines 4 on a page. Tamil; Fair
Extent 900 granthas.

Presented by Thiru. **N.S. Kuppuswamy**, M.A., Pollachi, in 1973 - 74.

**INCOMPLETE. PRINTED**

Satakam means 100 stanzas; 100 songs are here for Muruga. Regarding the songs, they are same as that of Kumaresa Satakam, the famous one. Only the change in the line of each stanza has been made to worship Puttur Murugan.

**தொடக்கம்**

மறையோர்களாலே சிறந்திடு முலகத்தில்
மானிடர்கள் தெய்வ மவர்காண்
மயிலேறி விளையாடு குகனேபுத் தூரில்திரு
மலைமேவு குமரேசனே (உ)
குடிபடை லபிமான மந்திரி அலோசினை
குறிப்பறிதல் சத்திய வசனம்
குடைநீத மவரவர்க் கேத்தமரி யாரிபொறை
கொடாதமனுன சதுருபாயம்
படிதனை விசாரணை பிரதானி தளகர்த்தனும்
பணம்பரிந் தேஅமைத்தல்
பல்லுயிரெல்லாந் தன்னுயிர்க்கு நிகரென்று
பரித்தகுத் தங்களைநல்
துடிபெறு தனக்கொரு யான நறபகமின்மை
சுகாதமொடு கல்வியறிவு
தோராத காலமிட மறிதல் வினைவலிகண்டு
துஷ்ட்டநிக் கிரகசவுரியம்
வடிவுபெருங் செங்கோல் நடத்திவரு மரசற்கு
வழுவாத முறைமை யிதுகாண்

மயிலேறி விளையாடு குகனேபுத் தூரில்திரு
மலைமேவு குமரேசனே (௱)

முடிவு

வன்னமயி லேறிவரும் வேலாயுதக் கடவுள்
திருமலைமே லுகந்த குமரன்
வள்ளிக் கொடிக்குமுன் வேங்கைமர மாகினோன்
வானவர்கள் சிறைதவிர்த்தோன்
கன்னல்மொழி திசதரா சாமையன் தாயமமன அரன்மகன்
கங்கைபெற் றருள்புத்திரன்
கணபதிக் கிளையதொரு மெஞ்ஞான தேசிகன்
கடவுள்குன் றாக்குடியினான்
பன்னரிய புத்தூரில் வாலை கவுசலை சுந்தரிதிருமலை
பகவரஞ் செயலினாலே
பத்தனரிணாம யுரைத்தமிழ் ஆசிரிய விருத்தமாய்ப்
பகர்சதக நூறுகவியும்
நன்னயம தாகவே படித்தபேர்களெப்பொருளுங்
கற்றயோர்கள் ராசயோகம் பெறுவார்
பதவிநாலும் பெறுவர் நவில முத்தியும் பெறுவ்ரே.
ஓம் அரகரா திருமலை பகவான் துணை
கவுசலையம்பாள் துணை.
சுந்தரவல்லியம்மன் துணை.

குறிப்பு :

"மயிலேறி விளையாடுங் குகனேபுத் தூரில்திரு
மலைமேவு குமரேசனே"

- என்னும் மகுட அடிகளையுடைத்தாய் நூறு பாடல்களைக் கொண்டது இந்நூல். எனவே 'புத்தூர் குமரேச சதகம்' என்னும் பெயர் கொடுக்கப்பட்டது.

"புல்வயல் நீடு மலைமேவு குமரேசனே' - என்னும்

ஈற்றடிகளை உடையது ஒரு சதகம் முருகன்மீது பாடப்பட்டதே.

திருப்புல்வயலில் உறையும் முருகன்மீது பாடப்பட்டது. குமரேச சதகம் என்றே பெயர்பெற்றது. அச்சாகியுள்ளது. அதனின் வேறுபாடு தோன்ற புத்தூர் என்ற அடை கொடுக்கப்பட்டது. என்றாலும் இந்நூலிலுள்ளவை அனைத்தும் குமரேச சதகப் பாடல்களே. சிற்சில சொற்கள் மாற்றம் பெற்றிருக்கின்றன. 'புல்வயல்' என்ற சொல்லுக்குப் பதிலாகப் 'புத்தூரில்' என்ற சொல் அமைக்கப்பட்டுள்ளது.

சுவடியின் முதல் ஏடு இல்லை. இரண்டாம் பாடலின் இறுதியடி முதலாக இறுதிப்பாடல் முடிய இருக்கின்றன. ஏடு 44- எண்விடப்பட்டிருக்கிறது. ஏடுகள் குறைவில்லை.

1973-74 ஆம் ஆண்டில் திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., பொள்ளாச்சி அவர்களால் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது.

## R. 8631
## பதினோராவது நிகண்டு
## PATHINORAVADU NIKANDU

Palm-leaf - 40.5 x 3. c.m.
Foll. 85 (1 - 83 + 2)
Lines 4-6 on a page.
Tamil; Fair. Extent 1600 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi in 1973 - 74.

**INCOMPLETE; PRINTED**

This is only the 11th Chapter of the famous Sudamani Nighantu. Sudamani Nighantu is already available in print.

'சூடாமணி நிகண்டு' என்னும் நிகண்டு நூலின் ஒரு பகுதியாகிய - பதினோராவது பகுதி - 'ஒருசொற் பல்பொருட் பெயர்த் தொகுதி' அடங்கியது இச்சுவடி. 'முடிவிலின் பத்து மூவாமுதல்வனை' என்னும் பாடலே தொடக்கத்தில் உள்ளது. 'க'கர எதுகை முதல் தொடங்குகிறது. 'ய' கர எதுகை முடிய மட்டுமே இருக்கிறது. 'ய' கர எதுகையின் எட்டாவது பாடல் மீண்டும் எழுதப்பட்ட ஒரு ஏடு இறுதியில் குறையாக இருக்கிறது. எல்லாப் பாடல்களும் பதவுரையோடு எழுதப்பட்டுள்ளன. அச்சு நூலினும் வேறுபாடு ஏதும் காணப்பெறவில்லை. இச்சுவடி

1973-74ல் பொள்ளாச்சி திரு. என்.எஸ. குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அன்பளிப்பாக நூலகத்திற்கு வழங்கப்பெற்றது.

## R. 8632

# கந்தபுராணம்

# KANDA PURANAM

Palm - leaf : 40 x 2.5 c.m.
Foll. 222. Lines 6 on a page. Tamil. Fair.
Extent 6000 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE**

Available here are 219 songs; All on the life and times of Lord Muruga.

**தொடக்கம்**

சீர்புனை கயிலை மேவுஞ் சிவன்றிரு மதலை யான
போரினால் வலிய கந்த புராணத்தின் பொருளை யெல்லாந்
தாரணி யுலகோர் முன்னந் தமிழினாற் கரையைக் கூற
வாரணி முகத்தி னான்றன் மலர்ப்பதந் துணைய தாமே (க)
அத்தனார் மகனார் கந்த புராணத்தின் பொருளை யெல்லா
நத்தமி ழறிவல் லோர்முன் நவின்றினேன் கதைய தாகப்
பித்தர்கள் மொழியுங் காலைப் பணங்குமா றுளரோ மும்மால்
அலத்திமுன் முயற்போர் செய்யு மதுவொக்கு மென்சொல் தானே (உ)

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரைத் தாளினான்
அகட சக்கர விண்மணி யாவுரை
விகட சக்கர மெய்ப்பதம் போற்றுவோம் (சு)

**முடிவு**

இந்த கந்தபுராண காவியத்தை எழுதிவைத்த பேர்களும் படித்த பேர்களும், படிக்கச்சொல்லிப் பிரகாசம் பண்ணிய பெரியோர்கள், இன்னம் சொல்லச் சொல்லுமென்று காதினாலே கேட்டபேர்கள், இந்த

புராணத்தை நினைத்தபேரும் என்ன வரங்களைப் பெறுவார்களென்றால் அஷ்டாசுபரியமும் உண்டாகி முன்செய்த பாவங்களுந் துலைந்து மூவேழிருபத்தொரு தலைமுறைக்கும் கதி மோட்ச முண்டாகிப் பிறப்பு இறப்புமில்லாமல் கயிலாச பதவியிலே சேர்ந்து சுப்பிரமணியரைப் போலவும் வள்ளியம்மன, தெய்வானையைப் போலவும் எப்போதும் வச்சிர தேகத்துடனே தேவேந்திர பதவியாய் மார்கண்டேனாயபததாய யென்றென்றைக்கும் கயிலாசபதி காணியாயிருப்பார் . களென்றவாறு.

சிவமயம்.

**பின்னணியுரை** : சார்வரி வருஷம் கார்த்திகை மீ 2 தீ நல்லிக் கவுண்டம்வலசு சீரங்க செட்டியார் மகன் அருணாசலஞ்செட்டி யாருடைய கந்தபுராணம் எழுதி முடிந்தது.

**குறிப்பு** : கந்தபுராணம் என்னும் பெயரையுடையது இச்சுவடி. அச்சு நூல்களில் காணப்படாத சிலபாடல்கள் கடவுள் வணக்கப் பாடல்களாக இருக்கின்றன. அச்சு நூல்களில் உள்ள முதல்பாடல் 'திகடச் சக்கரம்' என்று தொடங்கும் பாடல். அப்பாடல். இச்சுவடியுள் ஆறாவது பாடலாக உள்ளது. "தாமரை நாயகன்" என்னும் அச்சு நூலிலுள்ள தொடர், இச்சுவடியுள் "தாமரைத் தாளினான்" என்று காணப்படுகிறது. 99, 141 ஆகிய இரண்டு ஏடுகளும் இரண்டு முறை எழுதப்பட்டு அதே எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அவையும் வெவ்வேறு கையெழுத்தாலானவை. தக்கயாகப் பகுதி, வீரவாகுவாதை, சூரபன்மன்வதை போன்ற சில பகுதிகள் எழுதப்பட்டுள்ளன. 219 பாடல்கள் காணப்படுகின்றன. ஒவ்வொரு பாடலுக்குப் பிறகும் நீண்டபொழிப்பு கதையாக எழுதப்பட்டுள்ளது. கச்சியப்பர் கந்தபுராணப் பாடல்களினும் வேறானவை இப்பாடல்கள். நடைநன்றாக இருக்கிறது. 1973-74 பொள்ளாச்சி திரு. என்.எஸ். குப்புசாமி அவர்களால் அன்பளிப்பாக அளிக்கப்பட்டது.

## R. 8633 & 8634 (One bundle)

Palm-leaf : 20.55 x 3.5 c.m. Foll. 1 - 174.
Lines 10 on a page. Tamil. Fair. old.
Extent 4250 granthas

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

## R. 8633

## சூளாமணி நிகண்டு

## CHOOLAMANI NIGANDU

Foll. 1 - 170 Extent. 4200 granthas

**INCOMPLETE; PRINTED**

A Tamil dictionary in verse form, called Sulamani Nighantu.

'சூளாமணி நிகண்டு' என்னும் பெயர் கொடுக்கப்பட்டுள்ள சுவடியாகும் இது முதலாவது தெய்வப் பெயர்த்தொகுதி தொடங்கி, பதினோராவது, ஒரு சொற்பல பெயர்த்தொகுதியுள் மகர எதுகை ஈறாக உள்ளது. அச்சு நூலினும் சிற்சில விடத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. முதலில் நான்கு ஏடுகளும் இறுதியில் ஏழு ஏடுகளும் பொருளடக்கமாக பெயர் வரிசைகளும் அவற்றிற்காம் பாட்டு எண்களும் கொடுக்கப்பட்டுள்ளன. பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அன்பளிப்பாக வழங்கப்பட்டுள்ளது.

## R. 8634

## திருவிளையாடற் புராணம்

## THIRU VILAIYADAR PURANAM

Foil. 171 - 174. Extent 50 granthas.
Begins on Foll. 171 of the Ms. discribed under No. R. 8633.

Recounts several anecdotes in the life Siva. Runs in verse medium.

குறிப்பு : முதல் ஏட்டில் பரஞ்சோதி நயினார் பாடல் என்ற தொடர் மட்டும் காணப்படுகிறது. அடுத்த ஏட்டில் 'திருவிளையாடற்புராணம்' என்ற தலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது. மதுரைக் காண்டம் 'கடல் சுவரை வேல்விட்ட படலம்' என்னும் படலத்திலுள்ள 'அரும்பரிமகம்'. மன்னிய நாடெலாம், பொருங்கடல், வழுதியுன்றன், கனவில் வந்த, சந்தவேத வேள்வியை - என்று தொடங்கும் ஆறு பாடல்கள் மட்டுமே எழுதப்பட்டுள்ளன. இறுதியில் 'சுத்தரானந்தர் மூர்த்தி பூசைவிதி

முப்பத்தாறு' என்னும் தலைப்பில் எழுதப்பெற்ற ஒரு ஏடும், "பூரண சூத்திரம் பதினாறு" என்ற தலைப்பு மட்டும் எழுதப்பெற்ற ஒரு ஏடும் காணப்படுகின்றன.

## R. 8635

## ஞானவாசிட்ட ராமாயணம்

## NANA VASITTA RAMAYANAM

Palm - Leaf : 36.5 x 3 c.m. Foll. 288.
Lines 6-10 on a page.
Tamil. Fair. Extent 10500 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE, PRINTED**

Gnana Vasitta Ramayanam is a printed book; Our Ms. is almost the same. In this MS we have 43 stories in verse medium like Sugar story, Balan Story, Itsuvagu Story etc.

குறிப்பு : "ஞான வாசிஷ்ட ராமாயணப் பதிகம்" என்னும் பெயர்கொடுத்து எழுதப்பட்டுள்ளது இச்சுவடி. பொள்ளாச்சியைச் சேர்ந்த திரு. என். எஸ். குப்புசாமி அவர்கள் அன்பளிப்பாக வழங்கியிருக்கிறார்கள். துன்முகிஸ்ரீ மாசிமீ 7உ சண்முகஞ் செட்டி வாசிட்டராமாயணம் எழுதி முடிந்தது. நல்லிக்கவுண்டன் வலசுலிருக்கும் சண்முகஞ்செட்டி மகன் சிவபழமலை நாத சிவசிதம்பரம் செட்டியார் ஞானவாதிஷ்டம் பார்வையிட்டிருக்கிறான் என்பன போன்ற தொடர்கள் சுவடியின் இறுதியில் காணப்படுகின்றன. சுகர்கதை, பாலன் கதை, சித்தன் கதை, சுக்கிரன் கதை, கசன் கதை, சனகராசன் கதை, மாவலி கதை, பிரசலாதன் கதை, அருச்சுனன் கதை, வேதாளக் கதை, பகீரதன் கதை, இட்சுவாகு கதை, மனுவேடன் கதை போல்வனவாய நாற்பத்து மூன்று கதைகள் அடங்கியுள்ளன. அச்சாகியுள்ள நூல் போன்றதே வைராக்கியப் பிரமாணம் என்பது அச்சுநூலில் காணப்படும் முதல் பகுதியின் பெயர். அதை இராமசுவாமி வைராக்கியம் என்கிறது இச்சுவடி. கற்கடிகதை என்பது அச்சுநூலில் காணப்படுவது சூசிகதை என்பது சுவடியில் காணப்படுவது. அச்சு நூலில் உள்ள 'மனத்தின் கதை'யை 'வாலன் கதை' என்றும், 'சிரதத்திரையன் கதை' யைப்

'பூதத்திரையன் கதை' என்றும் 'மானுவேடன் கதையை' 'மிகுருவாதிகதை' என்றும் இச்சுவடி வேறுபடுத்திக் கூறுவதைக் காணலாம். ஆனால் பாடல்கள் சிறிதும் வேறுபட்டில. முறைவைப்பும் அளவுகளுங்கூட ஒரே தன்மையனவே.

## R. 8636

## பாரதம்

## BARATHAM

Palm - Leaf : 37.4 x 3 c.m. Foll. 129.
Lines 6 on a page. Tamil. Fair. Old.
Extent 2900 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE, PRINTED**

Contains some 'Sargas' in Mahabarath by Villiputturar. For some verses are found precise meaning also.

**குறிப்பு** : இச்சுவடியுள் முதல் 43 ஏடுகளில், வில்லிபுத்தூரார் பாரதம், சபா பருவத்து, சூதுபோர்ச் சருக்கம் 284 பாடல்களும் முழுமையாக உள்ளன. அச்சுநூலினும் வேறுபாடு காணப்படவில்லை. பாடல்கள் மட்டுமுள்ளன. 44 ஆம் ஏடுமுதல் 105 ஆம் ஏடுமுடிய பதின்மூன்றாம் போர்ச் சருக்கம் எழுதப்பட்டுள்ளது. அபிமன்யு இறந்ததுபற்றி தருமன் அறியும் பகுதிவரை மட்டுமே உள்ளது, 135 பாடல்கள். சுருங்கிய பொழிப்புரையும் காணப்படுகிறது.

106 முதல் 122 ஆம் ஏடு முடிய பதினேழாம் போர்ச் சருக்கம் காணப்படுகிறது. முதல் 68 பாடல்கள் மட்டுமே உள்ளன. 123, 124 வெற்றேடுகள். 125 - 129 ஏடுகளில் சூதுபோர்ச் சருக்கத்துப் பாடல்கள் சில மீண்டும் எழுதப்பட்டுள்ளன. கையெழுத்து வேறானது, ஏடுகளும் புதியன, ஆதலின் வேறு புதிய சுவடி தயாரிக்கத் தொடங்கப்பட்டுள்ளது என்பது புலனாகிறது.

பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் நூலகத்திற்கு 1973 - 74ல் அன்பளிப்பாக அளிக்கப்பட்டுள்ளது.

## R. 8637

## பழநிப் புராணம்

## PALANIP - PURANAM

Palm - Leaf : 35.5 x 3 c.m. Foll. 116.
Lines 7.9 on a page. Tamil. Old.
Extent 3500 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE**

A puranic history of Pazhani, a shrine celebrated for Muruga. Chapters go by sargas; verses run without commentary.

'பழநிப் புராணம்' என்னும் இச்சுவடியின் முதலில் பகுதியில் 'கடவுள் வணக்கம்' என்ற தலைப்பில் 38 பாடல்கள் உள்ளன. அதனை ஒரு சருக்கமாகக் கணக்கிட்டு இரண்டாவது 'கிரிச்சருக்கம்', மூன்றாவது 'வராக கிரிச் சருக்கம்' என தொடர்ந்து செல்லுகிறது. இருபத்து நாலாவது 'சேரர்கோன் சருக்கம்' என்ற சருக்கத்தோடு முடிகிறது. செய்யுள்கள் மட்டுமே உள்ளன. ஆக சருக்கம் 24, திருவிருத்தம் 984. "விகாரி ஸ்ரீ. அற்பிசிமாசம். தேதி2, வியாழக்கிழமை திசைமியும் திருவோண நட்சத்திரமும் கூடின நாள் பழநிப் புராணம் எழுதி முடிந்தது" "நல்லிக்கவுண்டன் வலசிலேயிருக்கும் சண்முகஞ்செட்டிமகன் கண்ணாயிரஞ் செட்டி குமாரனாகிய பழநிச் செட்டியேடு" என்னுஞ் செய்திகள் இறுதியேட்டில் காணப்படுகின்றன பழநித்தலபுராண உரை என்ற தலைப்பில் காணப்படும் டி 613ஆம எண்ணில் உள்ள சுவடி உரையுடன் காணப்படுகிறது. சருக்கமுறை. பாடல். பாடல் எண போன்றவற்றில் இரண்டிற்கும் மாறுபாடு சிறிதும் இல்லை திரு. என் எஸ குப்புசாமி. எம் ஏ பொள்ளாச்சி அவர்களால் 1973 - 74ல் அன்பளிப்பாக வழங்கப்பட்டது.

## R. 8638

## பாரத வம்மானை

## BARATHA VAMMANAI

Palm - leaf : 37 x 3.5 c.m. Foll. 209.
Lines 7-9 on a page. Tamil. Fair.
Extent 5000 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74.

**COMPLETE**

Story of Mahabharath in Ammanai genre. Entire story of Mahabharath is available here.

**குறிப்பு :** பொள்ளாச்சியைச் சார்ந்த திரு. என்.எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அன்பளிப்பாக அளிக்கப்பெற்ற இச்சுவடி பாரதவம்மானை என்னும் பெயர்பெற்றது. முதல் ஏடும் 55ஆம் ஏடும் காணப்படவில்லை. 2 முதல் 199 முடியவும் மீண்டும் 241 முதல் 252 முடியவுமான 209 ஏடுகளே உள்ளன. அம்மானை நடையிலமைந்த இந்நூல், வியாசர் பிறப்பு தொடங்கி பாண்டவர்கள் வைகுந்தம் அடைந்தனர் என்பது ஈராக பாரதக்கதையினை எளிய நடையில் கூறிச் செல்லுகிறது. ஆர் 562 ஆம் எண்ணில் உள்ள இந்நூலகச் சுவடியில் காணப்பெறும் "ஏடாகமேரு' என்று தொடங்கும் வெண்பா இச்சுவடியில் இல்லை. பிற பகுதிகள் ஒன்றாகவே உள்ளன. ஆர் 3453, 3454 ஆம் எண்களில் உள்ள சுவடிகளைக் காட்டிலும் சில அடிகள் கூடுதலாக உள்ளன. சிலவிடத்து சில அடிகள் காணப்படவில்லை. "பிலவஸ்ரீ, மாசிமீ, உ உத்திராட நட்சத்திரமும் திரையோதசியும் கிழமை ஞாயிறும் சிவராத்திரியும் இப்படியொத்த நாளில் எழுதி முடிந்தது" என்னும் செய்தியும் இறுதியாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

## R. 8639

## பாகவத புராணம்

## BAGAVATHA PURANAM

Palm - leaf : 36 x 3.5 c.m. Foll. 1 - 272.
Lines 8 - 12 on a page. Tamil. Fair. Old.
Extent 10,000 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy**, M.A., Pollachi, in 1973 - 74

**IN COMPLETE**

First eight skandas in Bagawatha Puranam. Runs in lucid, collquial prose.

தொடக்கம்

முதலாவது கந்தம்

ஸ்ரீ வேதவியாசாய நமாகாவென்று ஸ்ரீவேத வியாசருடைய பாதபறபங்குகளுக்கு நமஸ்காரம் பண்ணி மகாபாகவதம் பனிரன்டு காந்தங்களும் தமிழ் வசனத்தினாலே எழுதுகிறோம். இந்தப் புராணக் கதைக்கு ஒரு விக்கினமும் வாராமல் ரட்சிக்கச் சொல்லி விக்கினேஸ்வரனை முந்தித் தோத்திரம் பண்ணி, சரஸ்வதியம்மனைக் கீர்த்தனைப் பண்ணிவைத்து, வானவர்களை நினைத்துக் கதையாப்பியம், முதல்கொண்டு எழுதுகிறோம். அதெப்படியென்றால் நயமிசாரண்ணிய வனத்திலே சவுனகாதி மகாரிஷிகள் இருபத்தாறாயிரம் பேர் எப்போதும் நின்று அவ்டம் ஆதிவிஷ்ணு ஷேத்திரமானபடியினாலே பீதாம்பரதாளானபடியினாலே ஸ்ரீ விஷ்ணுவைச் சேருகிறதுக்காக அங்கே ஆயிரம் வருஷம் தீர்க்க சத்திரயாகம் பண்ண நினைச்சு யாகதீட்சை வகிட்சுயாக காரியங்கள் தினமும் நிறைவேத்தி வரச்சியிலே ஒருநாள் தங்கள் அனுஷ்டானங்களைக் காலத்தாலே தீர்த்துக்கொண்டு..........

முடிவு

பிரம்மாவும் வேதங்களைக் கைக்கொண்டு அந்த சுவமியைக் கீர்த்தனைபண்ணி முன்னாளையைப் போலே லோகங்களைச் சிஷ்டிச்சுக்கொண்டு எப்போதும் போலே இருந்தார். சத்திய விருதனும் சத்தரிஷிகளுடனே கப்பலை விட்டிறங்கி அற்கிய பாத்தியங்களினாலே விஷ்ணுவைப் பூசைபண்ணி அப்போபிளைத்து அதின் பிறகு சூரியனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்து வையவசுதமனுவாய்ப் பிரகாசித்தார்.

இந்த வைசுதனான சத்திய விருதனுடைய சரித்திரமும் மசயரூபனான அரியுடைய பிரபாவங்களும் தினங்கேட்டவர்கள் காம

பெந்தங்களைவிட்டுப் பாவங்கள் நீங்கிச் சுகத்திலேயிருப்பார்கள். இந்தக் கதையைப் படித்தவன் சகல ஆஸ்பரியங்களுடையவனாவன் எழுதிவைத்தவன் மகாபூசிதவனாவானென்று சுபயோகிப் பரிச்சித்து மகாராசாவுக்குச் சொன்னாரென்று சூதாசவுணகர் முதலான ரிஷிகளுக்குச் சொன்னார்.

**பின்னணியுரை** : இந்த எட்டாவது காந்தம் புஷ்பகிரித் திம்மய்யன் தெலுங்கிலே சொன்னதை அரசூர் எம்மார் வாத்தியார் சின்னய்யன் தமிழ் வசனத்தினாலே எழுதினது. ஆழ்வார்திருவடிகளே சரணம்.

**குறிப்பு** : பாகவதபுராணம் என்னும் பெயரையுடைய இச்சுவடி ஒன்று முதல் எட்டு காந்தங்கள் முடிய எழுதப்பட்டுள்ளது. எளிய, பேச்சு நடையால் ஆனது. 250 ஆம் ஏடு இருமுறை எழுதப்பட்டுள்ளது.

சவுணகாதிமகாரிஷிகள், நயமிச்சாரண்ய வனத்தைச் சார்ந்தவர்கள், பலகாலமாக விஷ்ணுவை வணங்கி வந்தவர்கள், சூதமகா ரிஷியைப் பூசை செய்து வணங்குகிறார்கள். அவரிடம் சில ஐயங்களை வினவுகிறார்கள்

"இந்த மனுசர்களுக்கு நித்திய கலியானமானது எது ?
இவர்களுடைய அக்கியானம் எதனால் போகும் ?
சாந்தகுணம் எப்படிப் பிறக்கும் ?
எந்த தேவன் தேவகிவாசுதேவனுக்குப்
புத்திரனாய் அவதரித்து பூமிபாரத்தைத் தீர்த்தார்?

என்பன போன்றவை அவர்களின் ஐயங்கள். அவற்றிற்கு விடையாகக் கூறும் பல கதைகளின் தொகுப்பே பாகவதபுராணம்' என்னும் இந்நூல்.

திருப்பாற்கடலிலே யோக நித்திரைகொள்ளும் நிலையைத் திருமாலின் முதலவதாரம் என்று தொடங்கி. பத்து அவதாரங்களும் கூறப்படுகின்றன மேலும் விஷ்ணுவின் சிறப்பு, பாண்டவர் கதை, அகுதி கதை பிரிய விருத்தன் கதை போன்ற பலகதைகளின் வழி அவ்வையங்கள் நீக்கப்படுகின்றன. மேலும்,

'பகவானுக்கு நல்லவர் கெட்டவர் என்ற பாகுபாடு உண்டோ ? என்பது போன்ற பிற ஐயங்களையும் கதைவாயிலாக நீக்கி, நல்வழி புகட்டுகிறது இப்புராணம் எனலாம்

"புஷ்பகிரித்திம்மய்யன் தெலுங்கிலே சொன்னதை அரசூர் எம்மார் வாத்தியார் சின்னய்யன் தமிழ் வசனத்திலே எழுதியது" என்னும் முடிவுடன் காணப்படுகிறது.

## R. 8640
## திரௌபதைக் குறம்
## THROUPATHAIK KURAM

Palm - leaf : 42 x 3 c.m. Foll. 81
Lines 6 - 7 on a page. Tamil. Fair. Old.
Extent 1400 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE**

A Kuram genre; written in Vensendurai metre, pleasing to read. Story, from Mahabharath. Author, Puhalendi.

**தொடக்கம்**

வெண்செந்துறை.

விநாயகர்துதி.

விக்கின விநாயகரே வேலவரே முன்னடவும்
சந்தி விநாயகரே சரிந்த வயிற்றோனே
அந்தி பகலுமுமை அன்பாக யான் மறவேன்
முந்தி முந்தியெந்தனுக்கு முன்னடக்க வேண்டுமையா
ஒருகையில் மோதகமும் ஒரு கையில் செங்கரும்பும்
ஒரு கையில் தேங்காயும் ஒருகையில் நறகரும்பும்
இத்தனையும் பெற்றுமல்லோ இருந்தீர் மரத்தடியில்
..............................
கனிபெற்று வந்தவரே காருமையா விக்கினரே.
துரோபதையாள் தன் குறத்தைத் தொல்லுலகில்யான்பாடப
பாஞ்சாலி தன் குறத்தைப் பாந்தனிலே யான்பாட
பாட வருள்புரியும் பார்வதியாள் புத்திரரே.

**முடிவு**

ஐவருந் துரோபதையும் அங்கேயிருந்தார்கள். மன்னவருந் தேவியரும் மகராசன் பட்டணத்தில் சுகமாக வாழ்ந்திருந்தார் சுந்தரப் பூமுடியார்

இந்தக் கதைதன்னை யெழுதிப் படித்தவர்கள் பாஞ்சாலி தன் குறத்தைப் பத்தியுடன் கேட்டவர்கள். துரோபதை தன் குறத்தைத் துரிதமாய்ப் படிப்பவர்கள் மாயன் பெருமாளின் மகதேவர் கிருபையினால் நற்பதவி தானடையவர் நாட்டிலுள்ள மானிடர்கள்

மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பர்
வாழிவாழி என்றுசொல்லி வரமளித்தார் ஈஸ்வரனார்

**முற்றும்**

**பின்னணியுரை** : கர ஸ்ரீ வைகாசி மீ சா உ புங்கமுத்தூருக் கிராமம் நல்லிக் கவுண்டன் வலசிலிருக்கும் சண்முகஞ்செட்டியார் மகன் வெங்கிடாசலஞ் செட்டியாருடைய புகழேந்திப் புலவர் பாடிய துரோபதைக்குறம் எழுதி முடிந்தது.

**குறிப்பு** : இந்நூல் புகழேந்திப் புலவரால் பாடப்பெற்ற "துரோபதைக் குறம்' என்பது இச்சுவடியின் இறுதியடிகளால் பெறக்கிடக்கின்றது. 1973-74ல் பொள்ளாச்சியைச் சார்ந்த திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அன்பளிப்பாக அளிக்கப்பட்டது. சண்முகஞ்செட்டியார் மகன் வெங்கடாசலஞ் செட்டியாருக்குச் சொந்தமானது என்பது அறியப்படுகிறது.

வெண்செந்துறைப் பாடலாகத் தொடங்குகிறது. 'தினதெந்தினா தினதெந்தினா தினதெந்தி தினனா தென்னா திநாதினனா தினதெந்தி னாதினனா' என்ற இசைத் தலைப்பு கொடுக்கப்பட்ட பாடலாலும் பிற பல்வேறு சந்தப் பாடல்களாலும் ஆக்கப்பட்டுள்ளது. துரோபதை, குறத்தியாக வேடம் கொள்ளுகிறாள். மாயவனை வேண்டி கூடை பெறுகிறாள். சகாதேவனைக் குழந்தையாக்கி எடுத்துக்கொள்ளுகிறாள். துரியன் வீதியில் வருகிறாள், பெருந்திருவாள்போல்வாருக்குக் குறி சொல்லுகிறாள். துரியனின் அழிவைக் குறித்துத் துரியனிடமே குறியின்மூலம் சொல்லுகிறாள். துரியனால் சிறை செய்யப்படுகிறாள். அருச்சுனன் குறவனாகத் தேடி வருகிறான். அவனையும் சிறையிலடைக்க உத்தரவிடுகிறான் துரியன். ஆனால் பிறர் நல்லுரைகளால் இருவரையும்

விடுவிக்கிறான். இருவருமாக வந்து விராட தேசத்தில் மாறுவேடத்தில் தங்கி வாழ்கிறார்கள். இவையே சுவடியின் சுருக்கம்.

# R. 8641
# கணித நூல்
# GANITHANUL

Palm - leaf : 30 x 2.5 c.m. Foll. 14
Lines 6 - 8 on a page. Tamil. Fair. Old.
Extent 3200 granthas.

Purchased Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74.

**COMPLETE**

A rare manuscript on the mathematical knowledge of the Tamils. Apart from the numerical maths, calculations of the purity of gold, area of surfaces etc really flabbergast us.

**தொடக்கம் :**

காசினியிற் கற்றோர் கணிதநூ லாமெனவே
வாசியென்றா யாய்ந்து வருகவென் - மூஷிகத்தை வாகனமா
யூருகின்ற வாரணத்தோ வல்லபையாள்
பாகனிரு தாளினையே பற்று.

**குழிமாத்துக் கதிகாரம்**

'க' முதற்கொண்டு 'ப' வரைக்குங் குழி மாறிக் கூடிய துகை யென்னவென்றால் பத்துவரைக்குமென்று கூறிய துகையைப் பத்தால் மாற ய ( ) ய - ள இதனுடனே முன் கூறிய பத்தையும் ள த ய - சதமாற இதனில் முன் கூறிய ய்யும் தள்ள கள கய இதனை மூன்றாய்ச் செய்ய யொருபால் நஉள நஉய இதனுடனே ல் உண்டான எதராடி ருயரு யுங் கூட்டி நஉஅயரு -ஆதலால் ய வரைக்குங் குழித்துகை நஉள அயரு என்பது.

முடிவு

வெண்பா

யுண்மாற்றுப் பொன்னதனைக் கூட்டியுருக் கிவைத்து
யெம்மாற்கு மென்றின வினவி - லம்மாற்றை
யம்பொன்னா லமரரிய மாந்த துகையதனை
யம்மாற்றுக் கீய்ந்துக் கொள்.

யென்றது - ய மாற்றிலேய்பு மாற்றிலேய்பு அ மாற்றிலேய்பு எ மாற்றிலேய்பு கா மாற்றிலேய் ஆகப் பொன்னைக் கூட்டி யுருக்கினால் யெத்தனை மாற்றாகுமென்றால் பொன் மாற்றுதன்னைத் தான் பெருக்க மாற்று ய ம் பு ய ம் பெருக்க ய - ய - ள மாற்று. க்ஷ ம் ய பு மாற ய க்ஷ-கய அம் யம் பெருக்க அ - ய -அய. எம் யம் பெருக்க எ - ய - எய. சாம் யம் பெருக்க சா - ய - சாய ஆ மாற்றுத்துகை சள. இதனைப் பொற் றாகைக்கியீய ரூய -அ-சள யீவு அ- ஆதலால் இப்பொன்னைக் கூட்டியுருக்கினால் 'அ' மாற்று ஆம் என்பது

...

சனிக்கிழமைப் பகல் விஷம் நஉ தெ.

அமுர்தம் நஉ

ரோகம் நஉ

**கெவுரி பஞ்சாங்கம் முற்று.**

**குறிப்பு** : பொள்ளாச்சியைச் சார்ந்த திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களிடமிருந்து விலைக்கு வாங்கப்பட்ட இச்சுவடி 'கணித நூல்' என்னும் பெயரையுடையது என்பது இச்சுவடியின் கடவுள் வணக்கப் பாடலால் அறியவருகிறது.

இதனுள், குழிமாத்துக் கதிகாரம், எண்ணின் சூத்திரம், அலகுநிலை, சிறுகுழிமாற்று விகற்பம், நிலத்தளவு, முக்கோன நிலத்தளவு விகற்பம், கோலறியும் விகற்பம், உள்வட்டம் விகற்பம், புறவட்டம் விகற்பம், வேலிநில மறிவிக்க விகற்பம், மலை விகற்பம், பட்டுவிகற்பம், வன்னச் சேலைக்கு விகற்பம், நெல்லுக்குப் பொன் வாங்கும் விகற்பம், துலாவளவு, வைத்துருக்கின வெள்ளியால் மாற்றறிய' - போலர்வனவாய பல்வேறு தலைப்புக்களில் கணிதமுறை கூறப்பட்டுள்ளது.

## R. 8642

# சிவகிரி முருகன் அந்தாதி

## SIVAGIRI MURUGAN ANTHATI

Palm - leaf : 37 x 2 c.m. Foll. 51
Lines 4 on a page. Tamil. Fair. Old.
Extent 300 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE**

Lord Muruga & Sivagiri has been extolled here in 100 verses elegant style.

**தொடக்கம்**

தொங்குங் கடம்புங் கனிகாரஞ் சென்பக்கா
வோங்குஞ் சிவகிரியந் தாதியோத - வொளிர்கணிச்சி
தாங்கும் பனைக்கப் பிறைக்கிம்புரித் தடக்கும் பகடாத்
தூங்குஞ் சிறிய கட்கை மாமுகவன் றுணைச் செய்யவே

சீரங்க மோமறையோ சதகோடி திவாகான்றே
சோரங்க மானவுருவோ பஞ்சாக்கரத் துட்பொருளோ
ஆரங்கஞ் சூடியலா திப்பொருளை யளவிடமுன்
பாரங்க டேவற் கறுமுக்த தெய்வப் பரஞ்சுடரே (க)

**முடிவு**

இரங்குமெஞ் ஞானப்பெருவாழ்வு பெற்றுருவேருஞ்சடாட்
சரங்களை யுட்சரித்தே சிந்தையுன் றிருத்தாண்கமவைத்
துரங்கும் படிக்குபதேசம்வைத்தாள்கதையோங்கயில்வச்
சிரங்கரஞ் சேர்முருகா பவளாசலச் சீரங்கனே (ள)
சிவகிரி முருகன் துணை.

**குறிப்பு** : சிவகிரி என்னும் தலத்து எழுந்தருளியுள்ள திருமுருகனது பெருமைகளைக் கூறும் நூல், அந்தாதி நடையில் ஆன நூறுபாடல்களைக்கொண்டு விளங்குகிறது நல்லநடையிலாக்கப் பட்டுள்ளது. ஆசிரியர் பெயர் போல்வன அறிய இயலவில்லை இது பொள்ளாச்சி. திரு. என்.எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அன்பளிப்பாக வழங்கப்பட்ட சுவடியாகும்

செப்பூசி மேலே சிரசுதனைக் கீழாக
அப்போது தருமருக்கு அனுப்பமனங் கூடாமல்.

**குறிப்பு** : பொள்ளாச்சி, திரு. என்.எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அன்பளிப்பாக வழங்கப்பட்டது இச்சுவடி. பாரதத்தில் ஒரு பகுதியாக அருச்சுணன் பாசுபதம் பெற்ற செய்தி கூறுவது. அம்மானை நடையில் கூறுவதாக அமைந்துள்ளது. ஆனால் "அம்மானை" என்னும் மகுடச் சொல் கையாளப்படவில்லை. வினாவும் விடையுமாக அமையும் அம்மானை முறையிலும் இல்லை. வெண்செந்துறைப் பாடல்களால், தொடர்ந்து செய்தி கூறப்பட்டுள்ளது.

காடு சென்ற பாண்டவர்கள் மீண்டும் அரசுபெற விரும்புகிறார்கள். இறைவனிடம் பாசுபதம் பெறுமாறு கூறுகிறார் வேதவியாசர். உரிய வழிவகைகளை எடுத்துக்காட்டுகிறார் கண்ணபிரான், பாசுபதம்பெற அருச்சுனன் தவநிலை மேற்கொள்ளுகிறான் என்பன போன்ற செய்திகள் கூறப்படுகின்றன. எளியநடையில் அமைந்துள்ளது. முற்றுப்பெறவில்லை. எழுதியவர் பெயர் முதலியன அறிய,இயலவில்லை.

## R. 8644
## மூசிக நாடகம்
## MUSIKA NATAKAM

Palm - leaf : 40 x 3 c.m. Foll. 46
Lines 6 - 7 on a page. Tamil. Fair. Old.
Extent 1500 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE**

A quaint musical drama condemning the killing of bandicoots. Author, not known.

**தொடக்கம்**

மூசிகி வேட்டையாடும் அறிவிலா மூடர்மீதில்
மூசிக விலாச மென்னும் நாடக முரைக்க வேண்டி
மூசிக மூர்ந்தோன் பாத முளரியில் மலரில் நாளு
மூசிய வண்டுபோல முப்பொழுதிறைஞ்சு வேனே.

# R. 8643

# அருச்சுனன் பாசுபதவம்மானை

# ARCHUNAN PASUPTHAVAMMANAI

Palm - Leaf : 40 x 3 c.m. Foll. 58
Lines 5 - 6 on a page. Tamil. Fair. Old.
Extent 1000 granthas.
Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE**

A ballad depicting a piece of story in Mahabaratha wherein Arjuna tries to get the weapon 'Pasupatha' by penance.

**தொடக்கம்**

பாண்டவர்க ளர்ச்சுனனார் பாசுபதம் பெற்றகதை
நீண்டபுகழ் வேத வியாச ரெனவுரைத்தார்
நீண்டதந்தி முகவேள் தயாபரனே இக்கதைக்கு
வந்துதவ வேணும் வரம்.

**அர்ச்சுனன் பாசுபதம்**

**அம்மானை**

முந்திவிநாயகனே முருகர் சரஸ்வதியே
கந்தனுக்கு முன்பிறந்த கணபதியே முன்னடவாய்.

.......................

போழை வயிற்றோனே பெருமாள் மருகோனே
பாசுபத அம்மானை பண்பாகப் பாடுகிறேன்
என்னெஞ்சில் நீயிருந்து எனக்கு வரமருள்வாய்
தருமருக்கு நேரினைய தனஞ்செயர்மேல் பாடுகிறேன்.
வறுமைகள் நீக்கி வரந்தாரும் எந்தாயே

**முடிவு**

பொன்னூசி போலோ போயிருந்து கொண்டல்லோ
போயிருந்துகொண்டு பொன்னூசி தானிருத்தி
பொன்னூசி மேலே பூவசி தானிருத்தி
அப்பெரிய கம்பத்தின்மேல் செப்பூசி தானிருத்தி

## ஆக்கியோன் கருத்து

பனகமணிப் பிச்சையிட்டு முடக்குமணிக்
கோர்வையிட்டும் பாடல் கேட்டுக்
கனகபடாம் ஔவைக்கீய்ந்தும் தென்னனைச்சென்
டாலடித்துங் காட்சி பெற்ற
, தனவசியர் மீதில்வசைக் கவிபுகன்றோர்
வாயினிலாப் படித்த தாமென்
றெனதுமதிக் கியன்றமட்டும் மூசிக நா
டகமெனவொன் நியம்பு வேனே.
கந்தமுறும் பங்கயஞ்சேர் செங்கையினாற்
றருகனைக் காய்ந்த சூலி
அந்தரியாம் சுந்தரிதா திந்திமிதா
வென்றுநட மாடும் போது
விந்தைமிக நின்றொருகா லந்தரத்தி
லெடுத்தாடும் விமல ரீன்ற
தொந்திவயற் றைந்துகரத் தெந்தையிதோ
ஆகுவின்மேற் றோன்றி னாரே.

### விநாயகர் வருகிற தரு.

சித்தி விநாயகர் வந்தாரே - சபையிலிதோ
சித்தி விநாயகர் வந்தாரே.

**முடிவு**

சகுனியெனு மந்திரியால் நூற்றுவர்கள்
யமபுரம்போய்ச் சார்ந்தார்ப் போல
அவகுணணா கியகெடிதி மந்திரியால்
பின்னுமறி வில்லா மூடர்
சுகமெனவே ஆகுபற்றித் தின்றதினாலும்
வஞ்சகஞ் சொன்ன தாலும்
சிவசுதன சொல்சாபக் கிரகத்தாலும்
அருநரகஞ் சேர்ந்திட் டாரே (சுயகா)

..............

விசுஸ்ரீ வைகாசி மீஉ உயகஉ மூசிக நாடகம் பாடியது

### அகவல்

விபேகமில்லை மானமில்லை வெட்கமில்லை புத்தியில்லை
சுபாகமில்லை றோசமில்லை தோஜி யேனும்
விபாகமில்லா எல்லன றனக்கு யீனமுண்டு
யூனமுண்டு அல்லலுண்டு வல்வினையுண்டாமே.

**குறிப்பு** : பல்லவி, அநுபல்லவி, சரணம் போன்ற தலைப்புகளோடு கூடிய, விநாயகர் வருகிறதரு முதல் பல தருக்களும் விருத்தங்கள், அகவல்கள், வசனங்கள் ஆகிய பலவகைகளும் கலந்து பாடப்பெற்ற நாடக நூலாக அமைந்துள்ளது.

சிவபெருமானைக் கண்டுவர விரும்புகிறார் விநாயகர். ஆகுவும் வாகனமாகிச் செல்லுகிறார். சென்றபின் மூடர் சிலர் வருகின்றனர். மூட மன்னவனும் உண்டு, ஆகுவேட்டையாடுகின்றனர். ஆகு வாகனத்தாரின் குழந்தைகளைக் கொன்று புசிக்கின்றனர். விநாயகரால் தண்டிக்கப்படுகின்றனர். மன்னிப்பு கோருகின்றனர். இனி வேட்டையாடுவதில்லை என்ற உறுதி கூறி மன்னிப்பும் பெறுகின்றனர். மீண்டும் வேட்டையின்றி வேறுவழியில் ஈடுபடுகின்றனர். பெருநரகு அடைகின்றனர். இதுவே நாடகத்தின் சுருக்கம். சிறந்த கருத்தோ நடையோ உடையதன்று. பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அன்பளிப்பாக அளிக்கப்பட்டது.

## R. 8645

## பாரதவம்மானை

## BARATHAVAMMANAI

Palm - leaf : 35 x 2.5 c.m. Foll. 2 - 137
Lines 5 - 7 on a page. Tamil. Fair. Old.
Extent 2650 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74.

**INCOMPLETE.**

A part of the story of Mahabharath namely the ruling of the queen Alli in ammanai style.

**தொடக்கம்**

மல்லிகை முல்லை வாசமுள்ள மரிக்கொழுந்து
யிருந்தார் பெறுந்தவசு யிருண்டதொரு தோப்பாக
ஆலவாய்ச் சொக்கர் அங்கயற்கண் மீனாட்சி
திங்கள் கிழமை சிவன்பிறந்த சோமவாரம்
ஒருசந்தி பண்ணி ஒருசாம வேளையிலே
புலியா சனமிருந்து போதவே பூசைசெய்து
பாலடிகையுண்டு பன்னீரு தான்தெளித்து
அரிபிளவும் வெள்ளிலையும் அன்பாகத் தான்படைத்து
சிங்கா சனத்தில் சிவசிவா வென்றிருந்தார்
இடப்பாக மாயிருக்கும் ஈஸ்வரியா ளப்போது

**முடிவு**

ஆகாச முட்ட அனுமந்த டால்நிறுத்தி
மாணிக்கக் கூடாரம் மகாமேரு போலெழுப்பி
ஆணிமுத்துக் கூடாரம் அலங்கார மாயெழுப்பி
......................
தக்கதுரி யோதிரனைச் சந்திக்க வேணுமென்று
அய்யா யிரந்தாதி அழகான ரம்பையரை
ஆணா யலங்கரித்து ஆயு தமுந் தானெடுத்து
சல்லடந் தொட்டுத் தங்கநி சாரணிந்து
திரியோ தினப்பெருமாள் சேனைப் படைத்தலைவர்
அல்லி யிடதோழி அதிததிவரக் கண்டார்கள்.

**குறிப்பு** : பொள்ளாச்சி, திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது இச்சுவடி. பாரதக் கதையின், ஒருபகுதி அம்மானை நடையில் பாடப்பட்டுள்ளது. அல்லியின் ஆட்சிபற்றிய செய்தியடங்கியது. பிற பாரதவம்மானைச் சுவடிகளினும் வேறாயது. 1, 120, 127, 130 - 134 ஆகிய ஏடுகள் காணப்பெறவில்லை (2 முதல் 137 முடிய எண்கள் காணப்படுகின்றன). எழுதியவர் போல்வன அறிய இயலவில்லை. முதலும் முடிவும் காணப்பெறவில்லை. முற்றுப்பெறாத நூல்.

# R. 8646

# பாகவதம்

# BAGAVATHAM

Palm - leaf : 31 x 3.5 c.m. Foll. 44
Lines 8 - 9 on a page. Tamil. Fair. Old.
Extent 1350 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy**, M.A., Pollachi, in 1973 - 74.

**INCOMPLETE, PRINTED**

That part of the story of *Mahabharath* which speaks more about Lord Krishna is sung here.

**தொடக்கம்**

அச்சாகியுள்ள 'பாகவதம்' என்னும் நூலுள் உள்ள ஒரு சில படலங்கள் மட்டும் காணப்படுகின்றன இச்சுவடியில். கோவர்த்தன கிரிப்படலம், வருணைப் படலம், நவநீதப் படலம், அருச்சுனப் படலம், ததிபாண்டப் படலம், உருக்குமாங்கதப் படலம், துருவப் படலம், மச்சப் படலம் ஆகிய எட்டுப் படலங்கள் மட்டுமே காணப்படுகின்றன. அச்சுநூலினும் வேறுபாடுகள் ஏதுமில்லை. உருக்குமாங்கதப் படலம் போன்றவற்றில் பலபாடல்கள் குறையாகவே உள்ளன.

1 132 ஏடுகள் முறையாகக் காணப்படுகின்றன. 33, 34 ஆம் ஏடுகளில்

"சீதக்களபச் செழுந்தாமரைப் பூம்
பாதச் சிலம்பின் பல இசைபாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகிலாடையும்"

என்னும் அடிகளில் தொடங்கி, தொடர்ந்து 2 ஏடுகளிலும் காணப்படுகின்றன". மீண்டும் 1 முதல் 11 எண்களோடு கூடிய ஏடுகள் காணப்படுகின்றன. இடையே 10ஆம் ஏடு இல்லை. முற்றுப்பெறாத சுவடியாகும்.

## R. 8647 - 8650 (ONE BUNDLE)

Palm - leaf : 38 x 3 c.m. Foll. 83
Lines 5 - 7 on a page. Tamil. Fair. Old.
Extent 2000 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

## R. 8647

# பலகடவுளர் பேரில் பாடிய பாடல்கள்

# PALA KADAVULAR PERIL PADIA PADALGAL.

Foll. 1 - 24 Extent 575 granthas.

Sings the glory of several gods like Dhandayudapani, Natarajan etc. in verses.

**தொடக்கம்**

'சருவதாரி ஸ்ரீ புரட்டாசி மீஉ க உ நல்லகவுண்டன் வலசு ஜண்முகஞ் செட்டியார் மகன் வெங்கிடாசலஞ்செட்டி கோலடிப்பாட்டு, விருத்தம், பிரசங்கக் காவியம், மகா நோன்புப்பதியம், இதுகளையெல்லாம் படிச்சு எழுதி முடிந்தது" - என்னும் தொடர்கள் முதல் ஏட்டில் காணப்படுகின்றன. பொள்ளாச்சி, திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் கொடுக்கப்பட்டது இச்சுவடி.

தண்டாயுதபாணிபேரில், ஆசிரியம் என்ற தலைப்பில் ஒருபாடல் காணப்படுகிறது. அடுத்தது

"விஞ்சை முனியோர்கள் தொழுதிறைஞ்ச
மணமே புரியும் வேலாயுதக் கடவுளே"
"மயிலேறி விளையாடு குகனே புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே"

என்பனபோன்ற மகுடங்களையுடைய குமரேசச் சதகப் பாடல்கள் சில காணப்படுகின்றன. மேலும்

'தண்டாயுதபாணிபேரில் ....... விருத்தம
'8 அடி ஆசிரியம்', '16 அடி ஆசிரியம்'
'நாட்டுராயன் பேரில் ஆசிரியம்' - போன்ற

தலைப்புக்களில் பலபாடல்கள் காணப்படுகின்றன.

## R. 8648
## பாகவதம்
## BAGAVATHAM

Foll. 25 - 29a
Extent 100 granthas.
Begins on foll. 25 of the Ms. discribed under No. R. 8647.

Only six stanzas in Kuzhal Oodu Patalam of the celebrated 'Bhagavatam' with commentary.

பாகவதத்துள் "குழலூது படலம்" என்னும் படலத்திலுள்ள முதல் ஆறுபாடல்களை எழுதி அதற்கு உரையும் எழுதப்பட்டுள்ளது

## R. 8649
## பாரதம்
## BARATHAM

Foll. 29b - 33a. Extent 125 granthas.
Begins on foll. 29 b of the Ms. discribed under No. R. 8647.

**INCOMPLETE, PRINTED**

Only five stanzas from the famous Villibharatham in Tamil with commentary.

வில்லிபுத்தூரார் பாரதத்தில் 5 பாடல்கள் மட்டும் எழுதிவைக் கப்பட்டுள்ளன இச்சுவடியில் உத்தியோக பருவத்து ஈற்றுச் சருக்கமாகிய அணிவகுப்புச் சருக்கத்தின் 31 - 34 ஆகிய 4 பாடல்களும் வீட்டும பருவத்தில் உள்ள முதற்போர்ச் சருக்கத்து இரண்டாம் பாடலாகிய "மாயையென் றொருத்தி தன்பால்" என்று தொடங்கும் பாடலும் ஆக 5 பாடல்கள் மட்டும் காணப்படுகின்றன. அவற்றிற்கான எளிய உரையும் காணப்படுகின்றது.

## R. 8650

## பலவகைப் பாடல்கள்

## PALAVAGAIP - PADALGAL

Foll. 33 b - 83. Extent 1200 granthas.
Begins on foll. 34 b of the Ms. described under No. R 8647.

**INCOMPLETE**

An anthology of songs culled out from various Tamil pieces.

பல நூல்களிலிருந்து தொகுக்கப்பெற்ற பாடல்களையுடைய சுவடி. கீழ்க்கண்ட ஒவ்வொரு நூலினின்றும் சிற்சில பாடல்கள் எழுதிவைக்கப்பட்டுள்ளன.

பழநிப் புராணத்தில் 3 பாடல்கள், கணபதி விநாயகர் தோத்திரம் 1 பாடல், மீனாட்சியம்மன் பேரில் பந்தடி 6 பாடல்கள். இவைபோலவே உச்சனி மாகாளியம்மன் பந்தடி, குற்றாலக் குறவஞ்சி, திரௌபதைக் குறம், அனுமார் தூது, முக்கூடற்பள்ளு, இராமபிரான் கீர்த்தனை, பட்டாளத்தார் யுத்தம், பெண்கலை, பதினெண்புராணம், ததிபாண்டப் பாடல், ஏகாம்பரர் பேரில் வண்ணம் போன்ற நூல்களினின்றும் சிற்சில பாடல்கள் எழுதி வைக்கப்பட்டுள்ளன.

## R. 8651

## திருவாசகம்

## THIRU VASAKAM

Palm - leaf : 22.5 x 2.5 c.m. Foll. 141
Lines 5 - 7 on a page. Tamil. Fair. Old.
Extent 2100 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE, PRINTED**

Manicka Vasagar's Thiruvasakam; Not complete in this volume.

**குறிப்பு** : பொள்ளாச்சியைச் சார்ந்த, திரு என்.எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அன்பளிப்பாக அளிக்கப்பட்டது. இந்த சுவடி.

'நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க' என்று தொடங்கும் சிவபுராணம் - தற்சிறப்புப்பாயிரம் தொடங்கி, கீர்த்தித் திருவகவல், திருவண்டப் பகுதி, போற்றித் திருவகவல், திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவம்மானை, திருச்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருவெம்பாவை, திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோள்நோக்கம், திருப்பொன்னூசல், அன்னைப்பத்து, குயிற்பத்து முடிய பாடல்கள் மட்டுமே உள்ளன திருத்தசாங்கத்தில் ஆறுபாடல்கள் மட்டும் எழுதப்பட்டுக் குறையாக உள்ளது. திருப்புவல்லி, திருவுந்தியார் ஆகிய பகுதிகள் 19 பாடல்களோடு முற்றும் என்று குறிக்கப்பட்டுள்ளன

## R. 8652 - 8654 (One bundle)

Palm - leaf : 26.5 x 2.5 c.m. Foll. 75
Lines 6 - 7 on a page. Tamil. Fair. Old.
Extent 1000 granthas.
Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

## R. 8652
## இரட்டைமணி மாலை
## IRATTAIMANI MALAI

Foll. 1 - 4, Extent 60 granthas.

**COMPLETE**

Sung alternatively in two different Tamil metres on Lord Muruga.

**தொடக்கம்**

மயிலைங்கிரி முருகேசர்பேரில்
இரட்டைமணி மாலை

மருவு மிரட்டைமண மாலையைவேற் கந்தன்
திருவடியிற் சாற்றநெஞ்சே தோற்றச்
சுருதிக் குயிலை விநாயகனைக் கொண்டமாக
மோங்கு மயிலை விநாயகன் வாழ்த்து.

### வெண்பா

உலகெலாம் போற்று முயர்மயிலை வெற்பினில்
கேளில்வேற் கந்த முருகேச - பலகருத்துந்
தீமதங்கண் ணெஞ்சைத் திருத்திநன்மேற் பாடவரந்
தாமதஞ்செய் யாதெனக்குத் தா.

முடிவு

### கலித்துறை

தாழ்ந்துன் திருவடிக் கன்புடன் பூமலர் சாற்றிப்பராய்
சூழ்ந்துச் சிவானந்த கண்டமைத் தொண்டருக்குத் தொண்டு செய்து
வாழ்ந்துண் றேன் செல்வ நாமென்பேர் அருண நஞ்சுடவுந்
போழ்ந்தும்ம ரோங்கும் மயிலாசலக் கந்த பூரணனே. (ய சா)

பின்னணியுரை

### இரட்டைமணி மாலை முற்றும்.

### தெண்டாயுதபாணி துணை.

நல்லிக் கவுண்டன் வலசிலே யிருக்கும் குட்டிச் செட்டி மகன்
கண்ணாயிரஞ் செட்டி குமாரனாகிய பழனிச்சாமி

திருவாவினன்குடி வாழ்வோயெனச் சிந்தைத் தெளிவு பெற
வரமே மிகவுங் கொடுத்தருள்வாய் மயில் வாகனனே
குருவாகி யீசனுக் கோர்மொழியோதுங் குககுழகா
முருகா பழனிக் குமரா சிவகிரி முத்தய்யனே.

**பழனிச்சாமி செட்டி பாடல்.**

**குறிப்பு :** முதல் ஏட்டிலுள்ள குறிப்பால் பழனிச்சாமி செட்டி என்பரால் எழுதப்பட்ட 'இரட்டைமணி மாலை' என்பது தெரியவருகிறது. மயிலை மலைவாழ் குமரன்மீது பாடப்பட்டது. பதினாறு பாடல்களாலானது. வெண்பா, கலித்துறை ஆகிய செய்யுள்களால் பாடப்பெற்றுள்ளது. பிரமாதீட்சா ஸ்ரீ தை மீ யசா. தேதி எழுதப்பட்டதாகவும் தெரிகிறது. பொள்ளாச்சியைச் சேர்ந்த திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது.

## R. 8653

## நீதி சாரம்

## NITHI SARAM

Foll. 5 - 68. Extent 900 granthas.
Begins on foll. 5 of the Ms. described under No. R. 8652.

**COMPLETE**

101 songs with commentary on ethical code of life.

**குறிப்பு** : நீதிசாரம் என்னும் பெயரில், இந்நூலகத்தில் டி. 179, 180 ஆர் 2040 ஆகிய எண்களில் உள்ள சுவடிகளைப் போன்றதே இச்சுவடி. 180ல் உள்ள காப்புச் செய்யுள் உட்பட இதில் காணப்படுகிறது. நிறைந்த பாடயே தங்கள் காணப்படுகின்றன. 101 பாடல்களும் அவற்றிற்கான சுருங்கிய உரையும் அடங்கிய சுவடியாகும் இச்சுவடி.

## R. 8654

## தனிப் பாடல்கள்

## THANIP - PADALGAL

Foll. 69 - 73. Extent 40 granthas.
Begins on foll. 79 of the Ms. discribed under No. R. 8652.

Some stray stanzas; a few are by Avvaiyar and the blind poet Viraragavan.

**குறிப்பு** : 'வடிவைக் கனலைப் பிழிந்துகொண்டு' என்று தொடங்கும் அந்தகக்கவி வீரராகவர் பாடல், தண்ணீருங் காவிரியே, ஆயன் பதியில் அரன்பதி எனத்தொடங்கும் ஔவையார் பாடல்கள் போன்ற சில தனிப்பாடல்கள் எழுதிவைக்கப்பட்டுள்ள 5 ஏடுகளடங்கியது இப்பகுதி.

## R. 8655

## அரிச்சந்திர புராணம்

## HARICHANDRA PURANAM

Palm - leaf : 42.5 x 2.5 c.m. Foll. 42
Lines 4 on a page. Tamil. Fair. Old.
Extent 600 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE, PRINTED**

History of the King Harichandra in poetry, starting from only the 'mayana' canto.

**குறிப்பு** : அரிச்சந்திர புராணம், மயான காண்டத்தில் "வல்லியும் மகனுமந்த மறையவன் மனையிற் சேர்ந்து' என்று தொடங்கும் பாடல் முதல் காணப்படுகிறது. 'பதியிழந்தனம்' என்ற பாடலோடு முடித்து 'மறைந்து போகலும்' என்னும் பாடல் முதலாகக் 'காட்சி காண்டம்' எனற பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. 'கருத்தினில் மகிழ்ச்சி பொங்க' என்ற மயான காண்டப் பாடல் முடிய இருக்கிறது. அச்சு நூலினும் சில பாடவேறுபாடுகள் காணப்படுகின்றன. பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8656

## பாரதம் (கிருட்டிணன்தூது)

## BARATHAM - KRISHNAN TUTHU

Palm - leaf : 40 x 3 c.m. Foll. 36
Lines 5 - 6 on a page. Tamil. Fair. Old.
Extent 800 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE, PRINTED**

The famous story of Mahabarath; only the part played by Krishna as a mediator is available here.

**குறிப்பு** : 'நீடாழி உலகத்து', 'பொருப்பிலே பிறந்து', 'தந்தமுரியில்' என்று தொடங்கும் பாடல்கள் வணக்கப்பாடல்களாக அமைந்துள்ளன. தூதுபோய் மீண்ட செய்தியை இருநூற்றறுபத்தொரு செய்யுளால் பாடுவோம் என்று தொடங்குகிறது இப்பகுதி. 25ஆம் ஏடு வெற்றேடாகவே உள்ளது.

"பேர்படைத்த விசயனுடன் மும்மைநெடும்" என்று தொடங்கும் கிருட்டினன் தூது சருக்கத்து முதல் பாடல் தொடங்கி 'மேவு

சந்துகிர்த்திரளும்' என்று தொடங்கும் பாடல் முடிய 57 பாடல்கள் எழுதப்பட்டுள்ளன. அவற்றிற்காம் சுருங்கிய பொழிப்புரையும் காணப்படுகிறது. பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8657

## கந்த புராணம்

## KANTHA PURANAM

Palm - leaf : 42.5 x 3 c.m. Foll. 44
Lines 7 - 8 on a page. Tamil. Fair. Old.
Extent 1600 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE, PRINTED**

Recounts the story of Skanda in prose.

**குறிப்பு** : கந்தபுராணம் என்னும் பெயரையுடைய இச்சுவடியுள் முதல் ஆறுபாடல்கள் அச்சு நூல்களில் உள்ளவை காணப்படுகின்றன. பிறகு நூலின் கருத்து சுருங்கிய உரைநடையில் ஆக்கப்பட்டுள்ளது. தேவேந்திரன் தபசுநிலை, தேவர்கள் முறையிட்டது, தாருகா சூரன் யுத்தம், போன்ற தலைப்புகளில் இவ்வுரை நடைசெய்யப்பட்டுள்ளது டி. 544ல் காணப்படும் சுவடிபோல காணப்படினும் நடைவேறாயது. 41ஆம் ஏடுமுதல் திரௌபதைக்குறம் என்னும் நூலின் ஒரு சில பாடல்கள் எழுதிவைக்கப்பட்டுள்ளன. பொள்ளாச்சி திரு. என். எஸ் குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் வழங்கப்பட்டது.

## R. 8658

## பாரதவம்மானை

## BARATHAVAMMANAI

Palm - leaf : 42.5 x 2.5 c.m. Foll. 46
Lines 5 on a page. Tamil. Fair. Old.
Extent 600 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE. PRINTED**

Story of Abhimanyu and his son Paritchittan in simple 'ammanai' style.

**தொடக்கம்**

கந்தனே செந்தமிழ்க்குக் கணபதியே காப்பாக
எந்தன் சரசுவதியே எப்போதும் வாக்கில் நிதம்
வந்துதவி செய்ய வழுத்துகிறேன் இக்கதையை
முந்து பரமேசர் மொழிந்த வசனமுது
செப்புதற்கு லட்சுமியாள் சீதேவி யுண்டாக
இப்புவியில் மாயன் எடுத்துரைத்த வேதாந்தம்
மாபாரதக் கதையை வகுத்துத்த சாஸ்திரத்தில்
பூபாலர் ஐவர் பொருந்திரியோதனனை
வென்று புவியாண்டு விஷ்ணுபதஞ் சேர்ந்தகதை
வாரிசூ ழுலகுதன்னில் மன்னுயிர் துதிப்பவேண்டிச்
சீரிய தமிழினாலே தெளிந்துநா னம்மானைபாட
ஆரிய னனந்தராமன் அச்சுதன் கமலக்கண்ணன்
பாரிய மேகவண்ண பச்சைமால் பதமேகாப்பாம் (க)

**முடிவு**

பதையாமல் வேடன் பாங்குடனே ஓடிவந்து
வதைபட்ட வந்துவிட்ட மானென்று பாற ழுவில்
குதையம்பு தைத்துருவிக் கோபாலா வென்றிருந்தார்
டெ...கை பார்த்து யேமாந்து வில்வேடன்
ஷரைசெய்தா னென்பாவி மாயோனை மாலெனவே.

**குறிப்பு** : பாரதவம்மானை என்னும் பெயரையுடையது இச்சுவடி. விருத்தம், கொச்சகம் ஆகிய நடைகளானியன்றது. அபிமன்யுவின் மனைவி சுந்தரி மகப்பேறுடையவளாகின்றாள். பரிசித்து வளர்ந்து கல்வி பயிலும் செய்தியும் பாண்டவர் அவனுக்குப் பெண்பார்த்துத் திருமணம் செய்துவைக்கும் செய்தியும் போல்வன விளக்கப்படுகிறது. மிகவும் எளிய நடையிலமைந்துள்ளது.

இந்நூலக எண் ஆர். 562, 3453, 3454 போன்ற பல சுவடிகளினும் முற்றிலும் மாறுபட்டதாகக் காணப்படுகிறது. பொள்ளாச்சி, திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8659

## அருணாசல புராணம்

## ARUNACHALA PURANAM

Palm - leaf : 39 x 4 c.m. Foll. 244
Lines 8 on a page. Tamil. Fair. Old.
Extent 6300 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE, PRINTED**

Arunachala Puranam, it is said here, is the translation of Sanskrit Ruttra Sanhite which is a portion of Siva Purana. Runs in poetry.

குறிப்பு :அருணாசலபுராணம் என்னும் இச்சுவடி அச்சாகியுள்ளது. இச்சுவடியில் அச்சுநூலைக்காட்டிலும் பாயிரத்தில் 2 பாடல்கள் குறைவாக உள்ளன. பிற எல்லா சருக்கங்களும் அச்சுநூலினை ஒத்தே காணப்படுகின்றன. பலவிடத்துப் பாடவேறுபாடுகள் காணப்படுகின்றன. 'வல்லாள மகாராசச் சருக்கம்" என்னும் ஒரு சருக்கம் முழுமையுமே இச்சுவடியில் காணப்பெறவில்லை.

இச்சுவடியில் உள்ள, பாயிரத்து இருபதாம் பாடலில் வரும்

"கருத்துருக இறைவன் நந்திக் கருள்புரிய
நந்தியுமார்க் கண்டற்கோத
விருத்திமறை வியாதமுனிக் கவனுரைக்க
மொழிந்தசிவ புராணங் கோடி
யுருத்திரசங் கிதையுரைத்த வருணகிரி
வளத்தினையா னுரைக்க லுற்றேன்"

என்னும் அடிகளால் இறைவன் முதல் வழிவழியாக உரைக்கப்பட்ட சிவபுராணம், கோடியாகும். அவற்றுள் 'உருத்திரசங்கிதை' என்னும் பகுதியில் கூறப்பட்டுள்ளது. அருணாசலபுராணம் என்பது பெறப்படுகிறது. மேலும் அடுத்த பாடலில் காணும்

"இங்கிதஞ்சேர் வடகலையிலிருந்ததனைத்
தென்கலையா லியம்ப லுற்றேன்"

என்னும் அடிகள், வடமொழியிலிருந்த இப்புராணம் தமிழிற் செய்யப்பட்டது என்பதையும் புலப்படுத்துகின்றன.

**இச்சுவடியின் இறுதியில்**

"அவையாரருளிச் செய்தது.... பிங்களஸ்ரீ ஆவணி மாதம் யச தேதியில்.......... சின்னத்தம்பி வாத்தியார்கிட்ட எழுதி வாசிச்சதது சம்பூரணம் என்று காணப்படும் தொடர்கள் ஆய்விற்குரியனவாக அமைந்துள்ளன. பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8660
## சமுத்திர விலாசம்
## SAMUTTIRA VILASAM

Palm - leaf : 33.5 x 3 c.m. Foll. 47
Lines 5 - 6 on a page. Tamil. Fair. Old.
Extent 1000 granthas.
Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE, PRINTED**

A poetical work sings the glory of King Venkateswara Ettan.

**குறிப்பு** : சமுத்திர விலாசமென்னும் இந்நூல் அச்சாகியுள்ளது. நூறு பாடல்களும் முழுமையாக உள்ளன. இச்சுவடியில் உள்ள 'மண்டமான குறம்போ படவரவோ' என்று தொடங்கும் முதல் விருத்தம் அச்சுநூலில் காணப்படவில்லை. மிகுதியாக சிலேடைப் பொருள்களையுடைத்தாய், மடக்கு அடிமடக்கு என்றும் நடையுடைத்தாய் அமைந்திருக்கின்றன அனைத்துப் பாடல்களும். பொள்ளாச்சி, திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8661
## மருதூர் வெங்கடாசலபதி தோத்திரம்
## MARUTHUR VENKATACHALAPATHI TOTTIRAM

Palm - leaf : 30 x 2.5 c.m. Foll. 13
Lines 4 on a page. Tamil. Fair. Old.

Extent 100 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLTE**

On Lord Venkatachalapathy of Marudur by an unknown author in 26 virutta songs.

**தொடக்கம் :**

செந்தமிழ் வெங்கிடா சலரைத் சிந்தைதனிலேதொழுது
பைந்தமி ழைந்தாருடனே பாமாலை வந்துரைக்க
யெந்தன் வினையகற்று யெனையே னாயேன்
உந்தனடி யானடிமை யான் காப்பு
ஆதியேவேதத் தரும்பொருளான அமரருக்கிறையலாகரசே
சோதியே மூலச் சுடரினுக் கொழுந்தென் சுரூபநின் சீரடி
தொழுவேன்
வேதியன்றயனே யீன்றமெஞ்ஞான மெய்வினை தீர்த்துகாக் கொண்ட
மாதவமுகந்தா மாயனே மருதூர் வளர்வெங்கிடாசலபதியே (க)

**முடிவு**

உமையவள் புதல்வன் மணிமுடிச் சென்னி
ஓரறு யிதழ் மலர் முகமாய்
இமையவர் கவியால் கிருபையு முனதால்
யே ழேரறுபதி வெள்ளஞ் சேனை
கமமேனறிகவும் அசுரர்கள் கிளையைக்
கதரிட வதகுலை செய்த
வமரர்கள் கலிதீர் தருள்குக மா
மாவளர் வெங்கிடாசல பதியே (உயசா)

**குறிப்பு** : "மருதூர் வளர் வெங்கிடாசலபதியே" என்னும் இறுதியடிகளையுடைத்தாய் அமைந்துள்ள 26 விருத்தங்களையுடையது இந்நூல். முடிவுற்றதாகத் தெரியவில்லை. திருமாலின் சிறப்புச் செயல்களைக் கூறி விளித்து, போற்றி வணங்குவதாய் அமைந்துள்ள இப்பாடல்கள் சிறந்த வைணவ அன்பர் ஒருவரால் இயற்றப்பட்டவை என்பதைத் தவிர பிற வரலாறுகள் எதையும் உணர்த்தவில்லை. பொள்ளாச்சியை சார்ந்த திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8662

# உருக்குமாங்கதப் படலம்

### RUKMANGATHAP PADALAM

Palm - leaf : 38.5 x 2.5 c.m. & 35 x 2.5 c.m. Foll. 32
Lines 5 - 6 on a page. Tamil. Fair. Old.
Extent 600 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE, PRINTED**

A portion of the story Bhagavatam i.e., the story of Rukmangatha.25 stanzas describe this :

பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் கொடுக்கப்பட்டது இச்சுவடி. பாகவதத்தின் ஒரு படலமாகிய உருக்குமாங்கதப்படலம் எழுதிவைக்கப்பட்டுள்ளது. அதிலும் கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்றும் உருக்குமாங்கதப் படலத்தில் முதல் இருபத்தைந்து பாடல்களுமே காணப்படுகின்றன. சுருங்கிய பொழிப் புரையும் கொடுக்கப்பட்டுள்ளது.

இறுதியில் வில்லிபாரதம், கிருட்டிணன் தூது சருக்கத்தில் -

"பம்புலாமகில் சந்தனம்' என்று தொடங்கும் முதல் சுமார் 15 பாடல்கள் சுருங்கிய உரையுடன் எழுதிவைக்கப்பட்டள்ளன. உரைநடை மிகச் சாதாரணமானது.

## R. 8663

# சசிவன்ன போதம்

### SASI VANNA BOTHAM

Palm - leaf : 40 x 3.5 c.m. Foll. 28
Lines 8 - 10 on a page. Tamil. Fair. Old.
Extent 1000 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE, PRINTED**

"சசிவன்ன போதம்" என்னும் இச்சுவடி, பொள்ளாச்சி திரு. என். எஸ்.

குப்புசாமி, எம்., ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது. அச்சாகியுள்ளது. அச்சுநூலில் உள்ள கடவுள் வணக்கப்பாடலாகிய "மதிபருதி" என்று தொடங்கும் பாடல் இச்சுவடியில் காணப்பெறவில்லை..

"அலகையச்ச மறவகை வான்களும்'

என்று தொடங்கும் பாடல் முதல் 108 பாடல்களும் உள்ளன. அவ்வப் பாடலின் கீழ் சுருங்கிய பொழிப்புரையும் காணப்படுகின்றது. முதல் ஏடு முறிந்து காணப்படுகிறது. ஆறாம் ஏடு இல்லை. பிற நன்றாக உள்ளன.

## R. 8664 & 65 (One Bundle)

Palm - leaf : 33 x 2.5 c.m. Foll. 42
Lines 5 on a page. Tamil. Fair. Old.
Extent 600 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

## R. 8664

## சடாட்சர அந்தாதி

## SADATCHARA ANTHATHI

Foll. 1 - 27 Extent 400 granthas.

**COMPLETE, PRINTED**

Running in antadi style, it describes based on saiva philozophies like Sariyai, Kiriyai and Yoga, the greatness of Lord Muruga.

**தொடக்கம்**

உச்சியின் மகுட மின்ன வொளிர்தர வுதலினோடை
வச்சிர மருப்பி னொற்றை மணிகொள் கிம்புரி வயங்க
மெய்ச்செவி தவறிதூங்க வேழமாமுகங்கொண் டுற்றக்
கச்சியின் விகடச் சக்கர் கணபதிக் கன்பு செய்வோம்.

சகலசகன் வசீகரமாஞ் சகரத் தாலே
தன்முதலா யழைத்துவடு மகாரத் தாலே
சிகமுதலாய் மோகிக்கும் அ காரத் தாலே
சிவமுதலாய் தம்பிக்கும் நகாரத் தாலே
பகைபசிநோ யகற்றிவைக்கும் பகாரத் தாலே

பகைத்தவரைக் கொன்றுவரும் வகாரத் தாலே
இகபரமு மிரண்டுமெனக் களித்த சோதி
எம்பிரான் சடாட்சரத்தி னியல்பு தானே (க)

ஆனந்த மாறெழுத்தா லையமானெ தங்கமெல்லாம்
தானந்த மாதிமுதற் பொருளாவி சற்ருங்கமுநீ
மோனந்த மென்னுளதென் னுளதுன்னுள முன்னுளதா
லீனந்தம் போக்கியெனை நீயாதாகிய யென்குருவே (க)

முடிவு

வையஞ் சலமங்கி காலவான் பலவுயிர் வானமுடிவெட்
டெய்யும் பரமுதல்ச் சாலவதெல்லா மெம்பிரான் முருகோன்
தெய்யென் நின்றநின்ருடச் சிலம்போசை திருவிளையாட்
டையநின் னங்கம தென்னங்கமாய் நின்ற தானந்தமே.
சிவசமயம் சுந்தரேசர் மீனாட்சி சகாயம்.

**சடாட்சரந்தாதி முற்றும்**

**பின்னனியுரை** : பிலவஹி புரட்டாசி மீ நல்லிக்கவுண்டன் வலசிலே யிருக்கும் குட்டிசெட்டிமகன்.............பழனிச் சாமிசெட்டிஏடு.

**குறிப்பு** : முருகனைப் பற்றிய செய்திகளடங்கியது இச்சுவடி. . சாயை, கிரியை, ஞானம் என்னும் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்து. இந்நூல் D 250ல் உள்ள சுவடிபோன்றதே. சில விடத்து வேறுபாடுகள் காணப்படுகின்ன. ஆர் 7006ல் உள்ள சுவடியினும் வேறாயது. பொள்ளாச்சி, திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8665
## தினகர வெண்பா
## TINAKARA VENBA

Foll. 28 - 41. Extent 200 granthas.
Begins on foll. 28 of the Ms. described under No. R. 8664

**INCOMPLETE**

57 venba songs; all end with a couplet of Tirukkural. Each song contains about 'Thinakaran'

**குறிப்பு** : பொள்ளாச்சி, திரு. என்.எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது இச்சுவடி. 57 வெண்பாக்கள் மட்டுமே காணப் படுகின்றன. குறையாக உள்ள சுவடி. ஒவ்வொரு வெண்பாவும் தினகரன் என்பாரை விளித்துக் கூறுவதாக அமைந்துள்ளது. இறுதியில் ஒரு திருக்குறளைப் பெற்று முடிகிறது. நூல் ஆசிரியர் போல்வன அறிய இயலவில்லை. இந்நூலக ஆர் 6635ல் உள்ள சுவடிபோன்றது.

## R. 8666
## வேலவர் காதல்
## VELAVAR KATHAL

Palm - leaf : 38.5 x 2.5 c.m. Foll.
21 Lines 4 - 5 on a page. Tamil. Fair. Old.
Extent 250 granthas.
Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE**

A 'Kadal' type literary piece on Lord Muruga. Sung in poetical form.

**தொடக்கம்**

வெள்ளிமைலை யானுதவு வேலவர்மேல் காதல்சொல்ல
வள்ளி தேய்வானை மணவாளன் காப்பாமே
வேல்முருகன் காதல் விளம்புதற்கு மிக்கதிரு
மால்மருக னாகவந்த வள்ளலே காப்பாமே
சீதைவிளை யாடுமெங்கள் தென்பழநி வேலவர்மேல்
காதல்சொல்ல வேதக் கடம்பனே காப்பாமே
சுந்தரர்க்குத் தூதுசென்ற சோமசுந்தரே சாந்த..........
......... மேல் காதல்சொல்ல கந்தனே காப்பமே.

**முடிவு**

பூமருவி மென்குழலீர் பொன்னே உனதுமுகத்
தாமரையைக் கண்டுநான் சஞ்சலங்கள் தீரேனே
வாராடுங் கும்பமுலை வஞ்சயே யுன்னுடனே
சீராமச் சீராடிச் சேர்ந்துவிளை யாடேனே
சந்ததமு முங்கள் தனங்கள் பளபளெனக்
கந்தமிடுங் கஸ்தூரி கைகுளிரப் பூசேனே

**குறிப்பு** : பொள்ளாச்சி, திரு. என்.எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது இச்சுவடி முற்றுப்பெறாத சுவடி. வெள்ளிமலை வேலவர் மீது பாடப்பட்ட 'காதல்' என்ற தொடர்கள் நூலுள் காணப்படுகின்றன. பலவிடத்தும் பழநி மலை பற்றியே குறிப்பிடப்படுவதால் - வெள்ளிமலை என்பது பழநி மலையே என்பது பெறப்படுகிறது. முருகனின் சிறப்பும் பெருமையும் அவனது அருட்குணமும் அரியசெயல்களும் விதந்து விளக்கப்படுகின்ற நூலாகும்.

காப்புப் பாடல்கள் தொடக்கத்தில் உள்ளன எனினும் முதல் ஏடு முறிந்து காணப்படுகிறது. முடிவு பெறவில்லை. எனவே, முன், பின் அறிந்து ஆசிரியர் பெயர் முதலியன அறிய இயலவில்லை. நூலின் 'பா நடை' நன்றாக இருக்கிறது.

## R. 8667
## சரவண கவசம்
## SARAVANA KAVASAM

Palm - leaf : 36 x 2.5 c.m. Foll. 13
Lines 6 on a page. Tamil. Fair. Old.
Extent 300 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE**

33 devotional stanzas sing Lord Saravana (Muruga) to shower grace. Author, not known.

**தொடக்கம்**

சம்புமுனி குருமுனிசொல் வேதமுனி போதமுனி
தமிழ்முனி அகஸ்தீ சுறா
சரிதையங் கிரியரு யோகமென ஞானமெனும்
நாற்பாதந் தானாகிநின்ற பரனே
கும்பமுனி கலசமுனி ஈராறு வரை செல்வங்
குஷ்டமா முனியே வாலை
கோமளை மனோன்மணி சுந்தரனை நாடியவர்
கூடவிளை யாடும் பரனே
நம்பினே னுனதுபத மண்புடனே மனதிலும்

நாவிலும் மோகசறம்
நழுவாமல் முன்னின்று துணையாக வேநாடி
நல்லருள் சிறந்துதென் பொதிகை.
செந்திவாழ் நாயன்மேற் செப்புகவி சித்தனுக்குச்
செயல்தந்து காத்தருள் செய்
தட்சிணா மூர்த்தியே திவ்விசிவ ஞானகுருவே (க)

**முடிவு**

நெஞ்சகந் தன்னிலே நிறைந்தசெய காரணா
நிர்மல வருக நெசமா
நாயினேன் தாய்தந்தை போலவே நீயென்முன்
வருக வருக
நஞ்செனப் பிழைகள் நான் செய்யினும் பொறுத்தருளும்
நாதனே வருக வருக
நம்பினேன் உன்சரணம் எங்குநான் செல்கினும்
நாடி நீ வருக வருக
அஞ்சல் என்றுள பயயந்தீத் தருளும்
ஐயனே வருக வருக
ஆண்டி யுனக்கடிமை யடியேன் நனைக்காக்க
அரைநொடியில் வருக வருக
செஞ்சொல் நீ பொதிய முனி போற்றும் பராபரா
செந்திலம்பதிநாயகா
ஷத்திரியோம் சரவணப வாயநம அரகரா
சிவசுப்பிர மண்ணிய தேவே (௩0௩)

**குறிப்பு :**

"பொதிய முனி போற்றும் பராபரா"
செந்திலம்பதி நாயகா"
"சிவ சுப்பிர மணிய தேவே" என்னும்

ஈற்றடிகளையுடைத்தாய் அமைந்திருக்கும் இந்நூல் 'சரவண கவசம்' என்னும் பெயரையுடையது. இயற்றியவர் பெயர் முதலியன அறிய இயலவில்லை. எழுத்துப்பிழைகள் பல காணப்பெறினும் நடைமிகவும் நன்றாக உள்ளதொரு நூல். பொள்ளாச்சியைச் சார்ந்த திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களிடமிருந்து பெறப்பட்டது. 33 பாடல்களாலாகி முற்றுப் பெற்றதாகவே காணப்படுகிறது.

# R. 8668
# முருகன் தோத்திரம்
# MURUGAN THOTTIRAM

Palm - leaf : 36.5 x 2.5 c.m. Foll. 25
Lines 4 on a page. Tamil. Fair. Old.
Extent 150 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**COMPLETE**

50 songs speak about Lord Muruga asking benefits. Author, to be known.

**தொடக்கம்**

அடலணைத் திருக்கோபுர வாசலுக் கப்புரத்தென்
வடவருகிற சென்றுகண்டு கொண்டேன் பருவார்தலையிற்
நடபுடனெப் பொடுகுட் டொடுசக் கரைமுக்கியகை
கடதடகும் பக்களிற்றுக் கிணையே களிற்றிணையே.
தண்டாயுதபாணி துணை செய்யவும்
தடுங்கோ மனத்தை விடுங்கோ வெகுளியைத் தானமென்று
மிடுங்கோ ளிருந்தபடி யிருங்கோ ளேளுே பாருமுய்யக்
கொடுங்கோபச் சூரெளக் குன்றந்திறக்கத் துணை தகை வேல்
விடுங்கோ னருள்வந்து தானே எமக்கும் வெறாப்படுமே (க)

**முடிவு**

ஒருவரைப் பங்கிலுடைய குமாரருடை மணிசேர்
திருவரைக் கிண்கிணி யோசைபடைத்திடுக் கென்றரக்கர்
வெருவரைத் திக்குசஞ் செவிடுபட்டெடும் வெற்பங்குலுங்கடப்
பருவரைக் குன்றும் தீர்ந்தது தேவரபயங் கெட்டதே. (ருய)

சிவ மயம்

**குறிப்பு** : சரவணப்பூந் தொட்டிலேறி, சிரவுஞ்சங்குலைத்து, கிரியுருவக் கதிர்வேல் தொட்டுச் சிறந்து விளங்குமவன் குமரன் என்பனபோன்ற சிறப்புச் செயல்களால் குமரனை விளித்து வாழ்த்துவதாக அமைந்த 50 பாடல்களைக் கொண்டது இச்சுவடி. பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8669
## சடாட்சரத் தந்தாதி
## SADATCHARAT TANTHATHI

Palm - leaf : 34 x 2.5 c.m. Foll. 11
Lines 4 - 5 on a page. Tamil. Fair. Old.
Extent 160 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE**

All the 48 stanzas here sing Lord Muruga.

**குறிப்பு** : முருகனைப் பற்றிப் பேசப்படுகின்ற இச்சுவடி ஆர் 8664, டி. ற50 ஆகியவற்றைப் போன்றதே. 48 பாடல்கள் மட்டுமே காணப்படுகின்றன. பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8670
## பகவத் கீதை
## BAGAVATH GITHAI

Palm - leaf : 34.5 x 2.5 c.m. Foll. 87
Lines 6 on a page. Tamil. Fair. Old. Extent 2000 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE**

Content of Bhagavat Gita in lucid prose.

**தொடக்கம்**

தருமராசா வகையும் துரியோதனவகையும் யுத்தத்துக்கு ஆயித்தப்பட்டு இரண்டு தளமுமிருக்கிறபோது திருராட்டிரன் சிந்திச்சுக் கொண்டேயிருக்கையில் அப்போ அவ்விடத்துக்கு வேதவியாச மகாரிஷிவந்து திருதராட்டி ரனுடனே ஒரு வார்த்தை சொல்லுகிறார் - ஸ்ரீ கிருஷ்ணசுவாமி பாபாரம் அடக்க அவதரித்தார். இந்த யுத்தத்தில் ராசாக்களுக்கெல்லாம் காலங்கிட்டிக்கொண்டிருக்கிறது. ஆர் வேண்டாமென்றாலும் போகாது.

முடிவு

அஞ்சு காரணமேதென்றால் சரீரமுங் கர்த்தனான சீவனும் கர்ம இந்திரியம் ஞான இந்திரிய மனசுமிந்தப் பதினோரு இந்திரியங்களும் இந்திரியங்களையுஞ் சரீரத்தையும் நடத்திவிக்கிற பிராண அபானாதி பேத முண்டான வாயுக்களு....

**பின்னணியுரை** : கண்ணாயிரஞ்செட்டி மகன் சண்முக செட்டி ஏடு.

**குறிப்பு** : பகவத் கீதை என்னும் பெயரையுடையது இச்சுவடி. வேதவியாசர் ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பற்றித் திருதராட்டிர னிடத்திலே எடுத்துக் கூறுவதாகத் தொடங்குகிறது. பிறகு சுலோகத்திற்கு அர்த்தம் சொல்லுகிறோம் என்பதாகக் கூறி அருச்சுனன் சோகவத்தியாயம் தொடங்கி பதினேழு அத்தியாயங்களுக்கும் சுருங்கிய பொழிப்புரைபோல பொருள் கூறப்பட்டிருக்கிறது. பதினெட்டாவது அத்தியாய இறுதிப் பகுதிமட்டும் குறையாக உள்ளது. சொற்பொழிவு முறையில் நடை அமைந்துள்ளது. மிக எளியநடை எழுத்துப் பிழைகள் மிகுதி.

பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8671 - R 8674 (One bundle)

Palm - leaf : 39 x 3 c.m. Foll. 53
Lines 6 - 7 on a page. Tamil. Fair. Old.
Extent 1370 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A.,Pollachi, in 1973 - 74

## R. 8671
## திருப்புகழ்
## THIRUPPUGAZH

Foll. 1 - 13 Extent 340 granthas.

**INCOMPLETE**

Herein are the songs from Arunagirinathar's Thiruppugazh and from Manickavasakar's Thiruvakaam

**குறிப்பு** : 'திருப்புகழ்' என்னும் பெயருடைய இச்சுவடியுள் "முத்தித்தரு பத்தித் திருநகை" என்று தொடங்கும் பாடலே முதற் பாடலே அமைந்துள்ளது அடுத்து

| | |
|---|---|
| "நாகங்கரோமங் காட்டி" | - பாட்டு 1098 |
| "நாவிதந்துகலாதிநமோரம" | - பாட்டு 94 |
| "மருக்குலாவிய மலரணை" | - பாட்டு 802 |
| "இருப்பவல் திருப்புகழ்" | - 247 |

போன்ற ஒரு சில பாடல்கள் ஆங்காங்கு தேர்ந்து எழுதிவைக் கப்பட்டுள்ளன. இப்பாடல்கள் 1 முதல் ஏடுகள் முடிய காணப்படுகின்றன. பத்தாம் ஏடு காணப்படவில்லை. 11, 12, 13 ஆகிய ஏடுகளில் திருவாசகத்திலிருந்து, கோயில் திருப்பதிகத்தில் இறுதிப் பாடல்கள் சிலவும் செத்திலாப்பத்தின் பத்துப் பாடல்களும் எழுதிவைக் கப்பட்டுள்ளன.

பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது இச்சுவடி.

## R. 8672
## கோலாகல வகுப்பு முதலியன
## KOLACHALA VAGUPPU MUTHALIYANA

Foll. 8 Lines. Extent 220 granthas.
Begins on foll. 14 of the Ms. discribed under No. R. 8671.

**COMPLETE**

Chanting of some mantiras to attain benefits in daily life.

**தொடக்கம்**

ஓம் கணபதி, உக்கிற கணபதி, உத்தண்டகணபதி, சக்கிற கணபதி, சத்தி கணபதி, ஓங்காரி, ரீங்காறி, சிறுசக்கரி, சிறியும், சறீநங்காறி, பாப்பிறுமி பத்திரி, பவானி பரமேசுபரி, இமவான்புத்திரி, ஈசுபதி, சருவசங்காறி, சருவகோலாகலி, சத்துருசங்காறி, புசகேந்திரபூசணி, ஸ்ரீகெவுரி, புஷ்பவாசினி, கச்சாணி, கல்யாணி, சுகாத்திரி, சூட்சி சுரூப காறணி, சராயி, மாதங்கி, வயிஷ்ட்டுணுவி, திரிபுரத்தி, திரிபுர கோலாகலி, திரிபுர சங்காரி, திரிபுருந்தகி, புஷ்பகாந்தருணி, பூச்சக்கரி, அஞ்சலி அம்பிகை பாற்பதி ஆனந்தி, கோகநத்தி, செகத்தி குமரி.

முடிவு

எப்பேர்ப்பட்ட பல துஷ்டத் தேவதையும் மடிமடிமடிந்து முடிமுடிமுடிந்து படுபடுபட்டு மக்கு மக்கு மொக்கு மொக்கு நோக்கு நோக்கு தொக்கு தொக்கு திமிதிமி குடங் குடங் குடிங் குடிங் குடொங் குடொங்கு யெரி யெரி உரி உரி ஓரி ஓரி மரி மரி முரி முறி அறு அறு அறுந்து துணி துணி துணிந்து படு படு பட்டுக் கெடு கெடு கெட்டுப் பலவும் பறந்துபோகச் சுவாகா.

வகுப்பு முற்று - முடிந்தது.

**குறிப்பு** : 'சூர சங்கார கோலாகல வகுப்பு" என்னும் தலைப்புடன் தொடங்குகிறது இப்பகுதி. சைவ, வைணவக் கடவுளர் பலர்மீது மந்திரம் ஓதித் தோத்திரம் செய்யும் முறையில் அமைந்துள்ளது.

இதே போல "ஓம் சிவ சிவ சண்முகாய" என்று தொடங்கும் சுருபவகுப்பு' 'இருபிறையெயிறு' என்று தொடங்கும் 'சேவக வகுப்பு', பிறவாய தேவேந்திர வகுப்பு, கடைக்கணிய வகுப்பு போல் வனவும்' எழுதிவைக்கப்பட்டுள்ளன.

## R. 8673

## இராமாயணம்

## RAMAYANAM

Foll. 13 Extent 340 granthas.
Begins on Foll. 22 of the Ms. described under No. R. 8671.

**INCOMPLETE, PRINTED**

102 stanzas deltineat the story of Ramayana by Kambar.

**குறிப்பு** : கம்பராமாயணம், பாலகாண்டத்ததுள் "ஆயவ னொருபகல் அயனை யேநிகர்" என்று தொடங்கும் திருவவதாரப் படலப் பாடல் முதல் நூற்றிரண்டு பாடல்கள் தொடர்ந்து காணப்படுகின்றன. அச்சாகியுள்ள பாடல்களைப் போன்றவையே. வேறுபாடு இல்லை. 32ஆம் ஓலை வெற்றோலையாகவே இருக்கிறது.

## R. 8674

# திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

## THIRUCCHENDUR PILLAIT TAMIZH

Foll. 18 Extent 470 granthas.
Printed; Incomplete
Begins on Foll. 35 of the Ms. described under No. R. 8671.

A Pillai Tamil type literature, Already printed. Songs on Muruga of Thiruchendur.

குறிப்பு : திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ் என்னும் இச்சுவடி. திருச் செந்தூரில் கோயில் கொண்டருளும் குமரன் மீது பாடப்பட்டதாகும். முழுமையாக அச்சாகியுள்ளது. இச்சுவடியுள், தாலப் பாருவப் பாடல்கள் - 7, சப்பாணிப் பருவப்பாடல்கள் 4, முத்தப் பருவப் பாடல்கள் 5. அம்புலிப் பருவப் பாடல்கள் 6, சிற்றில் பருவப் பாடல்கள் 10, வருகைப் பருவப் பாடல்கள் 10, சிறுபறைப் பருவப் பாடல்கள் 2 ஆகியவை மட்டுமே இதே வரிசையில் காணப்படுகின்றன.

இறுதியில் திருப்புகழ் - ஒருபாடலின் சிலவரிகள் ஒரு பக்கத்தில் காணப்படுகின்றன. சூரசங்கார கோலாகல வகுப்பு என்னும் பகுதி மீண்டும் ஐந்து பக்கங்களில் காணப்படுகிறது.

**இறுதி ஏட்டில்**

"ஸ்ரீமுக ஸ்ரீ பங்குனி மீ ரு தீ. வெள்ளிக்கிழமையன்றை தினம் படித்து எழுதி முடிந்தது. முற்றும்."

"நல்லிக் கவுண்டன் வலசிலிருக்கும் குட்டி செட்டிமகன் கண்ணாயிரஞ்செட்டி, திருப்புகழ், திருவாசகம், வகுப்பு, ராமாயணம், திருச்செந்தூர்பிள்ளைத் தமிழ் இதுவெல்லாம். எடுத்தவன் வாசித்துப் பார்த்துக் கொடுக்கவும்" என்ற செய்திகள் காணப்படுகின்றன.

## R. 8675

# திருவாசகம்

## THIRUVASAGAM

## SADATCHARAT TANTHATHI

Palm - leaf : 33.5 x 2.5 c.m. Foll. 11
Lines 6 on a page. Tamil. Fair. Old.
Extent 200 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy, M.A.**, Pollachi, in 1973 - 74

**INCOMPLETE**

Some textual portions of Manickavasakar's Thiruvasakam.

குறிப்பு : "திருவாசகம்" என்னும் இச்சுவடியுள் சிவபுராணம். கீர்த்தி திருவகவல் ஆகிய இருபகுதிகளும் முழுமையாக (மூலம் மட்டும்) உள்ளன. அடுத்துத் திருவண்டப்பகுதி முதல் 80 வரிகள் மட்டும் - காணப்படுகின்றது. இச்சுவடி பொள்ளாச்சியைச் சார்ந்த திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8676
## கோடங்கி நூல்
## KODANGI NUL

Palm - leaf : 34 x 2.5 c.m. Foll. 32
Lines 4 - 6 on a page. Tamil. Fair. Old.
Extent 250 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74.

**INCOMPLETE**

A branch of astrology called Kodangi is written here. Goes in poetry.

**தொடக்கம்**

ஆதி கணபதியே அய்யனையுந் தெண்டனிட்டேன்
ஆறுபடை வீடுடைய ஆண்டியெந்தன் கம்பை யிலே
வேலுமயிலுங் கொண்டு விஷ்த்தாரமாய் வருவாய்
சாலோக சாமீப சாரூப சாயூட்சிய
மயிலாடும் பாறையிலே ஒயிலாகவே வளர்ந்த மன்னவனே
நீதிரும்பு

மேஷராசியின் பலன்

ஆனதொரு பூமிதனில் அன்பு நிலைகுறித்து
மனையிட முந்தாமும் வீழும் பதியதனில்
இல்லிடமும் வாசல் இருக்கும் பதியதனில்
வல்லியுந் தாறுமாறு மாரட்டஞ் சொற்பனமும்
கோழாறுஞ் சிந்தனையும் குழப்பம் வருவானையென்று
எண்ணி மனதில் வைத்து இன்பமுடன் கேட்டா நீ.

**முடிவு**

நாலுபேர் கூடி ஞாயங்கள் தீர்த்துவிட்டார்
குறுக்க மிக வந்து ஒரு கோளாறாய்த் தானிருந்து
தீர்ந்த வழக்கைத் தீரவில்லை யென்றுரைத்தான்
இரக்கடிக்க வேணுமென்று எண்ணினார் சிந்தையிலே.

**குறிப்பு** : கோடங்கிநூல் என்னும் பெயருடைய இச்சுவடி சோதிடம் பற்றிய செய்திகளைக் கூறுவதாகும். அதிலும் குறிப்பாக ஆருடம் கூறுகிற நிலையில் அமைந்துள்ளது மேஷம், ரிஷபம், மிதுனம், கற்கடகம் ஆகிய நான்கு இராசிகளுக்கு மட்டுமே குறிப்புகள் காணப்படுகின்றன. இதே செய்திகளோடு பன்னிரண்டு இராசிகளுக்கும் உரிய குறிகளை எடுத்துக் கூறுவதாக அமைந்து படியெடுக்கப்பட்ட சுவடி ஒன்றும் இந்நூலகத்தில் உள்ளது. எண் ஆர். 4441. சிறிது வேறுபாடுடையது.

## R. 8677

## பொன்னம்பலவன்துதி

## PONNAMBALAVAN THUTHI

Palm - leaf : 38 x 2.5 c.m. Foll. 15
Lines 4 on a page. Tamil Fair. Old.
Extent 120 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy**, M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE PRINTED**

30 Stanzas here invoke Lord Ponnembalam (Siva) Author, Gurunamacchivayar of Chidambaram. This is only a portion of his work.

குறிப்பு : "பொன்னம்பலவனே பரமராசியனே" என்னும் முடிவடிகளையுடைய பாடல்களால் ஆகிய மாலை ஆதலின் "பொன்னம்பலவன் துதி" என்னும் தலைப்பு கொடுக்கப்பெற்றுள்ளது. சிதம்பரம் 'குருநமச்சிவாயர்' என்பவரால் இயற்றப்பெற்ற இந்நூல் நூறு பாடல்களால் ஆகியது. "பரம ராசிய மாலை 'என்னும் பெயரால் ஆகியது 'பரமராசிய மாலை' என்னும் பெயரால் அச்சாகியுள்ளது. ஆனால் இச்சுவடியுள் முப்பது பாடல்கள் மட்டுமே காணப்படுகின்றன.

## R. 8678
## திவாகர நிகண்டு
## THIVAGARA NIGANDU

Palm - leaf : 33 x 2 c.m. Foll. 26
Lines 4 -6 on a page. Tamil. Fair. Old.
Extent 300 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE, PRINTED**

A Tamil lexicon called nighants. Runs in metrical stanzas.

**குறிப்பு** : 'சேந்தன் திவாகரம்' என்ற பெயரால் அச்சாகியுள்ள நூலேயாகும் 'திவாகர நிகண்டு' என்னும் இச்சுவடி. காப்புப்பாடல். தொடங்கி தெய்வப் பெயர்த்தொகுதியில் கோடை காலத்தின் பெயர் என்பது முடிய உள்ள பகுதி மட்டுமே காணப்படுகிறது. அச்சு நூலுக்கும் இச்சுவடிக்கும் வேறுபாடு அதிகம் இல்லை. ஆயினும் பல சொற்கள் மாறுபட்டனவாகக் காணப்படுகின்றன. பொள்ளாச்சி திரு. என். எஸ். எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்டது.

## R. 8679
## பட்டணப் பிள்ளையார் முறையீடு
## PATTANAP - PILLAIAR MURAIYEEDU

Palm - leaf : 39 x 2.5 c.m. Foll. 8
Lines 5 on a page. Tamil. Fair. Old.
Extent 135 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE, PRINTED**

Contains several portions of the songs of the famous poet Pattinattar ('belongs to city')

**குறிப்பு** : பொள்ளாச்சி திரு. என். எஸ். குப்புசாமி, எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்ட இச்சுவடி பட்டிணப் பிள்ளையார் முறையீடு என்னும் பெயருடையது. 'முதல்வன் முறையீடு' என்னும் தலைப்பில் (பட்டிணத் தார் பாடலில்) அச்சாகியுள்ள 72 கண்ணிகளும், அருட்புலம்பல் என்னும் தலைப்பில் அச்சாகியுள்ள 18 கண்ணிகளும் மட்டுமே காணப் படுகின்றன.

## R. 8680
## பாரதம்
## BARATHAM

Palm - leaf : 39.5 x 4 c.m. Foll. 37 (92 - 128)
Lines 7 - 9 on a page. Tamil. Fair. Old.
Extent 1300 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

**INCOMPLETE; PRINTED**

War portion of the famous Mahabarath has been written in stanzas. Author, Villiputhurar.

**குறிப்பு** : வில்லிப்புத்தூரார் பாரதத்தின் ஆறாம் போர்ச்சருக்கம் தொடக்க ஏட்டில் தொடங்குகிறது. அடுத்து ஏழாம் போர்ச்சருக்கமும் முழுமையாகக் காணப்படுகிறது. அதைத் தொடர்ந்து பதின்மூன்றாம் போர்ச் சருக்கமே காணப்படுகிறது. அதிலும் 117 பாடல்கள் மட்டுமே எழுதப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலுக்கும் சுருக்கிய பொழிப்புரையும் காணப்படுகிறது. பொள்ளாச்சி, திரு. என். எஸ். சுப்புசாமி எம்.ஏ., அவர்களால் அளிக்கப்பட்ட சுவடி ஏட்டின் எண்களும் 92 முதல் 128 முடியவே காணப்படுகின்றன.

## R. 8681 & 8682 (One Bundle)

Palm - leaf : 40.5 x 3 c.m. Foll. 30
Lines 6 - 8 on a page. Tamil. Fair. Old.
Extent 750 granthas.

Presented by Thiru. **N.S. Kuppusamy,** M.A., Pollachi, in 1973 - 74

## R. 8681

## கரவகுப்பு

## KARAVAKUPPU

Palm - leaf : 41 x 3 c.m. Foll. 11
Lines 7 on a page. Tamil. Fair. Old.
Extent 250 granthas.
Same work described under R.No. 1206 C.

**INCOMPLETE**

குறிப்பு : ஆர் 1206 சி. எண்ணில் உள்ள சுவடியைப் போன்றதே. அதன் குறிப்பையும் காண்க.

## R. 8682

## திருவாசகம்

## THIRUVACAKAM

Palm - leaf : 41 x 3 c.m. Foll. 19
Lines 6 on a page. Tamil. Fair. Old.
Injured Extent.

**INCOMPLETE**

## R. 8683

## சூளாமணி நிகண்டு

## SULAMANI NIKANDU

Palm - leaf : 41 x 3 c.m. Foll.
Lines 6 on a page. Tamil. Injured Extent .

**INCOMPLETE**

## R. 8684

## திருக்கருவையந்தாதி

## THIRUKKARUVAI ANATHATHI

Palm - leaf : 41 x 3 c.m. Foll.
Lines 6 on a page. Tamil.
Injured.

**COMPLETE**

Same work as that described under D.No. 246

குறிப்பு : இந்நூல் டி. எண். 246ல் விளக்கப்பட்டிருப்பதைப் போன்றதே. திருக்கருவைப் பதிற்றுப்பதிதந்தாதி என்றபெயரும் இருக்கிறது. அதன் குறிப்பும் காண்க.

## R. 8685

## நாராயண சதகம்

## NARAYANA SATHAKAM

Palm - leaf : 38 x 2.5 c.m. Foll.22
Lines 6 on a page. Tamil.
Injured; Extent 375 granthas

**COMPLETE**

Same work as that described under R. No. 530

ஆர். 530 ஆம் எண்ணில் விளக்கப்பட்டிருக்கும் சுவடியைப் போன்றதே. அதன் குறிப்பைக் காண்க.

## R. 8686 & 8687 (One Bundle)

Palm - leaf : 34.5 x 2.5 c.m. Foll. 46
Lines 4 on a page.
Extent 500 granthas

**COMPLETE**

## R. 8686
## தோத்திரங்கள்
## TOTTIRANGAL

Palm - leaf : 34.5 x 2.5 c.m. Foll. 8
Lines 4 on a page.
Extent 75 granthas

**COMPLETE**

Invocating songs invoking gods like Vinayaka.

**தொடக்கம்**

"செய்யசிந்தும் வதனம் சிறப்றா சரணம்
திருவிழி மூன்றுடைய தேவனே சரணம்
கைஐந்து மருப்புடைய காரணா சரணம்
கரியமால் மருகனெனுங் கடவுளே சரணம்".

**முடிவு**

**ஆவடிக் கன்னிமாரிபேரில்**

"செய்யுபுகழ் பெற்றமகள் தேவியுத் தமியே
சேவலங் கொடியானை யீன்றதெள் ளமுதே
தைய்யலார்க்கு அரசியென வந்தவித் தகியே
சதநிசிங் காமியெனும் நாதாபத் தினியே".

**குறிப்பு** : இச்சுவடி தோத்திரங்கள் என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே விநாயகர் முதல் பல்வேறு கடவுள் பேரில் பாடல்கள் உள்ளன. இச்சுவடி ஆர் எண். 156 போன்றிருந்தாலும் பல பாடல்கள் மாறுபடுகின்றன.

## R. 8687
## திருக்குற்றாலக் குறவஞ்சி
## THIRUKKURRALAK KURAVANJI

Palm - leaf : 34.5 x 2.5 c.m. Foll. 38
Lines 5 on a page.
Extent . 570 granthas

**COMPLETE**

Same work under described D. No. 308.

**குறிப்பு** : "திருக்குற்றாலக் குறவஞ்சி' எனும் இச்சுவடி டி.எண் 308 இல் வருணிக்கப்பட்டிருக்கும் சுவடியை ஒத்தே காணப்படுகிறது. அச்சாகியுள்ளது. அதன் குறிப்பும் காண்க.

## R. 8688

## வரதவேங்கடராயன் சதகம்

## VARATHA VENKATARAYAN SATHAKAM

Palm - leaf : 39 x 3.5 c.m. Foll. 26
Lines 8 on a page.
Extent . 725 granthas

**COMPLETE**

100 songs on Varata Venkatarayan.

**தொடக்கம்**

"செந்திருவாள் மார்பன் திருவேங்கிட சதகம்
பைந்தமிழால் நீதிநெறி பாடவே - வந்தருளும்
கார்முகமுஞ் சங்கரத்தான் கைத்தா மணியணிந்த
கார்முகமும். சங்கரத்தான் காப்பு

ஆறுமுகவனை நாறும்மலர்கொடு
கூறுமடியவர் பேறு பெறுவரே
வேலும் மயிலும் துணை. சிவமயம்
பூமேவும் திசைமுகனை யுந்திதனி லீன்றதுவும்

வேதாகம மெலாம் புருஷோத்தமன் தேய மென்பதும்
பூசுரர் பொருந்து மந்திர காமமும்.
தேமேவு மலர்மங்கை மார்பில்வளர் சீரம்
சிகரம்தனில் காத்தருள்வதும்".

**முடிவு**

"சரிய சங்கீத சாசல்லாப பிரசங்கமொடு
நதிகள் திகம்பிரிய மாயணைந்தின்பமா .........
.............. பேசற்ற பிரிவுடை இய சியென்பார்

வாச மலரணிகிண பரனாரி சோதான மணவாளனுருபன்ன
யன்னமனதிலுரை யலமேலு மங்கை ம....
"செம்பவள மென்பாசனீர் கொண்டு மாறாத சிருணாசிகுமி
தென்பார் ............ ககுவ மதன்நி...

குறிப்பு : இந்நூல் 'வரத வேங்கடராயன் சதகம்' எனும் பெயரினை உடையது. இதன்கண்ணே, சில நீதி நெறிமுறைகள் சொல்லப் பட்டிருக்கின்றன. வரத வேங்கட ராசன் பாராட்டப்பட்டிருக்கின்றான். புராணச் செய்திகளும், இறைவனின் திருவிளையாடல்களும், கடவுள் குடும்பத்தில் உள்ளவர்களுக்கிடையே உள்ள உறவுமுறைகளும் பல இடங்களில் கதைகளோடு கூறப்பட்டிருக்கின்றன. முற்றுப் பெறவில்லை.

## R. 8689 TO 8693 (ONE CODEX)

Palm - leaf : 39 x 3.5 c.m. Foll. 40
Lines 6 on a page.

**COMPLETE**

## R. 8689
## நீதி நூல்
## NITINUL

Palm - leaf : 39 x 3.5 c.m. Foll. 13
Lines 6 on a page.
Extent .150 granthas

**INCOMPLETE**

Stray stanzas teach morals to life.

**தொடக்கம்**

"கருதுங் கனியும் அமுர்தமும் கருதி மதவிரதம்
பணியும் குளவணங்கே நஞ்சு விஞ்சு சடைமருதம்
பொருந்திய மாவலி வாணன் மருதவெற்பில் எழுதும்
பசுவும் புலியும் ஓரணையில் ஏறியதே.
யெங்கிடத்துமோ யெங்கே நடத்துமோ யெங்கே
இருத்துமோ யென்றறியேன் கங்கைமதி சூடினுன்
தில்லையிலே தோன்றுமென்று நின்றுநடம் ஆடினனே"

முடிவு

"தண்டை அசைய சதங்கை கலகலவென கொடையசைய
மயில்கள் கூத்தாட
எண்டிசைக்கும் முத்தணிந்த மாரி முருகா
எனக்கு மொறுத்தது (வறும்) போ தோடிவாடா"

குறிப்பு : இந்நூல் 'நீதி நூல்' எனும் பெயரினை உடையது. பல பாடல்கள் உள்ளன. தனிப்பாடல்களின் தொகுப்புப் போல உள்ளன. இறைவனைப் பற்றிய பக்தி பாடல்களும் உள்ளன. முற்றுப் பெறவில்லை. எழுதியவர் பெயரோ, எழுதிய காலமோ தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை.

## R. 8690
## தேவாரம்
## DEVARAM

Palm - leaf : Folls. 3
Lines 6 on a page.
Extent. 50 granthas

**INCOMPLETE**

Described under D.No 1130

இந்நூல் டி. 1130 ஆம் எண்ணில் வருணிக்கப்பட்டு இருப்பதைப் போன்றதே. அச்சாகி உள்ளது. முற்றுப்பெறவில்லை

## R. 8691
## அருணாசலப்பதிகம்
## ARUNACHALA PATHIKAM

Palm - Leaf : Foll. 10
Lines 6 on a page.
Extent .200 granthas

**IN COMPLETE**

On Lord Eswara; not the one by Elleppanavalar.

தொடக்கம்

"மச்சரிஷி கூர்மைரிஷி சூதன்வேதன் வருகத்தன் ரிஷியுடனே
வரங்கள் பெற்றோம்

இச்சயமா அருபத்தி நாலுகோடி ரிஷியுடனே யுன்பாதம்
சேவைபெற்றோம்
அச்சமற்ற னாதாக்கள் னந்தஸ்கோடி அணியுண்ணா
மலையெனவே லட்சித்தோர்கள்.
திட்சையுடன் அருணைகிரிச் சிவனே யென்றும் உம்
தரிசினையைக் காண அருள் செய்குவாயே".

**முடிவு**

"செந்திருவைச் சேரலாம் செந்தமிழைப் பாடலா
இந்திரனைப் போல்வாழ்ந்து உண்டிருக்கலாம்
மந்திரம் சேர்வெற்பகத்தை ..........
வேலவற்கு முன்பிருந்த கற்பகத்தைக் கை தொழுதால் (க்கால்)

**குறிப்பு** : இந்நூல் அருணாசலப் பதிகம் என்னும் பெயரினை உடையது. இதன்கண் அருணாசல இறைவனைப் பற்றிய புகழுரைக்கப்படுகின்றது. அருள் வழங்கும் தன்மையும் இடம்கொண்டு இருக்கும் ஊரின் பெருமையும் உரைக்கப்பட்டுள்ளது. அருணாசலப் புராணம் எனும்' எல்லப்பநாவலரின் இலக்கியத்தின்றும் மாறுபட்டுக் காணப்படுகிறது. இதன் இறுதியில் "அருணாசல ஈசுவரர்பேரில் இனும் செய்யுள்" எனும் தலைப்பிட்ட இரண்டு ஒலைகள் உள்ளன. முற்றுப் பெற்றுள்ளது.

## R. 8692
## கருடப்பத்து
## KARUDAPPATHTHU

Palm - leaf : Foll. 3
Lines 6 on a page.
Extent 50 granthas

**COMPLETE**

On the Garuda on which vishnu travels, in ten stanzas. Different from that of by one Namacchivaya Navalar.

**தொடக்கம்**

"பூரணனே திங்கள் பதினாறும்
பொருந்தியதோர் அருகன் பனிரெண்டும் சேர்

காரணனே கருமுகிலடு மேனிசேரும்
கருணைபெரும் அஷ்டாச்சரம் மகிழ்ந்துவாழும்
வாரணனே லட்சுமியோ டெட்டும் சேறும்
மதிமுகம்போல் னின்திலங்கும் மாயா நேயா
ஆரணனே ரகுராமா கெருடன் மீதில்
அன்புடனே யேறிவந் தருள்செய் வாயே"

**முடிவு**

"துளபமணி மார்பழகா சு (து) கத்தைத் தாதா
சுருதியென்னும் மெய்ப்பொருளே வரத்தைத் தாதா
களபகஸ் தூரியனே கடாட்சம் தாதா
கரியமுகில் மேனியனே கருத்தில் வாவா
பழம்பொருளே சிகன்சோதி பாக்கியம் தாதா
உன் பத்தி முத்தி சித்திதரும் பாதம் தாதா
அளவிலா மெய்ப்பொருளே கெருடன் மீதில்
அன்புடனே யேறிவந்து அருள்செய் வாயே"

**குறிப்பு** : இந்நூல் 'கருடப்பத்து' என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே, திருமாலின் வாகனமாகிய கருடனைப் பற்றிய செய்திகளைக் கூறப்பட்டுள்ளது. எனக்கு அருள்செய்ய கருடன் மீதேறி வாவா என்று பாடப்பட்டுள்ளது. இதனைப்போன்றே ஆனால் பல பாடபேதங்களுடன் ஆ. 459 ஆம் என்னில் டி பிரிவில் திருமால் தோத்திரம் தலைப்பில்ஒரு சுவடி உள்ளது. அதனைக் கருடன் தோத்திரம் என்று அழைப்பது பிழை என்று விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளது. அது கருடன் தோத்திரம் தான் என்பதனை இச்சுவடி உறுதிப்படுத்துகிறது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. 11 பாடல்கள் உள்ளன. அச்சாகியுள்ள நமச்சிவாய நாவலரின் கருடப்பத்து என்னும் நூலினின்று இது முற்றிலும் வேறுபட்டுள்ளது.

## R. 8693
## வாழாப்பத்து
## VAZHAPPATHTHU

Palm - leaf : Foll. 2.Lines 6 on a page.
Extent. 25 granthas

**COMPLETE**

A single part of the famous Thiruvacakam by Manickavasakar. 10 stanzas are present.

குறிப்பு : இந்நூல் வாழாப்பத்து என்னும் பெயரினை உடையது. திருவாசகத்தில் ஒரு பகுதியாகியது இவ்வாழாப்பத்து. அச்சாகி உள்ளது. இதன்கண் 10 பாடல்கள் உள்ளன. முற்றுப்பெற்று உள்ளது.

## R. 8694 - 96 (One Codex)

Palm - Leaf : 20 x 2.3 c.m. Foll. 38
Lines 4 on a page. Extent .300 granthas

**INCOMPLETE**

## R. 8694

## பாரதம்

## BARATHAM

Folls. 14; Lines 5 on a page.
Extent. 125 granthas

**INCOMPLETE**

Portions of Villi Bharatham

குறிப்பு : இந்நூல் 'பாரதம்' எனும் பெயரினை உடையது. இதன்கண்ணே வில்லிப்புத்தூராரின் பாரதத் தினின்றும் சில குறிப்பிட்ட பாடல்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. கிருட்டிணன் தூதுச் சருக்கத்திலிருந்து, "மைக்கால முகிலும்" எனத் தொடங்கும் பாடலும், "பொன்னாருந்திகிரியினுன்" எனத் தொடங்கும் பாடலும் இடம்பெற்றிருக்கின்றன. மேலும், பதினேழாம் போர்ச்சருக்கத்திலிருந்து, "மைத்துனனுரைத்த' எனத் தொடங்கும் பாடலும், "தருமன் மகன் முதலான" எனத் தொடங்கும் பாடலும் இவைபோன்றே பிறசருக் கங்களிலிருந்து பல பாடல்களும் இடம்பெற்றுள்ளன. பாரதம் விடுத்து வேறு சில பாடல்களும் இடம்பெற்றுள்ளன. முற்றுப்பெறவில்லை.

# R. 8695

## அகப்பொருள்

## AKAPPORUL

Foll. 3; Lines 4 on a page.
Extent 25 granthas

**COMPLETE**

A lover describes the beauty of his lady love in 6 stanzas.

**தொடக்கம்**

"சித்திரை மாசத்திலாவது போல ரெண்டு தெய்வகன்னி
[illegible]ரை மாத்துப் பசும்பொன் நங்கம்போல் ரெண்டு பசுங்கிளியும்
முத்திரை போட்ட ஷத்தனம் போல் ரெண்டையு மூடிக்கொண்டு
நித்திரை போறா(ள்) மூய்யோ பாவியென மிகவும் நெஞ்சே"

**முடிவு**

"அறுகிலி வழறுகி வரவுறுகும்
கரியகுழல் மேனி யி வழகான மயில்சாயல்
பெரியதனம் யிடைசிறுசு பேதையவள் அய்யோ
தெருவிலிவள் நின்றநிலை தெய்வமெனலாமே"

**குறிப்பு** : இந்நூல் 'அகப்பொருள்" எனப்பெயரிடப்பட்டு உள்ளது. இதன்கண் ஆறுபாடல்கள் உள்ளன. தலைவியின் அழகை நினைந்து உருகும் ஆணின் பாடல்களாக உள்ளன. இலக்கிய நயம் மிக்குக் காணப்படுகிறது. அச்சாகியிருப்பதாகத் தெரியவில்லை ஆசிரியர் பெயரும் அறிய முடியவில்லை. முற்றுப் பெறவில்லை.

# R. 8696

## சனி எண்ணெய்க் காப்பு

## SANI ENNAIKAPPU

Foll **21** lines 5 on a page.
Extent. 150 granthas

**COMPLETE**

An interesting manuscript throws light on the ancient teacher - student relationship Mode, poetry. Author unknown.

**தொடக்கம்:**

"சனியெண்ணெய்க் கென்று வந்தோம் தாயே கலியாதே
இனியெண்ணைக் கென்று வந்தோம் யெந்தாயே மாதாவே
சீறார் சனியெண்ணை சிந்தைதனை நான் பாட
காறார் மேனி கணபதியே முன்னடவாய்
ஆயனே ஞான ஆறுமுகனே முன்னடைவாய்"
நாவு தவறாமல் நல்லோசை மங்காமல்
ஏடு தவறாமல் எழுத்தாணி சாயாமல்
வாக்கு தவறாமல் வந்தசொல்லும் தப்பாமல்
வந்துலகு நேரம் வாத்தியார் தானடிப்பார்
அடித்துடையைக் கிள்ளி அடிப்பார் பிரம்பாலே"

**முடிவு**

"நாழி யரிசி நலமாய் வடிக்கரியாய்
மூளி மறுமகளுக்கு முப்பது பொன்னிட்டே
சிகத்தில் கிடைக்காத சீர்கோடி............
அத்தைமக ளிருக்க அசல்க்கடையில்கோண்....
மாம மகளிருக்க மறுகடையில்க் கொண்டே".

பின்னணியுரை :

சார்பரிஹ ஆவணீ மீ. உய(கூ) சா தீ....
திங்கட்கிழமை - யஎ - நாழிகைக்கு - முடி ......

**குறிப்பு** : இந்நூல் "சனி எண்ணெய்க் காப்பு' எனும் பெயரினை உடையது. இதன்கண்ணே, குருகுலவாசக் கல்வி முறையும், பழைய திருமண முறையும் குறிப்பிடப்படுகிறது. இந்நூலகத்தில் சனி எண்ணெய்ப்பாடல் எனும் தலைப்பில் ஆர். 2883 ஆம் எண்ணில் ஒரு சுவடி உள்ளது. பொருளின் இரண்டும் ஒன்றாக இருப்பினும் பாடல்கள் வேறுபடுகின்றன. "சனி எண்ணெய்க் காப்பு" எனும் தலைப்பில் உள்ள வைத்தியச் சுவடியினின்றும் இது வேறுபடுகிறது. அக்கால ஆசிரியருக்கு வழங்கிய - வழங்கவேண்டிய வரிசைப் பொருள்கள் பற்றியும், வாங்கிக்கொள்ள வேண்டிய தண்டனைகள் பற்றியும், சட்டாம்பிள்ளைக் கொடுமைகள் பற்றியும் கூறப்பட்டுள்ளன. இயற்றியவர் பெயரை அறிய முடியவில்லை.

## R. 8697 to 8701 (One Codex)

Palm - leaf : 39.3 c.m. Foll. 51
Lines 3 on a page. Tamil; Old; Injured

**COMPLETE**

## R. 8697
## கல்வியொழுக்கம்
## KALVIYOLUKKAM

Foll. 1 - 4; Lines 5 on a page.
Extent. 40 granthas

**COMPLETE**

In metrical lines, this roars about the principles of education.

**தொடக்கம்**

"கல்வி யொழுக்கம் கருத்துடன் படிக்கச்
செல்வ மிகுத்துச் சிறப்புண் டாமே
சிவமயம்
சரளி
அஞ்சு வயதில் ஆரிய மோத
ஆரிய மோத அறிவுண் டாமே
இனியது கொடுத்து யெழுத்தே....
ஈட்டிய பொருளை யெழு
உடமை....

**முடிவு**

"வெண்டா மரைய தன்னை வணங்கு
வேத முதலாய விரித்துணர்ந் தோது
வையக மெல்லா வணங்குவ தெழுத்தே
வொத்துரைப் போரே பெருமமெழுத் துடையோர்
வோதி யுணர்ந்தாற் கெல்லா வருமே"

பின்னணியுரை

அரகறா அவையா அருளிச் செயத்....

யொழுக்கம் படிச்ச முகிழ்ந்ததுமு .... லப்பூசை....

**குறிப்புரை** : இந்நூல் "கல்வி ஒழுக்கம்' என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே கல்விபற்றிய செய்தியும் அதனுடன் இணைந்த ஒழுக்கம்பற்றிய செய்தியும் கூறப்பட்டுள்ளன கல்வியும் ஒழுக்கமும் கைவரப் பெற்றால் செல்வச் சிறப்புடன் சிறந்து வாழலாம். என்பது போன்ற அறிவுரைகளை அகர வரிசையில் தொடங்கி எழுதப்பட்டுள்ளன. இதன் இறுதியில் சரளி செட்டி என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அஃது ஆசிரியர் பெயர்தானா என்று உறுதியாக அறிய முடியவில்லை முற்றுப் பெற்றுள்ளது.

# R. 8698
# இராமகதை
# RAMAKATHAI

Foll. 5 - 7; lines 5 on a page.
Extent. 30 granthas

**COMPLETE**

A small manuscript furnishes the story of Hanuman's searching of Sita in stanzas.

தொடக்கம்

"மன்றுக ளிடங்கள் தேடி வாணிகன் தெருக்கள் தோறும்
சென்றுமுன் வாறு தழிக்குஞ் சேவுகன் தெருக்கள் தேடி
குன்றுமுன் மடவார் வாழும் குறுந்தெருக் கோடி தேடி
மன்றலத் தரசர் மேவு மன்னவர் தெருக்குள் வந்தான்"

முடிவு

"பணத்துக்கொரு அன்புகொண்டு பாளி(லி)னிலே யதாப்போல
இணக்கஞ்சொன்னேன் யென்புத்தியை எரிஞ்சுபோட்டான் சுவாமி
குணக்கேடுக் குனாய ...... லககமோ கூடாததுபோல
துணிந்துவிட்டுத் தனையிழந்தேன் சுவாமி சித்தம் பாக்கியம்"

**பின்னணியுரை** : இராகவனே

(கு.பு.) இந்நூல் 'இராமகதை' என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே. அநுமான் சீதையைத் தேடி இலங்கையில் அலைந்த செய்தி கூறப்படுகிறது. கம்பரது இராமகதையை ஒட்டியே அமைந்துள்ளது. நடை எளிமையாக உள்ளது. எழுதியவர் பெயரோ எழுதப்பட்ட காலமோ காணமுடியவில்லை.

## R. 8699

## வெண்ணிலாப் பாட்டு

## VENNILAPPATTU

Foll. 2. Lines 6 on a page.
Extent. 25 granthas

**COMPLETE**

A very small work gives nothing but the songs on moon; the ones already had appeared in Kutralak Kuravanji of Thirukuta rasappa kavirayar

**தொடக்கம் :**

"தண்ணமதுடன் பிறந்தால் வெண்ணிலவே அந்தத்
தண்ணளியை ஏன் மறந்தாய் வெண்ணிலாவே - ஒரு
பெண்ணுடன் பிறந்த துண்டோ வெண்ணிலாவே எந்தன்
பெண்மைகண்டு காயலாமோ வெண்ணிலாவே

**முடிவு**

"கோகனகன் வீறழித்தாய் வெண்ணிலாவே திரி
கூடலிங்கர் முன்பெரியக் காய்வாய் வெண்ணிலாவே"
வேறுதரவு
அஞ்சு குருப்பரியும் வெண்ணிலாவே சுழி
யாக்கையிலே சிக்கினேன் வெண்ணிலாவே
நெஞ்சுநிலை அறிவாய் வெண்ணிலாவே சு (ளி)
நேரத்த () காலரிவாய் வெண்ணிலாவே
மிஞ்சுபுகழ் படைத்த வெண்ணிலாவே"

குறிப்பு : இந்நூல் 'வெண்ணிலாப்பாட்டு' எனும் பெயரினை உடையது. திரி கூடராசப்பக் கவிராயர் இயற்றிய திருக்குற்றாலக் குறவஞ்சி எனும் நூலில் இதிலுள்ள நான்கு பாடல்களும் உள்ளன. இறுதி இரண்டு வரிகள் அதில் தொடர்ந்தாற் போல் காணப்படவில்லை. ஆசிரியர் திரிகூடர்ராசப்பக் கவிராயர்.

## R. 8700

# கருடப்பத்து முதலான பாடல்கள்

# KARUDAPPATHTHU MUDHALANA PADALKAL

Foll. 11 - 33 Lines 5 on a page.
Extent. 225 granthas

**IN COMPLETE**

Stray songs on garuda (eagle) the vehicle of Vishnu.

**தொடக்கம்**

"மைத்துனன் உரைத்த வாய்மை கேட்டய்யன் மனமகிழ்ந்து
அருளினுமலரிள
கைத்தலம் தழுவிக் கண்ணீர்க் கருணைநீராடி
யெத்தினைப் பிறவி பிறக்கினும் எவர்க்குள் யிய ..... மெய்த
முத்தியம் பெறவே முடிவில்றான் றெவர்கும் மூவரில்
ஒருவன் மூர்த்தி. (க)
எந்த... கத்தை எல்லாரு மிருக்கிறையவனே
தந்தை ஒருமை தனக்கேற்ற தடுத்தாட்கொள்
அந்தமாதி யில்லானை அருமைப் பெண்ணா லானவனே
எந்தன் சிரசிலிடை நடுவே..... தே கண்டேனே" (உ)

**முடிவு**

"அந்தரமே தி(து) றந்துபோய் அருளறையில் வீழவோ.. யாண்ட
அந்தமிலா வானந்தம் மணிக்கோடில்லைக் கண்டே
லாமநிதிறவிதும்
தந்தம துரை எல்லாம் மிசை......".

**குறிப்புரை** : இந்நூல், "கருடப்பத்து முதலான பாடல்கள்" எனும் தலைப்பில் உள்ளது. அன்புடனே கருடன் மீது ஏறிவா வா என்ற

அழைக்கும் கருடனைப் பற்றிய பாடல்களும், மைத்துனன் உரைத்த வாய்மை பற்றிய பாடலாகிய வில்லிபாரதபாடலும் இன்னும் பலவும் கலந்து வந்தள்ளன. திருமாலின் பெருமையை எடுத்து உரைக்கும் நூலாக இது காணப்படுகிறது. பல தனிப்பாடல்கள் போன்று காணப்படினும் திருமாலின் பெருமையே பேசப்படுவதால் ஒன்றாக்கப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது. பலநூல்கள் சிதைந்துள்ளன முற்றுப் பெறவில்லை.

## R. 8701

# விநாயகர் முதலியோர் பேரில் பாடல்கள்

# VINAYAKAR MUDALIYOR PERIL PADALKAL

Foll. 34 - 50 Lines 4 on a page.
Extent. 150 granthas

**IN COMPLETE**

Devotional songs on gods vinayaka, Hari, Hara, Lakshmi etc.. by an unknown author.

**தொடக்கம்**

"தந்திமுகக் கடவுளே வந்த தயாபரனே
தையலுமை யீன்றமுந்த தலைவ ராவனே
கந்தனுக்கு முன்பிறந்த காரண முள்ளவனே
காசினி யெல்லாம் புகழும் கரிய குமாரமருகா"

**முடிவு**

வடிவுசெறி மாதவன்றன் மருகா பறாக்கு
வல்ல சுராதனைச் செயித்த வாழ்வே பறாக்கு
கடகமலம் நீல மணிக் கந்தா பறாக்கு
கனகமயி லாளி முரு கையா பறாக்கு"

**குறிப்பு** : இந்நூல், "விநாயகர் முதலியோர் பேரில் பாடலகள்" எனும் தலைப்பில் உள்ளது. இதன்கண், விநாயகரைப் பற்றிய வழிபாட்டுப் பாடல் தொடக்கமாக அமைந்துள்ளது. முருகனைப் பற்றிய பாடலோடு சுவடி முடிகிறது. அரி, சிவன், முதலான பல கடவுள்களும் பாடப்படுகின்றனர். சமயப் பொறையும் கடவுளர்களின் உயர்வு தாழ்வு காட்டாமல் எல்லாரையும் போற்றும் நல்ல உள்ளமும் கவிஞரிடம்

காணப்படுகிறது இதனைப் போன்றே, தெய்வானை, கலைமகள், போன்ற பெண் தெய்வங்களைப் பற்றிய பாடல்களும் காணப் படுகின்றன முற்றுப் பெறவில்லை.

## R. 8702
## பலபாடற்றிரட்டு
## PALAPADALDIRATTU

Palm - leaf : 24 x 2.5 c.m. Folls. 13 Tamil, Old, Injured,
Lines 4 on a page.
Extent. 125 granthas

**COMPLETE**

Stray stanzas on subjects like eternal knowledge, value of education etc. Author, name not incised.

**தொடக்கம்**

"கந்தனெனு முந்தும் கடுவினைகள் கட்டருமெ
கந்தனென..... கந்தனெனப் பூ... க்களும் சேரும் புகழ்சேரும்
கந்தனெ... வரம் நல்கு
ஆறுமுகவனை நாறுமலர்கொடு கூறுமடிய
நெஞ்சிற் கனகல்லு நெகிழந்திடவே
தஞ்சத்தருள் சண்முகனுக் கியல்சேர்
செஞ்சொற்பனு மாலை சிறந்தருளும்
பஞ்சக் கரவானைப் பதம் பணிவோம்"

**முடிவு**

"யாமோதிய கல்வியும் மெய்யறிவும்
தாமேபிற வென்றலைதந் தருள்வாய்
பூமேல்மயல் போல்வருமின் புணர்வீர்
நாமே வீர்நட வீரினியே

**குறிப்பு** : இந்நூல் 'பலபாடல் திரட்டு' எனும் பெயரினை உடையது. இதன்கண் பல கொள்கைகள் போற்றப்படுகின்றன. நிலையாமை பற்றியும், கல்வியறிவு பற்றியும், மெய்யறிவு பற்றியும் நுட்பமான உவமைகளைக் கொண்டு பாடப்பட்டுள்ளன. இயற்றியவர் பெயர் தெரியப்படவில்லை. பெரும்பாலும் ஒடிந்த நிலையிலே உள்ளது.

இதன் இறுதியின் சோபகிருது வருடம் ஆனிமாதம் சண்முகம் செட்டி மகன், கண்ணாயிரம் செட்டி, கண்ணாயிரம் செட்டி குமாரனுமாகிய பழனி செட்டி எடு.... என்று காணப்படுவதைக்கொண்டு ஒன்றும் முழுமையாக உணர்ந்துகொள்ள முடியவில்லை.

## R. 8703
## பாரதக் கதை
## BARATHA KKATHAI

Foll. 30; Lines Tamil, Old, Injured,
Lines 5 on a page
Extent. 450 granthas

**IN COMPLETE**

Story of Aranya Parva (Mahabharath) in 74 stanzas. Ascribed to nobody.

**தொடக்கம் :**

**விருத்தம்**

"ஓங்குரு வாழ்க வென்று முலகெலாம் கலக்கிப்
பாங்குடன் அஞ்சு பேரும் பத்தினி துறோபதையும்
யீங்குள்ள கரும மெல்லாம் யெள்ளள வாசையற்றுத்
தீங்கிது செகமென் றெண்ணித் திரவியில் நடந்த ஞாயம் (க)

**முடிவு**

"ணாதாகீ தாவுந் தன்னகி.... பருமச் சந்திரவிமானமே
பேத வேத வைகுண்டப் பதிபுகழும் கருமங்கள் பார்ப்பர்
யோதவே யொருபத்து முந்தனை யுண்மையாக விருத்தமும்
ஓதவே திருப்பாதமே கெதி ஒன்டிலே னுயிரதன்றிலேன்" (எயமு)
பூர்வத்தரசு ஓட்டிப் பூவுல கனைத்தும் பூட்டி
வேறுசொல் பகையுங் கா......

**குறிப்பு** : இந்நூல் "பாரதக்கதை" என்னும் பெயரினை உடையது. இதன்கண் பாரதத்தில் வரும் கதையில் ஆரணிய பருவக்கதை கூறப்பட்டு இருக்கிறது. பாடல்கள் இலக்கியத்தரம் வாய்ந்து காணப்படுகிறது

வில்லிபாரதத்துடன் தொடர்புடையதாகத் தெரியவில்லை. மேலும் 'நிமிஷம்' போன்ற வார்த்தைகள் எடுத்தாளப்பட்டுள்ளபாடல்கள் உள்ளன. இதனால் இது சற்றுப் பிற்காலத்தில் எழுதப்பட்டதாக இருக்கலாம். ஆசிரியர் பெயர் அறியமுடியவில்லை. மொத்தம் 74 பாடல்கள் உள்ளன. முற்றுப் பெறவில்லை.

## R. 8704 - 8706 One (Codex)

## R. 8704

## சச்சிதானந்த மாலை

## SACHIDANANDA MALAI

Foll. 14; Lines 5 on a page.
Extent. 150 granthas

**IN COMPLETE**

Same work as the described under D. No. 7484.

குறிப்பு : இந்நூல் 'சச்சிதானந்தமாலை' என்னும் பெயரினை உடையது. டி. எண். 1484 ஆம் எண்ணிலுள்ள சுவடியைப் போன்றதே. முற்றுப் பெறவில்லை. 10 பாடல்கள் மட்டுமே உள்ளன. இதனைச் சார்ந்து அம்மாவட்டி கருப்பண்ண சாமிபேரில் விருத்தம் என்று சில பாடல்களும், தெண்டபாணி பேரில் விருத்தம் என்று சில பாடல்களும் உள்ளன.

## R. 8705

## குறவஞ்சிப்பாடல்

## KURAVANJIPPADAL

Palm - leaf : Foll. 4
Lines 5 on a page.
Extent. 40 granthas

**IN COMPLETE**

A small portion from the celebrated Kuttralak Kuravanji.

குறிப்பு : இந்நூல் 'குறவஞ்சிப்பாடல்' எனும் தலைப்பில் உள்ளது. இது அச்சாகியுள்ளது. திருக்குற்றாலக் குறவஞ்சி எனும் நூலில் சிங்கனும் சிங்கியும் எதிர்த்து உரையாடல் எனும் பகுதி இந்நூலில் உள்ளது. இறுதியில் வெங்கடாசலபதி பேரில் சில பாடல்கள் உள்ளன.

# R. 8706

# ஊ(ஞ்)சல் பாட்டு

# OOJNAL PATTU

Palm - leaf : Foll. 2
Lines 5 on a page.
Extent. 20 granthas

**INCOMPLETE**

Two folios here speak about one born in Vaisya Community in nice 'Unjal' genre.

**தொடக்கம்** :

"திருவளரு வசிய குலத்தில் த... வ ந்தத்திகள
கெருடக் கொடி படைத்த சீமானீனார்
தருமதாய் வளனெனு வன்றுங் கொமரனைத்
தந்திதனை நிறுத்தியிடைக் கண்ட வேந்தர்
கருதரிய விகடதட கம்பகும்பக் கரிமுகவ
நீறுசனங் காப்புத் தானே (க)

**முடிவு** :

"திருமாலும் கெருடக் கொடியு மாடத்
திகழ்சடையோன் தருகேசற் கொடியுமாட
முருகேசர் தருகொளிக் கொடியு மாட
மோக மதன் தருமீனக் கொடியுமாட
மருவன்று தோன்றியந்த மாலை யாட
மாது முந்தன் வரைபுயத்தி மருங்கிலாட
அருமைபெறு வசியகுல ஆடியூஞ்சல்
ஆயிரவர் கண் மணி ஆடினூஞ்சல்".

**குறிப்பு** : இந்நூல் "ஊஞ்சல் பாட்டு' எனும் பெயரின் உடையது. வசிய குலத் தோன்றலின் ஊசல் சிறப்பினைப் பாராட்டுகிறது. தெய்வங்களை இணைத்துப் பாடியுள்ளார். இதனைச் சார்ந்து வெங்கடாசலபதி பேரிலும் சில பாடல்கள் பாடப்பட்டுள்ளன. முற்றுப் பெறவில்லை. இயற்றியவர் பெயரும் அறியமுடியவில்லை.

## R. 8707
## கருவையந்தாதி
## KARUVAIYANTHADI

Palm - leaf : 31 x 2.5 c.m. Folls. 27
Lines 4 on a page.
Extent. 125 granthas

**INCOMPLETE**

Same work, described under D No. 245.

குறிப்பு : இந்நூல் டி. 245 ஆம் எண்ணில் வருணிக்கப்பட்டிருக்கும் வடியைப் போன்றது. இதில் முற்றுப் பெறவில்லை. 49 பாடல்களே உள்ளன.

## R. 8708 - 8712 (One Codex)

Palm - leaf : 34 x 2.5 Foll. 21
Lines 6 on a page. Tamil, Old, Injured

## R. 8708
## இராம நாடகம்
## RAMA NATAKAM

Foll. 2 lines 6 on a page.
Extent. 25 granthas

**INCOMPLETE**

Dramatic passages in poetry depict the story of Hanuman's efforts to find Sita. Author, unknown

**தொடக்கம்**

"மன்றுக ளிடங்கள்தேடி........... வணிகன் தெருக்கள் தேடிச்
சென்றுமுன் பொருதழிக்குஞ் சேவுகன் தெருக்கள்தேடி
குன்றுமுன் மடவார் வாழுங் குருந்தெருக்கோடி தேடி
மன்றலத் தரசர் மேவு மன்னவர் தெருக்குள் வந்தான்"

முடிவு

"அழகு நல்ல அழகு தானய்ய - இவள் கண்ணிலே
அணைந்த பூளை வழிந்து சாயிதே
கொளுநு கொளெனவே கொடுவாய் வழியிதே - சீச்சி இவள்
குலக்கொடி சீதை தானுமல்லவே
கொண்டைமயிர் குலைந்து கிடக்குதே - வண்டோதரிக்
கொடுவாய் வழிந்து திரிந்து கிடக்குதே
கண்டு கண்ணால் பார் ... னனுமந்தன் - இராவணண்
கழுத்தறுக்கவே கருதி நின்றனன்"

குறிப்பு : இந்நூல் "இராமநாடகம்' எனும் பெயரினை உடையது. இதன்கண் சீதையைத் தேடி அனுமன் இலங்கையில் திரிந்ததையும், மண்டோதரியைக் கண்டு கூறியமையும் கூறப்பட்டிருக்கின்றன இராமநாடகக் கீர்த்தனையினின்றும் மாறுபட்டுள்ளது

## R. 8709

## மாகாளியம்மன் பேரில் பந்தடி
## MAKALIYAMMAN PERIL PANTHADI

Foll. 4; Lines 6 on a page.
Extent. 75 granthas

**IN COMPLETE**

A genre called pandhadi (beating the ball) sings here the glory of goddess Kali who showered graces on Kavi Kalidasa in Ujjain.

**தொடக்கம்**

"பூரண கும்ப ..... ஷத்த த்தியருள் சுரைய
பொருது சூலக் கம .... த்தியே
வாரண முகன் குகனைப் பயின்ற
மாரியாள் கேவு மாரியாள்
காரணி யுனைப் பணிய செல்வமும்
கதித்த கல்வியும் பெருகவே
தாரணி தனி லுச்சினிமாகாளி
தழைக்கவொரு பந்தடிப்பாளே" (க)

முடிவு

"வாழி வாழி யிந்திரன் முதல்
 வானுல கோர்களும் வாழியே
ஆழி சூழ் மாபட்டிவாள் கருப்
 பண்ண தேவனும் வாழியே
ஏழிரண்டு உலகோரும் வாழியினது
 .... த்தமிழ் வாழியே
கா ............... த்திரகாளி யுச்சணி
 காளி யீசுவரி வாழியே"

**குறிப்பு** : இந்நூல் "மாகாளியம்மன் பேரில் பந்தடி' எனும் பெயரினை உடையது. இதன்கண் உச்சயினியில் காளிதாசனுக்கு அருள் வழங்கிய மாகாளியின் பெருமை பாடப்பட்டுள்ளது. அவ்வம்மன் பேரில் பந்தடிப்பாடல்கள் பாடப்பட்டுள்ளன. எழுதியவர் பெயர் தெரியவில்லை. முற்றுப்பெறவில்லை. இதனிறுதியில் இரண்டு ஏடுகள் திருக்குற்றாலக் குறவஞ்சியில் வசந்த சவுந்தரி பந்தாடிய பாடல்களோடு காணப்படுகின்றன.

## R. 8710
## குழலூது படலம்
## KUZHALUDHU PATALAM

Foll. 6 - 11. Lines 6 on a page.
Extent. 100 granthas

**INCOMPLETE**

Already printed.

Similar to that flute playing cant in Bhagavatam. Only songs are available.

**குறிப்பு** : இந்நூல் "குழலூது படலம்" என்னும் பெயரினை உடையது. இது பாகவத புராணத்தில் உள்ள குழலூது படலத்தினை ஒத்துக் காணப்படுகிறது. முதல் ஏழுபாட்டல்கள் மட்டுமே (பதவுரையுடன்) காணப்படுகின்றன. முற்றுப் பெறவில்லை. நூலின் இறுதியில் ஆண்டியப்பன் என்றபெயர் காணப்படுகிறது.

# R. 8711

# பாரதம்

# BARATHAM

Foll. 12 - 17. Lines 6 on a page.
Extent. 75 granthas

**INCOMPLETE**

Few songs from Bharatham of Villi.

**குறிப்பு** : இந்நூல், "பாரதம்" எனும் பெயரினை உடையது. இதன்கண்ணே, வில்லிபாரதத்தில் அணிவகுப்புச் சருக்கத்தின் இறுதி நான்கு பாடல்களும் வீட்டும பருவத்தின் முதற்போர் சருக்கத்தில் ஆறுபாடல்களும் இடம்பெற்றுள்ளன. அச்சாகி உள்ளது.

# R. 8712

# குற்றாலக் குறவஞ்சி

# KURRALA KURAVANJI

Foll. 18 - 20. Lines 5 on a page.
Extent 50 granthas

**INCOMPLETE**

Only songs from the famous Kuttralak Kuravanji.

**குறிப்பு** : இது, "குற்றாலக் குறவஞ்சி" எனும் பெயரினை உடையது. இதன் கண் மண திரிகூட இராசப்பக் கவிராயர் இயற்றிய திருக்குற்றாலக் குறவஞ்சி எனும் நூலிலுள்ள, வசந்தவல்லி, குறத்தியைக் கண்டு மலைவளம் கேட்பதும், குறத்தி மலைவளம் கூறலும் ஆகிய பகுதிகளிலுள்ள 7 பாடல்கள் இதில் உள்ளன. அச்சாகி உள்ளது

# R. 8713

# சிவ வாக்கியம்

# SIVA VAKKIYAM

Palm leaf ; Lines 4 on a page.
Folls. 61 Tamil, Old, Injured.

தொடக்கம்

"விசுவா மித்திரரும் வசிட்டர் மாமுனியும் நம்மைப்
பிறவிக்கு வாராமல் (ல) ரட்சிக்க வே
ஞானமென்கின்ற பாதார விந்தத்தை தமக்கு
நீலகண்ட சுவாமியார் அனுக்கிரகம் பன்னி
னத்தோம் சிவ வாக்கியம் அனுக்கிகரகம்
பண்ணினார். அதததோம் சிவாக்கியம்குரு
சம்பிரதாயம் அதததோம் சிவாக்கியத்து
விலாம் ருக்கு, எசுரு, சாமம், அதர்வணம்
என்கின்ற நான்கு வேதமும்....

முடிவு :

"சுத்தப் பிரசாத்தில்லெடுங்கும் சுத்தப்பிரசாதம் ஆவிலொடுங்கும் ஆவிலொடுங்குமென்று குருநாதன் சீஷனுக்குப் பிண்டமும் பிரம்மாண்டமும் சகலமும் நஷ்டட......

குறிப்பு : இந்நூல், 'சிவ வாக்கியம்' எனும் பெயரினை உடையது. இதன் கண்ணே தத்துவக் கருத்துகள் கூறப்பட்டுள்ளன. இந்நூலகத்தில் இதனைப் போன்ற தலைப்புடைய பிற சுவடிகள் இருப்பினும் பொருளில் வேறுபாடு உள்ளது. கூறப்பட்டுள்ள முறையாலும் வேறுபாடு உள்ளது. முற்றுப் பெறவில்லை.

## R. 8714

## அருணகிரியீசர் துதி

## ARUNAGIRIYIESARTHUDHI

Palm leaf : 34.5 x 2 c.m. Foll. 21
Lines 4 on a page. Extent. 85 granthas

**IN COMPLETE, PRINTED**

Eswara of Thiruvannamalai has been extolled here in 41 songs.

குறிப்பு : இந்நூல் "அருணகிரியீசர் துதி' என்னும் பெயரினை உடையது. இதன்கண். திருவண்ணாமலையில் கோயில் கொண்டிருக்கும் இறைவனின் பெருமை பாடப்பட்டுள்ளது. அச்சாகி உள்ளது. தஞ்சை சரசுவதி மகால் நிறுவனத்தின் அருணகிரி அந்தாதி எனும் தலைப்பில் இதனை அச்சிட்டு உள்ளனர். மொத்தம் 41 பாடல்கள் மட்டுமே உள்ளன.

## R. 8715
## திருமால் பதிகம்
## THIRUMAL PATHIKAM

Palm leaf : 38 x 2 c.m. Foll. 30
Lines 4 on a page.
Extent. 250 granthas

**INCOMPLETE**

Extols Vishnu in poetry medium. Author, unknown.

**தொடக்கம்**

"திருவினுடன் வசுந்தரையும் நீளையென்று
செழுங்கொடியார் தேவியனாய்ச் சிறந்து போற்ற
பருமணிமேற் பிற(ள) பண மாயிரங்கள் கோடி பருதியொழி
எழுமரவ கப்பாயல் மீதெழு முகில்மேல் திகழ்கமலக்
காடுபூத்தக்கவி
னுறவால் வளைநோகி கதை வாள் சாரங்கம் மருவ .........

**முடிவு :**

"இன்றும் இளந்திடர், தழாந்த சோதியாய் சுருதியாலும் சாங்கியஞ் தனினுந் தோன்றா நாதனாய நழினமாதி நாயகனாகி மெய்யாம் நீதியாய் நெறியாய் நிறை நிமலனை வாழ்த்து நெஞ்சே. நனவயகல சிந்தையொடு நற்கனி யெல்லாம் வைத்து சுவையுற்று காதியென்ன தொழுதினம் மெய்தி நின்ற சவணிக்களம்"

**குறிப்பு** : இந்நூல் 'திருமால் பதிகம்' என்னும் பெயரினை உடையது இதன்கண்ணே, திருமாலின் பெருமைகள் பேசப்படுகின்றன புராணக் கதைகளும் இடம் பெற்றுள்ளன. முற்றுப் பெறவில்லை.

## R. 8716 - 8717 One Codex

Palm leaf : 35 x 2.5 c.m. Foll. 31
Lines 6 on a page. Tamil, Old, Injured

## R. 8716
## பல்லி காதல்
## PALLI KATHAL

Foll. 1 Lines 2 on a page. Extent. 3 granthas

**COMPLETE**

A branch of astrology wherein the significance for sounds of lizard are told.

குறிப்பு : இது "பல்லி காதல்" எனும் பெயரினை உடையது. இது பல்லி சாஸ்திரம் என்றும், கௌளிக் காதல் என்னும் பெயர்களாலும் அழைக்கப்பட்ட சுவடிகள் உள்ளன. பல்லியின் குரல் எண்ணிக்கைக்கு இச்சுவடியில் பலன் கூறப்பட்டுள்ளது.

## R. 8717
## விவேக சிந்தாமணி
## VIVEKA CHINTAMANI

Palm leaf : 35 x 2.5 c.m. Folls. 8 - 31
Lines 6 on a page.
Extent. 450 granthas

**COMPLETE**

Same work as described under D. No. 199.

குறிப்பு :இந்நூல் டி. 199 ஆம் எண்ணில் குறிப்பிடப்பட்டிருக்கும் சுவடிஎய்ப் போன்றதே. இது முற்றுப் பெற்று உள்ளது. அதன் குறிப்பும் காண்க... 136 பாடல்கள் உள்ளன.

## R. 8718
## சடாட்சரத்துதி
## SATATCHARATHUDHI

Palm leaf : 26 x 3 c.m. Foll. 61
Lines 5 on a page. Tamil, Old, Injured
Extent 50 granthas

**IN COMPLETE**

Tamil Songs of archana to worship Arumuga (Murugan). Author, not known.

**தொடக்கம்**

"சாமய னல்லூர் சாளுவ நல்லூர் சமையநல்லூர் சாவனையூர்
சோமனூர் சோலாப்பூர் சிங்கநல்லூர் சினறிகலுடை ...... ம்புதூர்
தாமே னாயக்கனூர் புங்கமுத்தூர் கன்ன னாகனார் கடப்பூர்
மாமண்டூர் மணலூர் வரதப்ப னாகனார் மானூர் (க)

மாணிக்கச் செங்குன்றாய் வழரம் புலியா ரணிந்த
ஆணிப்பொற் குன்றம் அமர்ந்தாய் கடாட்சரனே (க)
தித்தித்தி என்றாடும் தில்லைச் சிற்றம்பலம்போல
நெற்றிக்கண் பேரொளி நின்றாய் சடாட்சரனே" (உ)

**முடிவு**

"காமாக்கினி விலையுள் கண்டு மலர்ப் பிண்டம்
சீமாக்கினக் கிந்திணங்காய் சடாட்சரணே (நயஉ)
பவக்கியான பூதரஞ்சேர் பாய்மதவா மனத்தைச் சிவக்கியானங்
கோபம்விழச் செய்வாய் சடாட்சரனே"

குறிப்பு : இந்நூல், "சடாட்சரத் துதி" எனும் பெயரினை உடையது. இதன் கண்ணே, 'சரவணபவ' எனும் ஆறெழுத்துக்களை மந்திரமாக உடைய ஆறுமுகனை வணங்கிப்பாடும் வழிபாட்டுப் பாடல்கள் உள்ளன. தமிழில் அர்ச்சனை செய்வதற்குரிய மந்திரங்களா அவை உள்ளன. 33 பாடல்கள் உள்ளன. ஓசை நயமும் கருத்தும் சிறப்பாக உள்ளது. இது சடாட்சர ஆனந்தக் களிப்பு கோவை ஆசிய நூல்களினின்றும் வேறுபட்டுள்ளது.

## R.8719

## பலவகை மந்திரங்கள்
## PALAVAKAI MANDHIRANGAL

Palm-leaf : 19 x 2 c.m. Foll. 48 Lines 6 on a page.
Tamil, Old, Injured
Extent 500 granthas.

**IN COMPLETE**

Full of manthras to be used at times of miserydue to diseases; A part of indigenous medical science.

**தொடக்கம்**

**நாலாம் நாள்**

"வானதியென்னும் பேயனையும் தின்றான்பபல
விகாரம் .............ணனுமமிதற்குப் பேலிவணகயிலையி எண்ன ன
தடவி....... லைக்கரியு நெய்யும் பாலுஞ் சோறும் யிதுவெல்லாம்
பா............ ரவிக் காளி கோட்டத்தில் வைக்க(லு)யிதற்கு
மந்திரம் - பங்க ........ மெகாளி காரணி அடியேன்
தனமறப்பொருச்சங் கருளைக்கையா............"

**முடிவு**

............... ஈண்டில் வாரகி யென்னும் பேயனைமதின்
............. வதும்பும் முலையிண்ணாது யரிகரவா யரு
மூழியாது குடித்த பாலெடுக்கும் பாலக ............... துயிதற்குப்
பேலி அஞ்சுவர்ணசசெ...... பாரிக்கரியும்புது
அகிலிலிட்டு லுருகு ........ த வைக்கவும் அஞ்சுகாசுத்துணையிச்
சுறதிப ..................தற்குப்பு பூவம்பசு...... ரியருமை
............. பொடிலு............சுளகேந்திரம்".

**குறிப்பு:** இந்நூல், 'பலவகை மந்திரங்கள்' எனும் பெயரால் அழைக்கப்படுகிறது. இதனுள் பலவகைக் குழந்தை நோய்களைத் தீர்ப்பதற்கு மந்திரங்களும் வைத்தியங்களும் கூறப்பட்டுள்ளன. முதல் மூன்று ஓலைகள் காணப்படவில்லை. 4வது ஓலையிலிருந்துதான் காணப்படுகின்றன. நான்காம் நாள் முதல் 29ஆம் நாள் முடிய வரும் நோய்களுக்கும் பின்னர் ஒவ்வொருமாதமாகவும் ஆண்டாகவும் குறிப்பிட்டு 11ஆம் ஆண்டுவரை தரவேண்டிய மருந்துகளும், கூறவேண்டிய மந்திரங்களும் உள்ளன. முற்றுப் பெறவில்லை. ஆசிரியர் பெயரும் அறிய முடியவில்லை.

## R. 8720

# கண்டிகதிர்காம வேலன் மாலை

# KANDI KATHIRKAMA VELAN MALAI

Palm-leaf : 36 x 2.5 c.m. Foll. 15 Lines 4 on a page.
Tamil, Old, Good
Extent 75 granthas.

**INCOMPLETE**

Same work as described under R.No. 5331

குறிப்பு : இந்நூல், ஆர்.எண். 5331 இல் விளக்கப்பட்டிருக்கும் சுவடியைப் போன்றது. இதில் 28 பாடல்கள் உள்ளன. அதன்குறிப்பும் காண்க.

த. 8721

## R. 8721

# உள்ளமுடையான் சோதிட நூல்

# ULLAMUDAIYAN SODHIDANUL

Palm-leaf : 32.5 x 3 c.m. Foll. 16; Lines 6 on a page.
Tamil, Old, Injured

**INCOMPLETE**

Full of astrological descriptions about sections like vastu, fullmoon etc.

**தொடக்கம்**

"பருத்த பகல் நாளிகையைப் யாதிசெய்து
பாதிதனை...... ளைற்பெருக்கப்பற்றி ..........
நிகழ்ந்த வடியளந்து வைத்தாய் பாதச்சாய்கை
நீக்கியதன் மேலேழுங் கூட்டித்
திகழ்ந்த முதற் றோகையதனை யிதனுக்கீயச்
சிறந்தபலக் சென்றநாளிகையாம் பின்பெற
புகழ்ந்திரவி படுங்கடிகை யிவை தானென்று
பொலங்குழையாய் பகற்கடிகை பொருந்திச் சொல்லே"

முடிவு

"ஆதிரை பரணியாரால் அகிலியம் பூரம் கேட்டை
தீதுறு விசாகம் சோதி சித்திரை மகமீ றாறும்
மாதனம் கொண்டார் தாரார் வழிநடைப்பட்டார் மீளார்
பாயிடைப் படுத்தார் தேய்வார் பாம்பின்வாய்த் தேரைதானே
அருக்கன் மரிக்கும் புகாமணங் காட்டும்.
அருணன் மக்கள் பெருக்கமதி சிறிப்பாக்கும்
சனிசினம் பேசவைக்கும்.
திருத்திய அந்தணன் சேலையும்சாத்தும் செவ்வாய்
செறிச் செய்திருக்கும் கோரையிரண்டரை நாழிகை ராப்பகல்க்கே"

**குறிப்பு** : இந்நூல் "உள்ளமுடையோன் சோதிடநூல்" என்னும் பெயரினை உடையது. இதன்கண்ணே சோதிடம் பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. சாஸ்திரி விவர அட்டவணையிலிருக்கும் உள்ளமுடையான் சுவடியினின்லும் வேறுபட்டுள்ளது. இதனுள், உள்ளமுடையான் பகல் நாழிகை அறிதல், வாஸ்த்து நிலையறியும் மனநூல், வாஸ்த்து தெய்வம் எழுந்தருளியிருக்கும் நேரம் அறியும் நூல், மனைநூல், குழிகொள்ளும் விபரம், மனையெடுக்கும்போது குறி அறியும் விபரம், வாஸ்த்து எனப்படும் மனைதெய்வத்தை தப்பிமனை எழுப்பினால் ஏற்படும் விளைவுகள், மனை பெயர்த்துக் கட்டிடும்போது கவனிக்கவேண்டியவை, திரட்சிநூல் விவரம், நால்வகைத் திரட்சிவகை விவரம், கருவோட்டக் குறி, அம்மாவாசை வரும் குறி, கௌரிபஞ்சாங்கம், ஆரூடக் காதல், ஆந்தையின் குரலுக்கு உரியகுறிகள், ஆகிய தலைப்புகள் உள்ளன. முற்றுப்பெறவில்லை. ஆசிரியர் பெயரால் முதல் தலைப்பில் உள்ள நூல் காணப்படுகிறது.

## R. 8722

## விடுகதைகள்

## VIDUKATHAIKAL

Palm-Peaf : 41.5 x 3 c.m. Foll. 18; Lines 6 on a page.
Tamil, Old, Injured
Extent 325 granthas.

**INCOMPLETE**

17 riddles in metrical lines sc interestingly composed.

